ஸ்ரீ குருப்யோ நமஹ

# விவேக சூடாமணி

=====================================

## ஓர் அறிமுகம்:-

=============

விவேகசூடாமணி அத்வைத வேதாந்தத்தை நிலை நிறுத்திய ஆதிசங்கரரால், கி.பி., 8 - ஆம் நூற்றாண்டில் சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்டது. இது அத்வைத வேதாந்த தத்துவத்தை விளக்க வந்த நூலாகும். இந்நூலில் அத்வைத வேதாந்த தத்துவங்களை எளிதாக விளக்குவதால் இதனை பிரகரண கிரந்தம் என்று வடமொழியில் அழைப்பர்.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருளின் மெய்ப் பொருளை ஆராய்ந்தறியும் அறிவானது விவேகம் எனப்படும். தலையில் அணியும் இரத்தினம் சூடாமணி, இது எல்லா நகைகளிலும் சிறந்தது. அது போல விவேகத்தைப் புகட்டும் (உண்மை அறிவை கொடுக்கும்) நூல்களுள் இந்நூல் தலை சிறந்ததாய் விளங்குவதால் இதற்கு விவேகசூடாமணி எனும் பெயர் பொருந்துவதாயிற்று.

சங்கரர் இந்நூலை, தனது இஷ்ட தெய்வமான கோவிந்தனையும் மேலும் தனது குருவான

கோவிந்த பகவத் பாதரையும் வழிபட்டு பிரகரண கிரந்தங்களில் முதல் நூலாக துவக்குவதாக அமைந்துள்ளது.

விவேகசூடாமணி நூல் 580 சுலோகங்களுடன் கூடியது. இந்த தொகுப்பு நூலில் விலை மதிப்பற்றதாக சிதறிக் கிடக்கும் பல நவ ரத்தினக் கற்களில் கைக்கு கிடைத்த சில கற்களை மட்டும் எடுத்து மாலையாக கோர்ப்பது போன்று, இந்த புத்தகத்தில் ஆதிசங்கரரின் ஆத்ம தத்துவத்தில் சில செயுள்களை மட்டும் தொகுத்து 101 சுலோகங்களாக எடுத்து மாலையாக கோர்த்து படிக்கின்றவர்களுக்கு அறிவு மாலையாக அணிவித்து மகிழ்கின்றோம்.

இந்த நூலை படிப்படியாக அறிந்துய்வதற்கு வழியினை பல எடுத்துக்காட்டுகளுடன் ஒரு சீடனுக்கும் குருவானவர் போதிக்கும் பாணியில் உரையாடல்களாகவே கொடுக்கப்பட்டுள்ளது.

குருவானவர் ஒரு சீடனை படிப்படியாக பிரம்மத்தை நோக்கி அழைத்துச் செல்லும் வழி முறைகளை விளக்கமாக இந்நூல் எடுத்துரைக்கிறது.

## மங்களாசரணம்

**1.ஸர்வ வேதாந்த ஸித்தாந்த கோசரம் தமகோசரம் |**
**கோவிந்தம் பரமானந்தம் ஸத்குரும் ப்ரணதோஸ்ம்யஹம் ||**

**விளக்கம்**

வாக்குக்கும், மனதுக்கும் எட்டாதவரும் எல்லா வேதங்களின் முடிவான சித்தாந்த வாக்கியங்களிலிருந்து தெளிந்த புத்தியால் அறியக்கூடியவரும், சிறந்த ஆனந்த ரூபியும், நல்ல குருவும் ஆகிய கோவிந்தரை நான் வணங்குகிறேன்.

மேற்கண்ட சுலோகத்தில் கோவிந்தம் என்ற சொல் பகவானையும், ஸ்ரீசங்கரரின் குருவான கோவிந்த பகவத்பாதரை ஒருங்கே குறிப்பதாகும்.

குருவணக்கமும், இறைவணக்கமும் ஆகிய இந்த செய்யுள் இந்த நூலில் மங்களாசரணமாக அமைகின்றது.

## பிரம்ம நிஷ்டையின் பெருமை

===========================

**2. ஜந்துனாம் நரஜன்ம துர்லபமத: பும்ஸ்த்வம் ததோ விப்ரதா**
**தஸ்மாத் வைதிக தர்ம மார்க்க பரதா வித்வத்வம் அஸ்மாத்பரம் |**
**ஆத்மானாத்ம விவேசனம் ஸ்வனுபவோ ப்ரஹ்மாத்மனா**
**ஸம்ஸ்திதி: முக்தி: நோ சதகோடி ஜன்ம ஸுக்ருதை: புண்யை:**
**விநா லப்யதே ||**

**விளக்கம்**

ஜீவராசிகளில் மானிடப் பிறவி அடைவது அரிது. அதிலும் ஆண் பிறவி கிடைப்பது அதைக்காட்டிலும் அரிது. இதில் பிரம்மத்தை அறிந்த பிராம்மண ஜன்மத்தில் வைதிக தர்ம வழியைப் பின்பற்றி நடத்தல் அதனினும் அரிது. இதிலும் வேதத்தின் உட்பொருளை உணர்ந்து ஆத்மா, அனாத்மாவை பிரித்தறியும் விவேகம் வாய்ப்பது மிக மிகஅரிது. அடுத்து ஆத்ம நிலையில் பிரம்மமாக நிலைப் பெற்றிருத்தலாகிய முக்தி என்ற நிலையை அடைவது அரிது அரிது!

இவைகளெல்லாம் வாய்க்க பலகோடி பிறவிகளில் செய்த புண்ணியம் இல்லாமல் அடையவே இயலாது என இங்கு விளக்கப்பட்டுள்ளது.

3. **துர்லபம் த்ரயமேவைதத் தேவானுக்ரஹ ஹேதுகம் |**
**மனுஷ்யத்வம் முமுக்ஷுத்வம் மஹாபுருஷ ஸம்ச்ரய: ||**

**விளக்கம்**

மனிதப்பிறவி, முக்தியில் ஆசை, மஹா புருஷர்களை நாடி அடைதல் ஆகிய இம்மூன்றும் அடைதற்கரியது. இது தெய்வத்தின் அருள் காரணமாகத்தான் அடைய இயலும்.

***ஆயிரம் மனிதர்களில் ஒருவன் சித்திபெற முயற்சிக்கிறான். முயற்சி செய்யும் சித்தர்களுள் யாரோ ஒருவன் மட்டும்தான் என்னை உண்மையில் உணர்கிறான். - (**பகவத்கீதை 7.3)

**4. லப்த்வா கதஞ்சித் நரஜன்ம துர்லபம்**
**தத்ராபி பும்ஸ்த்வம் ச்ருதிபார தர்சனம் |**
**யஸ்த்வாத்ம முக்தௌ ந யதேத மூடதீ:**
**ஸ ஹ்யாத்மஹா ஸ்வம் விநிஹந்தி அஸத்க்ரஹாத் ||**

**<u>விளக்கம்</u>**

எப்படியோ அடைதற்கரிய இந்த மானிடப்பிறவியை அடைந்தும், அதிலும் ஆண்மையையும், வேதத்தின் உட்பொருளையும், அறியும் அறிவையும் அடைந்தும் எவனொருவன் தன்னுடைய முக்தியின் பொருட்டு முயற்சி செய்யவில்லையோ அந்த புத்தி மழுங்கியவன் தற்கொலை செய்து கொண்டவனாகிறான்.

ஏனெனில், பொய்யை கைக்கொண்டமையால் உண்மையாகிய தன்னை அழித்து விடுகின்றான்.

இறந்து போனவனின் உடலில் உணர்ச்சி இல்லாதது போல, அஞ்ஞானியிடம் ஆத்மா இருக்கும் அடையாளம் செயலில் காணப்படுவதில்லை.

**5. இத: கோ ந்வஸ்தி மூடாத்மா யஸ்து ஸ்வார்த்தே ப்ரமாத்யதி|**
**துர்லபம் மானுஷம் தேஹம் ப்ராப்ய தத்ராபி பௌருஷம் ||**

**<u>விளக்கம்</u>**

அடைதற்கரிய மானிட உடலையும், அதிலும் ஆண் பிறவி கிடைத்தும் எவனொருவன் தனது நன்மையில் கவனமின்றி இருக்கிறானோ அவனை விட முட்டாள் யார்தான் இருக்க முடியும்?

**6. வதந்து சாஸ்த்ராணி யஜந்து தேவான் குர்வந்து கர்மாணி பஜந்து தேவதா: |**
**ஆத்மைக்ய போதேன விநா விமுக்தி: ந ஸித்யதி ப்ரஹ்ம சதாந்தரேபி ||**

**விளக்கம்**

ஒருவன் சாஸ்திரங்களை பேசட்டும், தேவர்களை குறித்து யாகங்களைச் செய்யட்டும், கர்மங்களை செய்யட்டும், தேவதைகளை வழிபடட்டும். ஆனால் ஆத்மா ஒன்றுதான் என்ற அறிவின் விழிப்பு இல்லாமல் பிரம்மாவின் நூறு வயது முடிவிலும் கூட விடுதலையானது அவனுக்கு கிடைக்காது.

## நான்முக பிரம்மாவின் நூறு வயது:-
## ===============================

நம்முடைய ஒரு வருட காலம் தேவர்களுக்கு ஒரு நாள். இதுபோல அவர்கள் வருடத்தில் 12000 வருடம் கொண்டது ஒரு சதுர்யுகம். ஆயிரம் சதுர்யுகம் பிரம்மாவின் ஒரு பகல், ஆயிரம் சதுர்யுகம் பிரம்மாவின் ஒரு இரவு. அப்படி நூறு வருடம் (சதம்) வயது பிரம்மாவின் ஆயுள்.

**7. அம்ருதத்வஸ்ய நாசாஸ்தி வித்தேன இத்யேவ ஹி ச்ருதி: |**
**ப்ரவீதி கர்மணோ முக்தே: அஹேதுத்வம் ஸ்புடம் யத: ||**

__விளக்கம்__

பொருளைக்கொண்டு சாகாத சந்தோச நிலையாகிய மோஷத்திற்கு ஆசைப்படவும் இயலாது என்றே வேதம் கூறுகின்றது.

இக் காரணத்தால் முக்தியை அடைய கர்மம் காரணமாகாது என்று தெளிவாகின்றது.

எவ்வளவுதான் செல்வம் ஒருவனிடத்தில் இருந்தாலும் அந்த செல்வத்தை வைத்துக்கொண்டு மரணமில்லாப் பெரு நிலையை அடைய முடியாது என்பது பொருள்.

## ஞானமடைய வழி
================

**8. அதோ விமுக்த்யை ப்ரயதேத வித்வான் ஸந்யஸ்த பாஹ்யார்த்த ஸீக: ஸ்ப்ருஹ: ஸன் |**
**ஸந்தம் மஹாந்தம் ஸமுபேத்ய தேசிகம் தேனோபதிஷ்டார்த்த ஸமாஹிதாத்மா ||**

__விளக்கம்__

எவனொருவன் வெளிப்பொருட்களில் மீது உள்ள சுகத்தில் ஆசையை துறந்தவனாய், சாதுவும், மஹாத்மாக்களுமான குருவை முறைப்படி அடைந்து அவரால் உபதேசிக்கப் பெற்ற விஷயத்தில் (ஞானத்தில்) சித்தத்தை நிலை நிறுத்தியவனாய் முக்திக்கு நன் முயற்சி செய்கின்றானோ அவனே அறிவாளி ஆவான்.

**9. உத்தரேதாத்மனாத்மானம் மக்னம் ஸம்ஸார வாரிதௌ |**
**யோகாரூட்த்வமாஸாத்ய ஸம்யக் தர்சன நிஷ்ட்டயா ||**

<u>**விளக்கம்**</u>

தெளிவான விவேகத்துடன் இடைவிடாது ஆத்ம தியானம் செய்து யோகத்தில் ஊன்றி யோகாரூடன் என்ற நிலையை அடைந்து பிறவிக்கடலை கடந்து தன்னை தன்னாலேயே ஒருவன் உயர்திக்கொள்ள வேண்டும்.

தன்னாலே தன்னை ஒருவன் உயர்திக் கொள்ளவேண்டும். தன்னைத் தாழ்த்திக் கொள்ளக்கூடாது.

**உண்மையில் ஒருவன் தனக்குத்தானே உறவினன், தனக்குத்தானே பகைவன். -** (பகவத்கீதை 6.5)

## யோகாரூடன்:-
============

எப்போது ஒருவன் இந்திரியங்கள் விரும்பும் பொருட்களின் மீது பற்றுக்கொள்வதில்லையோ, கர்மங்களிலும் பற்றுக் கொள்வதில்லையோ அப்போது எல்லா ஸங்கல்பங்களையும் துறந்த அவன் **'யோகாருடன்'** என்று சொல்லப்படுகிறான்.

**10. ஸ்ந்யஸ்ய ஸர்வ கர்மாணி பவ பந்த விமுக்தயே |**
**யத்யதாம் பண்டிதை: தீரை: ஆத்மாப்யாஸே உபஸ்திதை ||**

<u>**விளக்கம்**</u>

எல்லாக் கர்மங்களையும் துறந்து ஆத்ம தியானத்தில் இடைவிடாது நிற்கும் புத்திமான்களாகிய வித்வான்களால் இந்த பிறவிப் பிணியிலிருந்து விடுபடுவதற்கு முயற்சி செய்யப்பட வேண்டும்.

## ஸர்வ கர்மாணி:-
==============

நம்முடைய ஆசையினால் செய்யும் தேவையற்ற கர்மங்கள் முதற்கொண்டு மனதின் தூய்மைக்காகச் செய்யப்படும் நல்ல கர்மங்கள் வரை எல்லாம் துறப்பது எனப்பொருள்.

## அதிகாரி நிரூபணம்

=============

**11. அதிகாரிணமா ஸாஸ்தே பலஸித்தி: விசேஷத: |**
**உபாயா தேசகாலாத்யா: ஸந்த்யஸ்மின் ஸஹகாரிண: ||**

**விளக்கம்**

முக்கியமாக விசாரம் (ஆத்ம சந்தேகங்களுக்கு விடை தேடுதல்) என்ற சாதனையை ஒருவன் மேற்கொள்ளும் போது கேட்பவன் சில தகுதிகளுடன் கேட்கும் பொழுது மட்டுமே அது பலன் கிடைக்கும்.

மோட்சம் என்ற பலன் கிடைக்க இந்த மனித தேகம், காலம், இடம் போன்ற உபாயங்கள் ஆத்ம ஞானத்திற்காக பயன் பட்டாலும், அவன் தகுந்த அதிகாரியாக (புரிந்து கொள்ளும் தன்மை உடையவனாக) இருப்பது மிகவும் முக்கியம்.

மோட்சமானது நம்முடைய இலட்சியம். இதை அடைய ஆத்மஞானம் வேண்டும். ஞானத்தை அடைய அதை கேட்பவனிடம் சில தகுதிகள் வேண்டும். ஒரு செயலைத் திறம்படச் செய்து முடிக்கும் ஆற்றலும் அறிவுமுடையவன் அதற்கு அதிகாரி (தகுதி உடையவன்) ஆவான்.

**12. அதோ விசார: கர்த்தவ்யோ ஜிஜ்ஞாஸோ: ஆத்ம வஸ்துன: |**
**ஸமாஸாத்ய தயாஸிந்தும் குரும் ப்ரஹ்மவிதுத்தமம் ||**

**<u>விளக்கம்</u>**

ஆகையால் ஆன்மாவின் உண்மையைப் பற்றி அறிய விரும்புபவனுக்கு செய்யத்தக்கது விசாரம், எனவே அவன் கருணைக்கடலாகவும், சிறந்த பிரம்ம ஞானியாகவும் உள்ள குருவை அடைந்து, அவரை சரண்புகுந்து, அவரது உபதேசப்படி அந்த உண்மையை ஆராய வேண்டும்.

**குருவின் குண இலட்சணம்:-**

===================

ஸ்மாரக, வாரக, தாரக என்ற மூன்று குணங்கள் ஞான குருவிடம் காணப்படும். அவர் சத்தியத்தையே இடைவிடாது ஸ்மரிப்பவர். அதற்கு விரோதமானதை விலக்குபவர், அதில் தானும் நிலை பெற்றுப் பிறரையும் நிலை பெறச் செய்பவர்.

**ஸாதன சதுஷ்டயம்**

=============

**14. ஸாதனான்யத்ர சத்வாரி கதிதானி மனீஷிபி: |**
**யேஷு ஸத்ஸ்வேவ ஸந்நிஷ்ட்டா யதபாவே ந ஸித்த்யதி ||**

**<u>விளக்கம்</u>**

இங்கு ஞானத்தை அடைய அதை கேட்பவனிடம் சில தகுதிகள் வேண்டும் என பார்த்தோம்.

இந்த தகுதிகள் நான்கு சாதனைகளாக உள்ளன.

இது நிச்சய ஞானம் அடைந்தவர்களால் (பிரம்ம ஞானிகளால்) கூறப்பட்டுள்ளது.

எந்த சாதனைகள் இருந்தால் சத்திய வடிவான பிரம்மநிஷ்டை கைகூடுமோ, அந்த நான்கு தகுதிகளான சாதனைகளை கடைப்பிடிக்காமல் பிரம்மநிஷ்டை சித்திக்காது.

இந்த நான்கு சாதனைகளை எவன் ஒருவன் செயல்படுத்தி தகுதியை அடைகிறானோ அவனுக்கு கிடைக்கும் பலன் பிரம்மஞானம் ஆகும்.

பிரம்ம ஞானத்தின் பலன் **“மோட்சம்”** ஆகும்.

**“எதை ஒருவன் அடைந்ததற்கு பிறகு, மீண்டும் அடைய வேண்டியது ஒன்று இருக்கின்றது என்று நினைக்கவில்லையோ அதுதான் மோட்சம்”**

- பகவத்கீதை.

**15. ஆதௌ நித்யாநித்ய வஸ்து விவேக: பரிகண்யதே |**
**இஹாமுத்ர பல போக விராக: ததனந்தரம் |**
**சமாதி ஷட்க ஸம்பத்தி: முமுக்ஷுத்வம் இதி ஸ்புடம் ||**

**விளக்கம்**

(1) விவேகம், (2) வைராக்கியம், (3) சமாதி ஷட்க சம்பத்தி (4) முமுக்ஷுத்வம் என நான்கு சாதனைகள் உள்ளன.

முதலில் விவேகம் வேண்டும். அதாவது நிலையுள்ளதும், நிலையற்றதுமான பொருட்களைப் பற்றிய அறிவு வேண்டும்.

அடுத்து, இரண்டாவதாக வைராக்கியம் தேவை. அதாவது உலக சுகத்தில் (இந்த பூலோகத்தின் மீதும், சொர்கம் போன்ற வேறு லோகத்தின் மீதும் வைக்கின்ற பற்று) பற்றில்லாத தன்மை வேண்டும்.

அடுத்து மூன்றாவதாக சமாதி ஷட்க சம்பத்தி.

(சமம் + ஆதி - மனக்கட்டுப்பாடு, ஷட்கம் - ஆறு, சம்பத்தி: - சாதனைகள். ஆறு விதமான சாதனைகளின் கூட்டம் மூன்றாவது சாதனை ஆகும்.)

மேலும் நான்காவதாக முமுக்ஷுத்வம். அதாவது **'மோட்சம்'** அடைய வேண்டும் என்ற தீவிர ஆசை.

(ஆசைகளில் இதற்கு மேலான பெரிய ஆசை கிடையவே கிடையாது).

**16. ப்ரஹ்ம ஸத்யம் ஜகன்மித்யா இத்யேவம் ரூபோ விநிச்சய: |**
**ஸோऽயம் நித்யாநித்ய வஸ்துவிவேக: ஸமுதாஹ்ருத: ||**

**விளக்கம்**

பிரம்மம் உண்மை (நிலையானது பரம்பொருள்), இந்த உலகம் பொய் (நிலையற்றது இந்த உலகம்). என்ற நிச்சய புத்தி எதுவோ, அந்த நிச்சய புத்தி நித்யஅநித்ய வஸ்து **“விவேகம்”** என்று இங்கு கூறப்பட்டுள்ளது.

*பிரம்மத்தைப் பற்றிய பூரண ஞானம் அடைய உதவும் ஒரு சாதனமே இந்த விவேக சூடாமணி.

விவேகம் என்றால் என்ன?

விவேகம் என்றால் பிரித்து அறிதல் எனப்பொருள். எதைப் பிரித்து அறிவது?

எது நிலையானது, எது நிலையற்றது என பிரித்தறியும் அறிவு விவேகம் ஆகும்.

உண்மையும், பொய்யும் இந்த உலகத்தில் கலந்து உள்ளது. இதில் எது உண்மை? எது பொய்? என்று பிரித்தறியும் அறிவுதான் விவேகம் ஆகும்.

**17. தத் வைராக்யம் ஜிஹாஸா யா தர்சன ச்ரவணாதிபி: |**
**தேஹாதி ப்ரஹ்ம பர்யந்தே ஹ்யநித்யே போக வஸ்துனி ||**

## விளக்கம்

மனித உடல் தொடங்கி பிரம்மாவின் உடல் வரை எல்லாம் நிலையில்லாதது என்று பார்கின்ற, கேட்கின்ற பொருட்களின் மீது ஆசையை விட்டு பற்றில்லாத வெறுப்பு எதுவோ, அது வைராக்கியம் எனப்படும்.

வைராக்கியம் என்றால் இந்த உலகத்திலிருந்து கிடைக்கும் சந்தோசத்தில் மூழ்கி விடாத மனநிலை.

வைராக்கியம் என்பது மனதினுடைய ஒரு பக்குவம் ஆகும். இந்த பக்குவமான மனநிலை விவேகம் எனற மூலத்திலிருந்து தோன்றினால் அந்த வைராக்கியம் நிலைத்திருக்கும். மற்றபடி சாதாரணமாக வரும் வைராக்யம் நிலைக்காது.

ஆனால் விவேகமே வைராக்கியத்தை கொடுத்து விடாது. யாரிடம் எல்லாம் விவேகம் இருக்கிறதோ அவர்களுக்கு எல்லாம் வைராக்கியம் வந்து விடாது.

உதாரணமாக ஒருவருக்கு புகைப்பிடித்தல் உடல் நிலைக்கு தீங்கு என்ற விவேகம் இருக்கும், ஆனால் அதனை விட வேண்டும் என்ற வைராக்கியம் வருவதில்லை.

போகம் கொடுக்கின்ற பொருட்களிலிருந்து விலகி இருத்தல் என்ற அறிவுடன் கூடிய மனத்திறன் உண்மையான வைராக்கியம் எனப்படும்.

பொதுவாக நாம் எந்த சுகத்தை நாடுகிறோமோ அது நிலையற்றது, நம்மை பந்தப்படுத்தும் என்ற அறிவு நம்மிடையே இருந்தால், அந்த சுகத்தின் மீது நமக்கு இருக்கும் ஆர்வம் குறைந்து வைராக்கியம் நம்மிடையே வரும்.

17. **விரஜ்ய விஷய வ்ராதாத் தோஷ த்ருஷ்ட்யா முஹுர் முஹு:**
|
**ஸ்வலஷ்யே நியதாவஸ்தா மனஸ: சம உச்யதே ||**

<u>**விளக்கம்**</u>

போகத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கின்ற விஷய கூட்டங்களான சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் முதலிய புலன்களிடையே உள்ள இன்பங்களில் நாட்டமுடையவன், அதில் உள்ள குற்றத்தை அறிந்து தனது இலட்சியத்தில் (குறிக்கோளில்) மனதை அடக்குவதே சம: (சமம்) என்று கூறப்படுகிறது.

இதுவரை விவேகம், வைராக்கியம் தேவை என இரண்டு தகுதிகள் பார்த்தோம். இனி மூன்றாவது தகுதியில் ஆறு உட் பிரிவுகள் உள்ளன. அதில் முதலில் சம: என்றால் மனக்கட்டுப்பாடு ஆகும்.

சாஸ்திரத்தில் நம்முடைய மனதை ஒரு கருவியாக கூறப்பட்டுள்ளது. நாம் நமது வாகனத்தை (கார் அல்லது ஸ்கூட்டரை) ஒரு கருவியாக பயன்படுத்தி பல இடங்களுக்கு சென்று வருகிறோம்.

இதில் நாம் நமது வாகனத்தின் கட்டுப்பாட்டில் இருப்போமா? அல்லது வாகனத்தை நமது கட்டுப்பாட்டில் வைத்திருப்போமா?

உண்மையில் வாகனத்தை ஓட்டும் போது நாம் அதை நமது கட்டுப்பாட்டில் வைத்திருப்போம். அவ்வாறு கட்டுப்பாடு இல்லாமல் வாகனம் ஓட்டினால் ஏற்படும் விளைவுகளுக்கு நாம்தான் பொறுப்பாவோம்.

அதுபோல, மனக்கட்டுப்பாடு இன்றி மனம் போன போக்கில் வாழ முயற்சித்தால் அதனால் ஏற்படும் துன்பங்களுக்கு நாமே பொறுப்பாவோம்.

ஆனால் மனதை நாம் ஏன் நமது கட்டுப்பாட்டில் வைக்க முடிவதில்லை?

புலனடக்கம் இன்மையே காரணம் ஆகும். இது முயற்சியினால் அடையப்பெறும்.

உலக விஷயங்களை நாடிச் செல்லும் ஐம்புலன்களை அடக்கி ஆத்ம ஞானத்தில் நாட்டமுடையவன் விஷயத்தை விஷம் என கருதி அதனை விலக்கவேண்டும்.

**18. விஷயேப்ய: பராவர்த்ய ஸ்தாபனம் ஸ்வஸ்வ கோளகே |**
**உபயேஷாம் இந்த்ரியாணாம் ஸ தம: பரிகீர்த்தித: ||**

**விளக்கம்**

கர்மேந்திரியங்கள் (வாக்கு, கை, கால், மலத்துவாரம், குறி) ஞானேந்திரங்கள் (கண், காது, நாக்கு, மூக்கு, மெய்) என்ற இருவகையான இந்திரியங்களினுடைய விஷயங்களின்றும், அந்த இந்திரியங்களைத் திருப்பி தத்தம் இருப்பிடத்தில் நிறுத்தி வைத்தலாகிய செயலே தம: (தமம்) என்று கூறப்படுகிறது.

இது மூன்றாவது சாதனையின் உட்பிரிவான இரண்டாம் சாதனை ஆகும்.

**19. பாஹ்யானாலம்பனம் வ்ருத்தே: ஏஷா உபரதி: உத்தமா |**
**ஸஹனம் ஸர்வ து:க்கானாம் அப்ரதீகார பூர்வகம் |**
**சிந்தா விலாப ரஹிதம் ஸா திதிஷா நிகத்யதே ||**

**விளக்கம்**

மூன்றாவது சாதனையின் உட் பிரிவில் இது மூன்றாவதாக வருகிறது.

சம:, தம: வைத்தொடந்து உபரதி: ஆகும். இங்கு உபரதி: என்றால் விலகி இருத்தல்.

மனக்கட்டுப்பாடு அடைந்த மனதை வெளி விஷயங்களில் கெடாமல் வைத்திருத்தலுக்கு உபரதி: என்று பெயர்.

அதாவது, காக்கப்பட்ட மனதை வெளி விஷயங்களில் ஓடாமல் பிடித்து வைத்திருக்கும் நிலைக்கு உபரதி: எனலாம்.

அடுத்து எல்லாவித துன்பங்களையும், அவைகளை போக்கும் வழியை தேடாமலும், கவலையையும், புலம்புதலும் இல்லாமலும் பொறுத்துக் கொள்ளுதலாகிய அது திதிக்ஷை (பொறுமை) என்று கூறப்படுகிறது.

நமக்கு விருப்பமில்லாத கெட்ட சூழ் நிலை வருகின்றது என்பதற்காக அதனை அப்படியே அனுபவித்துத்தான் ஆக வேண்டும் என சாஸ்திரம் கூறுகிறது என அதனை அப்படியே ஏற்றுக்கொள்ளக்கூடாது. நம்முடைய சுய முயற்சியின் காரணமாக அதனை மாற்ற முயலவேண்டும்.

அதையும் கடந்து சில சூழ் நிலைகள் மாற்ற முடியாமல் போகலாம், அத்தகைய சூழ் நிலையில் அதனை ஏற்றுக்கொண்டு, பொருத்துக்கொள்ளுதலாகிய சாதனையைத்தான் திதிக்ஷை என்கிறோம்.

20. **சாஸ்த்ரஸ்ய குரு வாக்யஸ்ய ஸத்ய புத்த்யவதாரணம் |**
**ஸா ச்ரத்தா கதிதா ஸத்பி: யயா வஸ்தூபலப்யதே ||**

**விளக்கம்**

ஞான சாஸ்திரங்களினுடைய உண்மையிலும், குருவினுடைய உபதேசத்தின் உண்மையிலும் இவை சத்தியம் என்ற நிச்சய புத்தி எதுவோ அது சிரத்தை (ச்ரத்தா) என்று ஸாதுக்களால் கூறப்பட்டுள்ளது.

சிரத்தை என்றால் நம்பிக்கை என்று பொருள். அதாவது, சாஸ்திரத்தின் மீதும் குருவின் மீதும் உள்ள நம்பிக்கை ஆகும்.

இதுவரை, 1. சம: (மனக்கட்டுப்பாடு), 2. தம: (மனக்கட்டுப்பாட்டில் நிலை பெற்று இருத்தல்), 3. உபரதி: (விலகி இருத்தல்), 4. திதிஷா (பொறுமை), 5. சிரத்தா (நம்பிக்கை) என இதுவரை ஐந்து சாதனைகளை பார்த்துள்ளோம்.

இனி மூன்றாவது சாதனையின் ஆறு உட் பிரிவுகளில் ஆறாவதை அடுத்து பார்க்கலாம்.

**21. ஸர்வதா ஸ்தாபனம் புத்தே: சுத்தே ப்ரஹ்மணி ஸர்வதா |**
**தத் ஸமாதானம் இத்யுக்தம் ந து சித்தஸ்ய லாலனம் ||**

**விளக்கம்**

பரிசுத்தமான பிரம்மத்தினிடத்தில் எப்பொழுதும் புத்தியின் ஸ்திரமான நிலை எதுவோ அது ஸமாதானம் ஆகும்.

சஞ்சலமான, நிலையற்றதுமான (லாலனம் - அசைகின்ற தொட்டிலைப் போன்று ஆடிக்கொண்டே இருக்கின்ற நிலை) மனது எந்தெந்த காரணத்தைப்பற்றி வெளியே சுற்றித்திரியுமோ அந்தந்த காரணத்தினின்று மனதை மீட்டு அடக்கி ஆத்மாவிலேயே வசமாக வைத்திருத்தலே ஸமாதானம் ஆகும்.

சம:, தம:, உபரதி, திதிஷா, ஸ்ரத்தா, ஸ்மாதானம் ஆகிய ஆறு சாதனைகளும் சேர்ந்த மூன்றாவது சாதனையை சமாதி ஷட்க ஸம்பத்தி: எனப்படும்.

**22. அஹங்காராதி தேஹாந்தான் பந்தான் அஜ்ஞான கல்பிதான் |**
**ஸ்வஸ்வரூபாவபோதேன மோக்துமிச்சா முமுக்ஷுதா ||**

<u>விளக்கம்</u>

அஹங்காரம் முதல் தேகம் வரை உள்ள தளைகள் அஞ்ஞானத்தினால் உருவானவை. தன்னுடைய உண்மையான சொருபத்தை அறிய அந்த தளைகளிலிருந்து விடுபடுவதற்கு விருப்பம் கொள்வதே முமுக்ஷுத்வம் ஆகும்.

முமுக்ஷுத்வம் என்றால் மோட்சத்தின் மீது தீவிர ஆசை.

அத்தனைக்கும் ஆசைப்படும் இந்த மனதின் எந்த ஆசை தீவிரத்தை அடையுமோ அந்த ஆசை நம்மை செயலில் தள்ளும். எந்த ஆசை அறிவு பூர்வமாக இருக்கின்றதோ அந்த ஆசையே

முமுக்ஷுத்வம் ஆகும். நம்முடைய அறியாமையினால் வருகின்ற ஆசையே துயரத்திற்கு காரணம்.

இதுவரை நாம் அதிகாரத்வத்தை பார்த்தோம்.

சாதன சதுஸ்டய சம்பத்தி: என்ற நான்கு விதமான சாதனைகளின் வாயிலாக ஒருவன் தன்னை தகுதிப்படுத்திக்கொள்ளவேண்டும். இந்த நான்கு விதமான சாதனைகளை செய்தால் அது மோட்சம் என்ற பலனை கொடுக்கும்.

**23. உக்த ஸாதன ஸம்பன்ன: தத்வ ஜிஜ்ஞாஸு: ஆத்மன: |**
**உபஸீதேத் குரும் ப்ராஜ்ஞம் யஸ்மாத் பந்த விமோக்ஷணம் ||**

**விளக்கம்**

மேலே சொல்லப்பட்ட ஸாதனங்களுடன் கூடியவனும், உண்மை தத்துவத்தை அறிய விரும்புபவன். அதாவது, தன்னுடைய உண்மையான சொருபத்தின் தத்துவத்தை அறிய ஆர்வமுள்ளவன், எவரிடமிருந்து பிறவித்தளைகளிலிருந்து விடுதலை கிடைக்குமோ அப்படிப்பட்ட குருவை நாடி அடைதல் வேண்டும்.

**குரு லஷணம்**
==========

**24. ச்ரோத்ரியோSவ்ருஜினோSகாமஹதோ யோ ப்ரஹ்ம வித்தம: |**
**ப்ரஹ்மண்யுபரத: சாந்தோ நிரிந்தன இவானல: |**
**அஹேதுக தயாஸிந்து: பந்து: ஆநமதாம் ஸதாம் ||**

**விளக்கம்**

வேதத்தை நன்கு கற்றுணர்ந்தவரும், பாவமற்றவரும், ஆசைவாய்பட்டு அழியாதவரும், பிரம்ம ஞானிகளில் சிறந்தவரும், பிரம்ம நிஷ்டையில் ஒடுங்கி நிற்பவரும், விறகில்லாத நெருப்பு போல அமைதியுள்ளவரும், கடல் போல கருணையுள்ளவரும், தன்னை வணங்கும் நல்லவர்களுக்கு உறவினரும் எவரோ அவரே சிறந்த குரு.

மாணவர்களாக இருப்பவர்களுக்கு நான்கு தகுதிகள் சொல்லப்பட்டது. அதுபோலவே, குருவிற்கும் இரண்டு தகுதிகள் இங்கு கூறப்படுகிறது.

குருவிற்கு இரண்டு தகுதிகள் என்றால், அவர் மாணவனாக இருந்து நான்கு தகுதிகளை அடைந்து, அதன் பிறகு உபதேசம் செய்ய வரும்பொழுது, இன்னும் கூடுதலாக இரண்டு தகுதிகளை அவர் அடைந்திருக்க வேண்டும். அப்படி இரண்டு தகுதிகளை உடைய குருவை (ஆசிரியரை) நாம் அணுகவேண்டும்.

முதல் தகுதி ச்ரோத்ரிய: (ச்ரோத்ரிய: என்றால் முறைப்படி அவர் அவரது குருவினிடத்தில் சாஸ்திரம் படித்திருக்கவேண்டும்), இரண்டாவது தகுதி பிரஹ்ம நிஷ்ட: (பிரஹ்ம நிஷ்ட: என்றால் எந்த தத்துவத்தை குருவினிடத்திலிருந்து கேட்டாரோ அந்த தத்துவத்தில் அவர் நிலை பெற்று இருத்தல் அவசியம்.

**25.தமாராத்ய குரும் பக்த்யா ப்ரஹ்வ ப்ரச்ரய ஸேவனை: |**
**ப்ரஸ்ன்னம் தமனுப்ராப்ய ப்ருச்சேத் ஜ்ஞாதவ்யம் ஆத்மன: ||**

**விளக்கம்**

அந்த குருவை பக்தியுடனும், நமஸ்காரம், அடக்கம், ஸேவை முதலியவற்றுடனும் பூஜித்து சந்தோஷமாய் இருக்கையில் அவரை அணுகி தனக்கு அறிந்து கொள்ளவேண்டியதை கேட்டுக்கொள்ள வேண்டும்.

## சிஷ்யன் குருவினிடம் பேசுகிறான்.

==========================

**26. துர்வார ஸம்ஸார தவாக்னி தப்தம் தோதுயமானம் துரத்ருஷ்டவாதை: |**
**பீதம் ப்ரபன்னம் பரிபாஹி ம்ருத்யோ: சரண்யம் அன்யத் யதஹம் ந ஜானே ||**

**விளக்கம்**

தடுக்க முடியாத பிறவித் துன்பமாகிய காட்டுத் தீயால் பொசுக்கப்பட்டவனும், துரதிருஷ்டமாகிய காற்றால் அலைக்கழிக்கப்பட்டவனும், அதனால் பயந்தவனும், தங்களைச் சரணடைந்தவனும் ஆகிய அடியேனை வேறு புகழிடம் நான் அறியாத காரணத்தால் சாவினின்று காத்தருள்வீராக.

**27. சாந்தா மஹாந்தோ நிவஸந்தி ஸந்தோ வஸந்தவத்**
**லோகஹிதம் சரந்த: |**
**தீர்ணா: ஸ்வயம் பீமபவார்ணவம் ஜனான் அஹேதுனா அன்யானபி**
**தாரயந்த: ||**

**விளக்கம்**

மனவமைதி உள்ளவர்களும், பெரியோர்களும், வஸந்தகாலத்தை போல் உலகிற்கு நன்மை செய்பவர்களும், பயங்கரமான பிறவிக்கடலை தாங்கள் தாண்டியவர்களாய், பிற மனிதர்களை காரணத்தை வேண்டாமல் தாண்டுவிப்பவர்களும் ஆன ஸாதுக்கள் உலகில் வசிக்கிறார்கள்.

## குரு உபதேசம்

=============

**28. மா பைஷ்ட வித்வன் தவ நாஸ்த்யபாய:**
**ஸம்ஸார ஸிந்தோ: தரணே அஸ்தி உபாய: |**
**யேனைவ யாதா யதயோ அஸ்ய பாரம்**
**தமேவ மார்க்கம் தவ நிர்திசாமி ||**

**விளக்கம்**

கற்றுணர்ந்தவனே! பயப்படாதே. உனக்கு அழிவு இல்லை. பிறவிக்கடலை கடப்பதற்கு வழி உள்ளது. முனிவர்கள் எதனால் பிறவிக்கடலின் அக்கரையை அடைந்தார்களோ அந்த வழியையே உனக்கு காட்டித்தருகிறேன்.

இந்த சுலோகத்தில் குருவானவர் சிஷ்யனுடைய மனதை முதலில் ஆறுதல் கொடுக்கிறார். தத்துவத்தை கேட்கும் மனம் அதிக துயரமோ, அதிக சந்தோஷமோ கொண்டிருந்தால் உபதேசம் செய்வதை அந்த மனம் ஏற்காது.

ஆகவே, சிஷ்யனுடைய துயரத்தை தற்காலிகமாக நீக்கி அவனை குருவானவர் சமாதானம் செய்கிறார்.

உனக்கு **"அபாயம் இல்லை உபாயம் இருக்கிறது"** என உபதேசத்தை கேட்கும் மன நிலைக்கு சிஷ்யனை தயார் செய்கிறார்.

29. **அஜ்ஞான யோகாத் பரமாத்மன: தவ**
**ஹ்யனாத்ம பந்த: தத ஏவ ஸம்ஸ்ருதி: |**
**தயோ: விவேகோதித போத வஹ்னி:**
**அஜ்ஞான கார்யம் ப்ரதஹேத் ஸமூலம் ||**

**விளக்கம்**

அஞ்ஞானத்தின் காரணமாகத்தான் பரமாத்மாவாக இருக்கின்ற உனக்கு ஆத்மா இல்லாததுடன் பிணைப்பு ஏற்பட்டு பிறவிச்சுழலில் சிக்கிக்கொண்டாய்.

ஆத்ம அனாத்மாவாகிய இரண்டையும் பிரித்து அறியும் விவேகம் உன்னிடம் உண்டானால், அதிலிருந்து தோன்றும் ஞானத்தீ அஞ்ஞானத்தை எரித்துவிடும்.

எமனுக்கு பயந்து கொண்டு இருக்கின்ற சிஷ்யனிடம் பரமாத்மாவான உனக்கு அஞ்ஞானத்தின் காரணத்தினால் துயரம் வந்துள்ளது. உன்னிடம் விவேகம் உண்டானால் ‘‘உன்னை நீ அறிவாய்’’ என்று குருவானவர் கூறியதும், சிஷ்யனுக்கு சந்தேகம் வருகின்றது.

**“நான் எப்படி பரமாத்மாவாக இருக்க முடியும்”?**

என்ற சந்தேகம் சிஷ்யனுக்கு தோன்ற, இனி சிஷ்யன் குருவிடம் 7 கேள்விகள் கேட்கப்போகிறான்.

அவன் கேட்கும் கேள்விகளுக்கு பதில் தரப்போவதுதான் இந்த முழு ‘‘விவேக சூடாமணி’’ ஆகும்.



## சிஷ்யனின் கேள்விகளும், குருவின் பதில்களும்
========================================

30. கோ நாம பந்த: கதம் ஏஷ ஆகத:
கதம் பிரதிஷ்டாஸ்ய கதம் விமோக்ஷ: |
கோஸௌ அனாத்மா பரம: க ஆத்மா
தயோ: விவேக: கதம் ஏதத் உச்யதாம் ||

<u>**விளக்கம்**</u>

பந்தம் என்பது என்ன?
இது (பந்தம்) எப்படி வந்தது?
இதனுடைய நிலை (இருப்பு) எவ்விதம்?
இதிலிருந்து விடுதலை அடைவது எப்படி?
அனாத்மா என்றால் என்ன?
பரமாத்மா என்பவர் யார்?
பரமாத்மா(ஆ)த்மாவையும், அனாத்மாவையும் பிரித்து அறிவது எப்படி?

இந்த ஏழு கேள்விகளும் சிஷ்யனால் கேட்கப்படுகிறது.

**31. யத் போத்தவ்யம் தவேதானீம் ஆத்மானாத்ம விவேசனம் |**
**ததுச்யதே மயா ஸம்யக் ச்ருத்வா ஆத்மனி அவதாரய ||**

**<u>விளக்கம்</u>**

எந்த தத்துவமானது ஒருவனால் அறியப்படவேண்டுமோ, அந்த ஆத்ம - அனாத்ம வேறுபாடு என்ன என்பதை என்னால் இப்பொழுது சொல்லப்படுகிறது. நான் தெளிவாக அதனை உனக்கு சொல்கிறேன். அதனை கேட்டு உள்ளத்தில் இருத்திக்கொள்வாயாக.

இந்த அறிவானது அவ்வளவு சாதாரண அறிவு அல்ல. மனம் சிதரடையாமல் கேள்! இதன் மூலமாகவே நீ மோட்சத்தை அடைய உள்ளாய்.

## ஸ்தூல சரீரம்

============

**32. பஞ்சீக்ருதேப்யோ பூதேப்ய: ஸ்ஹூலேப்ய: பூர்வகர்மணா | ஸமுத்பன்னம் இதம் ஸ்தூலம் போகாயதனம் ஆத்மன: | அவஸ்தா ஜாகர: தஸ்ய ஸ்தூலார்த்தானுபவோ யத: ||**

**<u>விளக்கம்</u>**

பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஸ்தூலமான பொருள்களினின்று முன் வினையால் தோற்றுவிக்கப்பட்டது. இந்த ஸ்தூலசரீரம் ஜீவனுக்கு இன்ப, துன்ப அனுபவத்திற்காக கொடுக்கப்படுகிறது. எந்த நிலையில் ஸ்தூலமான பொருள்களின் அனுபவம் ஏற்படுகிறதோ அது அந்த ஜீவனுடைய விழிப்பு நிலை ஆகும்.

இங்கு குரு சிஷ்யன் கேட்கும் கேள்விகளுக்கு வரிசையாக பதில் சொல்வது இல்லை. முதலில் ஐந்தாவது கேள்விக்கு பதில் சொல்கிறார்.

### 5 - வது கேள்வி: அனாத்மா என்றால் என்ன?

மனிதர்களாக இருக்கின்ற நாம் ஜீவர்கள். இந்த ஜீவர்களாகிய நம்மை நாம் '**நான்**' '**நான்**' என்று தொடந்து அழைத்து வருகிறோம். நம்மை நாம் ஒரு ஜடப்பொருளாக புரிந்து கொள்வதில்லை, ஆதலால்,

நான் ஒரு அறிவை உடையவன் என்ற நிலையில் ஒரு உடலும் கொண்டு நாம் உள்ளோம்.

இங்கு சாஸ்திரம் நம்மை இரண்டு அம்ஸமாக பிரிக்கின்றது. அது நான் என்ற பொருளுக்காக விளக்கம் கொடுக்கின்றது. இங்கு விசாரம் செய்யப்படும் பொருள் **“நான்”** என்ற என்னைப்பற்றி மட்டுமே பேசுகிறது.

இந்த **‘நான்’** என்ற பொருளை இரண்டாக பிரித்து ஒன்று ஆத்மா, மற்றொன்று அனாத்மா என்று பிரிக்கிறது. இந்த இரண்டும் சேர்ந்த நாம் ஜீவர்கள் ஆவோம். அதாவது, ஆத்ம அனாத்மாவினுடைய சேர்க்கைதான் **“நான்”** என்கின்ற நாம்.

நம்மிடத்தில் எந்த ஒன்று அறிபவனாக (த்ருக் - அறிபவன்) இருக்கிறதோஅந்த அறிவு சொரூபத்தை ஆத்மா எனவும், அறியப்படுவது எதுவோ அது (த்ருஷ்யம் - அறியப்படுவது) அனாத்மா எனவும் பிரிக்கிறது.

நம்முடைய உடலை நாம் **“ஸ்தூல சரீரம்”** என்கிறோம். நாம் அனுபவிக்கும் மனம் **“ஸூக்ஷ்ம சரீரம்”** என்கிறோம். இந்த இரண்டையும் நாம் அனுபவிக்கிறோம். ஆதலால் எளிதாக இவை இரண்டையும் அறிந்து கொண்டோம்.

ஆனால், காரணசரீரம் என்ற ஒன்றை நாம் அனுபவிக்கவில்லை. இருப்பினும் அதை இனி வரும் பகுதிகளில் விரிவாக பார்க்கலாம்.

தற்பொழுது அனாத்மா என்றால் இந்த ஸ்தூல, சூட்சும மற்றும் காரண சாரீரங்களான இந்த மூன்று உடலும் சேர்ந்ததுதான் அனாத்மா எனப்படுகிறது.

உடல், மனம் என்று அறியப்படும் அனைத்தும் அனாத்மா.

அறிவாய் அறிந்து கொண்டு இருக்கிறதோ அது ஆத்மா.

சைதன்ய ஸ்வரூபமே ஆத்மா எனவும் இது ஒன்றாக இருக்கிறது என்றும், அனாத்மா பலவாக இருக்கிறது என்றும் புரிந்து கொள்ளவேண்டும். அப்படி பார்க்கையில் அறியப்படுகின்ற இந்த உலகம் அனைத்தும் அனாத்மா, அறிபவன் ஒருவன்தான் ஆத்மா ஆகும்.

## ஸூக்ஷ்ம சரீரம்

==============

33. வாகாதி பஞ்ச ச்ரவணாதி பஞ்ச
ப்ராணாதி பஞ்சாப்ரமுகானி பஞ்ச |
புத்த்யாத்யவித்யாபி ச காமகர்மணீ
புரியஷ்டகம் ஸூக்ஷ்ம சரீரமாஹு: ||

**விளக்கம்**

ஐந்து கர்மேந்திரியங்கள் (வாக்கு, கைகள், கால்கள், குதம், குறி), ஐந்து ஞானேந்திரியங்கள் (காது, தொடு உணர்வு (மெய்), கண், சுவைக்கின்ற நாக்கு(வாய்), மூக்கு), ஐந்து விதமான பிராணன்கள் (பிராணன், அபானன், சமானன், வியானன், உதானன்), நான்கு அந்தக்கரணங்கள் (மனம், புத்தி, சித்தம், அஹங்காரம்) இந்த 19 - ம் சேர்ந்த **"ஸூக்ஷ்ம சரீரம்"** எனப்படுகிறது.

மேலும் சில தன்மைகளை ஆசிரியர் இங்கு சேர்த்து கூறுகிறார்.

அவைகள் ஆகாசம் முதலிய ஐந்து ஸூக்ஷ்ம பூதங்கள், அவித்யா (அறியாமையினால் ஏற்றி வைத்தல்), ஆசை, மேலும் செயல் ஆகிய இந்த எட்டு தத்துவங்களையும் சேர்த்து ஸூக்ஷ்ம சரீரம் என்கிறார்.

**34. இதம் சரீரம் ச்ருணு ஸூக்ஷ்ம ஸம்ஜ்ஞிதம்**
**லிங்கம் த்வபஞ்சீக்ருத பூதஸம்பவம் |**
**ஸவாஸனம் கர்மபலானுபாவகம்**
**ஸ்வாஜ்ஞானதோனாதி: உபாதி: ஆத்மன: |**
**ஸ்வப்னோ பவத்யஸ்ய விபக்த்யவஸ்தா**
**ஸ்வமாத்ர சேஷேண விபாதி யத்ர ||**

**விளக்கம்**

இங்கு நம்முடைய ஸூக்ஷ்ம சரீரம் பற்றிய மேலும் சில விளக்கங்கள் கூறப்படுகின்றன. இந்த

உடலைப்பற்றி நீ கவனமாக கேள்!. இந்த ஸூக்ஷ்ம உடலை நேரடியாக பார்க்க முடியாது. லிங்கம் என்பது ஸூக்ஷ்ம உடலுக்கு இன்னொரு பெயர். சமஸ்க்ருதத்தில் லிங்கம் என்றால் அடையாளம் என்று பெயர்.

ஸூக்ஷ்ம உடலை அடையாளம் என்று என் கூறினார் என்றால், சைதன்யத்தை காட்ட அடையாளமாக இருப்பதால் இதனை லிங்கம் என்று இங்கு கூறுகிறார்.

எந்த ஒரு படைப்பும் காரண நிலை, ஸூக்ஷ்ம நிலை, ஸ்தூல நிலை என்ற மூன்று நிலைகளில்தான் படைக்க முடியும். ஸ்தூல பஞ்ச பூதங்கள் படைக்கும் முன்பே அவைகள் ஸூக்ஷ்ம நிலை பஞ்ச பூதங்களாக இருந்தன. அந்த ஸூக்ஷ்ம நிலை பஞ்ச பூதங்களிலிருந்து ஸூக்ஷ்ம சரீரம் தோன்றின. ஸ்தூல நிலை பஞ்ச பூதங்களிலிருந்து ஸ்தூல சரீரம் தோன்றின.

அந்த ஸூக்ஷ்மமான பஞ்ச பூதங்களுக்குத்தான் அபஞ்சீக்ருத பஞ்ச பூதங்கள் எனப்படும். அதாவது பஞ்சீகரணம் செய்யப்படாத மூலப்பொருட்களிலிருந்து இந்த சரீரம் (உடல்) தோன்றியது. பூர்வ கர்ம பதிவுகளுடன் கூடியதுதான் ஸூக்ஷ்ம சரீரம். கர்ம பலனை அனுபவிக்கும் கருவியாக இருப்பது இந்த ஸ்தூல சரீரம்.

இந்த ஸூக்ஷ்ம சரீரம் தன்னுடைய தர்மங்களையெல்லாம் எடுத்து ஆத்மாவிடம்

கொடுத்துவிடுவதால், அந்த ஆத்மாவிற்கே இது எல்லாம் இருப்பதுபோல தோன்றுகிறது.

உதாரணமாக ஒரு ஸ்படிகத்தின் அருகில் செம்பருத்திப்பூவை வைத்துப் பார்த்தால் அந்த பூவின் சிகப்பு நிறத்தை அந்த ஸ்படிகம் ஏற்றுக்கொண்டது போல காணப்படும். ஆனால், உண்மையில் அப்படி ஸ்படிகம் அந்த நிறத்தினை அடைவதில்லை. இதுபோல, இந்த ஸூக்ஷ்ம சரீரத்தின் வாஸனைகளான பழைய பதிவுகளை இந்த ஆத்மாவே ஏற்றுக்கொண்டுள்ளது போல நமக்கு தோன்றுகிறது.

தன்னுடைய குணங்களை பொய்யாக எடுத்து வேறு ஒன்றிற்கு கொடுப்பது **"உபாதி"** என சமஸ்க்ருதத்தில் அழைக்கப்படுகிறது. ஸூக்ஷ்ம சரீரம் என்பது இங்கு ஆத்மாவிற்கு உபாதியாக இருக்கின்றது. இந்த காரியங்கள் அறியாமையினால் நடைப்பெறுகிறது என ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

கனவில் நம்முடைய ஸூக்ஷ்ம சரீரத்தில் (மனதில்) வருகின்ற நிகழ்வுகள் எப்படி ஸ்தூல சரீரத்தை பாதிக்காதோ, அதுபோல ஸூக்ஷ்ம சரீரத்தின் வாஸனைகள் ஆத்மாவை பாதிக்காது.

35. **ஸர்வ வ்யாப்ருதி கரணம் லிங்கமிதம் ஸ்யாத் சிதாத்மன: பும்ஸ: |**
**வாஸ்யாதிகமிவ தக்ஷ்ண: தேனைவாத்மா பவதி அஸங்கோऽயம் ||**

## விளக்கம்

எல்லா செயல்களுக்கும் கருவியாக ஸூக்ஷ்ம சரீரம் இருக்கிறது. அறிவு சொருபமான மனிதனுக்கு இந்த லிங்க சாரீரம் என்ற மனமான ஸூக்ஷ்ம சரீரம் ஒரு தட்சனுக்கு அவர் பயன்படுத்துகின்ற உளி (வாச்சி) எப்படி ஒரு கருவியாக பயன்படுகிறதோ, அதுபோல ஆத்மாவிற்கு இந்த மனமானது ஒரு கருவியாக பயன்படுகிறது. அதனாலேயே இந்த ஆத்மாவானது அஸங்கமாக (பற்றற்றதாக) ஆகிறது.

36. **அவ்யக்த நாம்னீ பரமேச சக்தி:**
**அனாத்யவித்யா த்ரிகுணாத்மிக பரா |**
**கார்யானுமேயா ஸுதியைவ மாயா**
**யயா ஜகத் ஸர்வமிதம் ப்ரஸூயதே ||**

## விளக்கம்

வெளிதோற்றத்திற்கு வராத அவ்யக்தம் எனப்பெயர் பெற்ற மாயையானது ஆதியானது, அஞ்ஞான வடிவானது, மூன்று குணங்களை உடையதான மேலானதான உன்னத சக்தியாய் இருப்பது என்பதை சிறந்த புத்திமானால்தான் அதனுடைய செயல்களிலிருந்து அது ஊகித்தறியபடும். அந்த மாயையால் இந்த உலகம் முழுவதும் பிறப்பிக்கப்படுகிறது.

ஒவ்வொரு ஜீவனுக்கும் மூன்று சரீரங்களான ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் என்று உள்ளது என பார்த்தோம். இதில் நம்முடைய

அனுபவத்தில் ஸ்தூல உடலையும், மனம் என்ற ஸூக்ஷ்ம உடலையும் உணர்கிறோம். இதுபோல, காரண சரீரம் என்ற ஒன்றை நாம் பார்த்து அனுபவிக்க முடியாது. ஆனால் அறிவில் புரிந்து கொள்ளலாம்.

ஒரு பெரிய ஆலமரத்திற்கு ஒரு சிறிய விதை எப்படி காரணமாக உள்ளதோ, அதுபோல ஒவ்வொரு உயிருக்கும் முதலில் காரண சரீரம் மூலமாக ஸூக்ஷ்ம சரீரம் கிடைத்து அதன் பிறகே ஸ்தூல சரீரம் என்ற ஒன்று உருவாக முடியும்.

நம்முடைய ஸூக்ஷ்ம சரீரம் (உடல்), ஸ்தூல சரீரம் (மனம்) தோன்றுவதற்கு காரணமாக இருந்தது நம்முடைய காரண சரீரம் ஆகும்.

இதுபோல நம்முடைய உடல் எப்படி இரண்டாக ஸ்தூல, ஸூக்ஷ்ம சரீரங்களாக உருவாக காரணமாக காரண சரீரம் இருந்ததோ, அதுபோல இந்த ஸ்தூல பிரபஞ்சம், ஸூக்ஷ்ம பிரபஞ்சம் தோன்ற காரண பிரபஞ்சம் நிச்சயமாக இருந்திருக்க வேண்டும்.

அந்த காரண பிரபஞ்சமே இந்த ஸ்தூல, ஸூக்ஷ்ம உடலுக்கும் காரணமாக இருக்கிறது. இந்த காரண பிரபஞ்சத்தைத்தான் சாஸ்திரம் மாயா என அழைக்கிறது. இந்த மாயை ஈஸ்வரனுடைய ஒரு சக்தி ஆகும். இந்த மாயையை பார்க்கவோ அல்லது அனுபவிக்கவோ மாயையினால் கிடைத்த இந்திரியங்களால் முடியாது.

அவ்யக்தம் என்ற பெயரை உடையது இந்த காரணசரீரம். அவ்யக்தம் என்றால் வெளி தோற்றத்திற்கு வராத நிலை. உதாரணம் ஒரு விதை இருக்கிறது.

அந்த ***விதையிலிருந்து மரமானது வெளி தோற்றத்திற்கு வராமல் இருக்கிறது, அது அவ்யக்தம்*** என்று பொருள். அந்த மரமானது ***விதையிலிருந்து வெளி தோற்றத்திற்கு வந்து விட்டால் அது வியக்தம்*** என்று பொருள்.

இந்த மாயை ஈஸ்வரனுடைய ஒரு சக்தி ஆகும். சக்தியை நாம் கண்ணால் பார்க்க முடியாது. எந்த ஒரு சக்தியும் அது வெளிப்படும் போதுதான் அது நமக்கு தெரியும்.

அதுபோல மாயையும் பகவானிடத்தில் இருக்கும் ஒரு சக்தி. இந்த மாயையும் வெளி தோற்றத்திற்கு வந்தால்தான் நமக்கு தெரியும். இந்த மாயையான காரண பிரபஞ்சம் இரண்டுவிதமான சக்திகளை கொண்டது. அவைகள் ஒன்று தோற்றுவிக்கின்ற சக்தி (விட்சேப சக்தி), மற்றொன்று மறைக்கின்ற சக்தி (ஆவரண சக்தி) என இரண்டு நிலைகளில் உள்ளது.

இந்த விட்சேப சக்தியை வைத்து இந்த உலகைத்தை ஈஸ்வரன் படைக்கிறார். ஆவரண சக்தியை பயன் படுத்தி படைத்த அனைத்து ஜீவராசிகளுக்கும் தன்னுடைய உண்மை சொருபத்தை மறைத்து விடுகிறார்.

அதனால்தான் ஒவ்வொரு ஜீவராசிகளுக்கும் தான் பிறக்கும் பொழுதே நான் ஆத்மா என்ற அறிவுடன் பிறக்காமல், தான் இந்த உடல், இந்த உலகம்தான் உண்மை என்ற அறியாமையால் பிறக்கிறான்.

காரணசரீரம் எப்பொழுது தோன்றியது என்று அறியமுடியாது. காரண சரீரத்திற்கு காலதத்துவம் கிடையாது. உதாரணமாக நாம் ஆழ்ந்த உறக்க நிலையில் காரணசரீரத்தில் இருப்போம். அதனால்தான் நாம் எவ்வளவு நேரம் தூங்கினோம் என்று அறிய முடியாது. காலத்தை கடந்தது காரணசரீரம். இது அனாதி ஆகும்.

அவித்யா என்றால் ஆவரண ரூபம், வெளி தோற்றத்திற்கு வராத மூன்று குணங்கள் காரண சரீரத்திற்கு உள்ளது. அது சத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்பதாகும். அந்த குணங்கள் அறிவு, செயல்,செயலற்ற ஜட தன்மை என இந்த மூன்று குண சொருபமாக இருப்பது காரணசரீரம் ஆகும்.

முக்குணவடிவானதும், சக்தி வாய்ந்ததுமான என்னுடைய மாயையை கடப்பது அரியது, எவன் ஒருவன் என்னையே சரண் அடைகிறானோ அவனே இந்த மாயையை தாண்டுவான். - பகவத்கீதை (7.14.)

**37. ஸந் நாபி அஸந் நாபி உபயாத்மிகா நோ**
**பின்னாபி அபின்னாபி உபயாத்மிகா நோ |**
**ஸாங்காபி அனங்கா ஹி உபயாத்மிகா நோ**
**மஹாத்புதா அநிர்வசனீய ரூபா ||**

**விளக்கம்**

அனைத்தும் (மாயா, அவித்யா போன்றவைகள்) இருக்கின்றது என்றும் கூறமுடியாது. அது இல்லை என்றும் கூறமுடியாது. ஸத், அஸத் என இரண்டினுடைய தன்மை இருக்கின்றது என்றும் கூறமுடியாது.

பகுக்கப்பட்டதாகவோ, பகுக்கப்படாததாகவோ அல்லது இருவகைப்பட்டதாகவோ அது இல்லை. அங்கங்கள் உள்ளதாகவோ, அங்கங்கள் இல்லாததாகவோ, அல்லது இருவைகப்பட்டதாகவோ இல்லை. மிகவும் ஆச்சரியமான, இப்படிபட்டதென்ற ரூபம் உடையது என்றும் கூறமுடியாது.

இந்த உலகம் பரப்பிரம்மத்தினிடத்திலிருந்து வேறுபட்டது என்றால் பரப்பிரம்மத்தை தனியாக காட்டவேண்டும். பிரம்மம் தனி இந்த உலகம் தனி என்ற துவைதம் வந்தால் இருத்தல் என்ற நிலை உண்மையாகாது.

இருத்தல் என்ற தன்மை எதனிடத்தில் இருக்கின்றதோ அது பரப்பிரம்மம். எதெல்லாம் இருக்கு என்று கூறுகிறோமோ அது எல்லாம் பரப்பிரம்மம் ஆகும்.

இருத்தலை எடுத்துவிட்டால் அதன்பிறகு எதை காட்டமுடியும்.

உதாரணமாக நகைகள் இருக்கின்றன. நகைகளிலிருந்து தங்கத்தை எடுத்துவிட்டு நகையை மட்டும் வைத்துக்கொள்கிறேன் என்றால் அங்கு வைத்துக்கொள்வதற்கு என்ன இருக்கின்றது.

அதுபோல பிரம்மனே ஸத் ஸ்வரூபம், அந்த ஸ்த் ஸ்வரூபமான பிரம்மத்திடமிருந்து உலகத்தை வேறு படுத்தி காட்டமுடியாது.

அப்படி இந்த பிரபஞ்சம் அல்லது மாயை என்பது பிரம்மத்தினை காட்டிலும் வேறு என்று கூறமுடியாது. அப்படி சொன்னால் இந்த உலகத்தை வேறு எங்காவது பார்க்க வேண்டும். பிரம்மத்திற்கு அப்பாற்பட்டு நாம் பார்க்க வேண்டும். பிரம்மம் பூர்ணமானது.

சரி! அப்படியென்றால் பிரம்மமும், உலகமும் ஒன்றுதான் என்று கூறமுடியுமா? என்றால் அப்படியும் கூறமுடியாது.

காரணம் பிரம்மத்தை நாம் உணரும் பொழுது இந்த பிரபஞ்சம் பொய்யாகி விடுகிறது. அதுவும் சம்சார ரூபமான (அழியக்கூடிய) இந்த பிரபஞ்சமும், பிரம்மமும் ஒன்று என்றும் கூறமுடியாது. கயிற்றையும், பாம்பையும் எப்படி ஒன்று என்று கூறமுடியாதோ, அதுபோல இந்த உலகமும், பிரம்மமும் ஒன்று என்று கூறமுடியாது.

அப்படி ஒன்று என்று கூறிவிட்டால் இந்த உலகத்திலிருந்து நமக்கு நிவர்த்தியே கிடையாது. காரணம் துயர ஸ்வரூபமான இந்த உலகமே பிரம்மம் என்று சொன்னால் பிறகு நாம் எதற்கு பிரம்மத்தை அடையவேண்டும் எதற்கு இந்த வேதாந்தம் படிப்பது. இது தேவையற்றது ஆகிவிடும். ஆகவே மோட்சம் என்பதை அடையமுடியாதது ஆகிவிடும்.

எனவே, பிரம்மத்தினிடமிருந்து மாயை வேறுபட்டது என்றும் கூறமுடியாது, வேறுபடாதது எனவும் கூறமுடியாது. வேறுபட்டும், வேறுபடாமலும் இருக்கு என்றும் கூறமுடியாது. இப்படி குழப்பமாக தோன்றுவதற்கு காரணம் உண்மையில் இந்த உலகம் பொய்.

கயிற்றினுடைய ஒரு அங்கம்தான் பாம்பு என்று கூறமுடியாது. அல்லது அங்கம் இல்லை என்றும் கூறமுடியாது. அங்கம், அனங்கம் என்றும் கூறமுடியாது. இதுபோல இந்த மாயை என்பது பிரம்மத்தினுடைய ஒரு அங்கமா என்றால் அவ்வாறு கிடையாது.

பிரம்மத்தினுடைய அங்கம் இந்த மாயை கிடையாது. எந்த ஒன்றிற்கு உறுப்பு இருக்கோ அதற்கு தோற்றம் இருக்கும். அனால் மாயையை அனாதி என்பதால் அதற்கு தோற்றம் இல்லை. எதற்கெல்லாம் தோற்றம் இல்லையோ அவைகளெல்லாம் உறுப்புக்கள் (கை, கால் போன்ற அங்கங்கள்) கொண்டவையாக இருக்கமுடியாது.

மாயையை உறுப்புடன் கூடியது என்று கூறமுடியாது. சரி அப்படியென்றால் உறுப்பற்றது என்று கூறமுடியுமா? என்றால் அப்படியும் கூறமுடியாது. காரணம், மாயையினுடைய மாற்றம்தான் இந்த உலகம் என்று கூறுவதால், அதற்கு அங்கங்கள் (உறுப்புக்கள்) இருக்கலாம் என தோன்றும்.

ஆனால், எதற்கு உறுப்பு இல்லையோ அது மாறாது. அப்படி பார்க்கையில் அங்கங்கள் உள்ளதுதான் மாறும். ஆனால் மாயையை அனாதி என்றும், தோற்றம் அற்றது என்றும் கூறினால் அதற்கு அங்கங்கள் (உறுப்புக்கள்) இல்லை என்பதாகும். மாயைக்கு இரண்டின் தன்மையும் இருக்கின்றது என்றும் கூறமுடியாது.

இந்த மாயை மஹா ஆச்சரியமானது, இந்த உலகமே மாயை என்பதால் ஆச்சரியமானதுதான். இதனை வாயால் விளக்கமுடியாது. ஏனெனில், உண்மையில் மாயை என்பது இல்லை, நம் அனுபவத்தில் இருப்பது போல தோன்றுகிறது.

மேலும் இந்த மாயையினால் கிடைத்த ஒருவனுடைய இந்த ஸ்தூல சரீரம் அனுபவிக்கும் இந்த உலகம், அவனுடைய ஸ்தூல சரீரத்திலிருந்து உயிர் பிரிந்து விட்டால் இந்த உலகமும், உற்றார் உறவினர்கள், நண்பர்கள் என்று அனைவரும் இருந்த இடம் தெரியாமல் அவனுக்கு மறைந்து போவது போல, பொய்யானது இந்த பிரபஞ்சம். அதாவது மித்யா ஆகும்.

இன்னொரு உதாரணம் கூட கூறலாம். திரையரங்கில் நாம் காணும் காட்சிகள் எவ்வளவு தத்ரூபமாக உண்மையில் விளங்குவதுபோல தோன்றினாலும், மின் இணைப்பு விடுபட்டதும், அங்கு ஒரு வெள்ளை நிற திரை மட்டுமே கண்ணிற்கு தெரியும். காட்சிகள் ஒன்றும் இருக்காது.

அதுபோல இந்த ஸ்தூலசரீரத்தில் உயிர் இருக்கும் வரை நம் அனுபவத்தால் இந்த உலகம் இருப்பது போல தெரிகிறது. * **“பிரம்மம் ஸத்தியம். ஜகத் (அனுபவத்தில் இருக்கின்ற மாயை) மித்யா”** என்பதுதான் முழு வேதாந்தமே ஆகும்.

**38. அவ்யக்தம் ஏதத் த்ரிகுணை: நிருக்தம்**
**தத்காரணம் நாம சரீரம் ஆத்மன: |**
**ஸுஷுப்தி: ஏதஸ்ய விபக்த்யவஸ்தா**
**ப்ரலீன ஸர்வேந்த்ரிய புத்தி வ்ருத்தி: ||**

**விளக்கம்**

மூன்று குணங்களினுடைய சேர்க்கையாக ஏற்கனவே கூறப்பட்ட வெளித்தோற்றத்திற்கு வராத இதைத்தான் ஆத்மாவினுடைய காரணசரீரம் என்ற பெயர் பெற்றது. ஸ்தூல சரீரமான இந்த உடலில் விழிப்பு நிலை அனுபவம் நமக்கு ஏற்பட்டு இந்த உலகத்தை நாம் அனுபவிப்போம்.

இதனை ஜாக்ரதா அவஸ்தா என்றும், இதுபோல இந்த உடலை மறந்து ஸூக்ஷ்ம சரீரத்தில் கனவு நிலை

ஏற்பட்டு கிடைக்கும் அனுபவம் ஸ்வப்ன அவஸ்தா என்றும், ஸ்தூலசரீரத்தில் ஏற்படும் அனுபவத்தை விட்டு, ஸூக்ஷ்ம சரீரத்தில் ஏற்படும் அனுபவத்தை விட்டு அப்பொழுது நாம் அனுபவிக்கும் அவஸ்தை ஆழ்ந்த உறக்கம் ஆகும்.

இதனையே **ஸுஷுப்தி அவஸ்தா** என்கிறோம்.

இவைகள் மூன்றையும் **"அவஸ்தாத்ரையம்"** என்கின்றோம்.

காரண சரீரத்திற்கு கிடைக்கும் ஆழ்ந்த உறக்க நிலை அனுபவம் அனைத்து இந்திரியங்களும், எண்ணங்களும் ஒடுங்கிய நிலை. ஸ்தூல சரீரம் ஜடத்தைப் போலவும், ஸூக்ஷ்ம சரீரம் காரண சரீரத்தில் ஒடுங்கிய நிலை ஆகும். இந்த ஸுஷுப்தி நிலை காரண சரீர அனுபவம் மட்டுமே ஆகும்.

**5 - வது கேள்வி: அனாத்மா என்றால் என்ன?**

சூட்சமமான, ஸ்தூலமான இந்த உலகம் வர காரணமாக இருந்த இந்த காரண சரீரம் அல்லது மாயா என்பது அனாத்மா என்று பார்த்தோம்.

இவ்விதம் நாம் பார்த்து அனுபவிக்கின்ற அனாத்மாக்கள் மூன்றையும் சேர்த்து, இதனுடைய தத்துவம் என்ன? என்று பார்த்ததில், இது ஆத்மாவைப்போன்று என்றும் உள்ளதா என்று

விசாரித்தால், இந்த அனாத்மாவை இருக்கின்றது என்றோ, இல்லை என்றோ அல்லது பரம்பொருளுக்கு வேறாக இருக்கின்றது என்றோ, அல்லது பரம்பொருளோடு ஒன்றாக இருக்கின்றது என்றோ அல்லது பரம்பொருளினுடைய அங்கமாக இருக்கின்றது என்றோ கூறமுடியாது என அறிந்தோம்.

காரணம் இது அநிர்வசனீய ரூபம் (வார்த்தைகளால் விளக்க முடியாதது) என பார்த்தோம்.

இந்த உலகத்தில் அனுபவிப்பதை இருக்கின்றது என்றும், அனுபவிக்காததை இல்லை என்றும் கூறிவருகின்றோம். வேதாந்தத்தில் நாம் பார்க்கப்பட்ட பாம்பானது அனுபவிக்கப்படுகிறது, ஆனால் உண்மையில் இல்லை.

எது அனுபவிக்கப்படுகிறதோ ஆனால் உண்மையில் இல்லையோ அவைகள் மித்யா எனப்படுகிறது. அப்படி நாம் அனுபவிக்கப்படுகின்ற இந்த உலகம் உண்மையில் இல்லை.

**39. அத தே ஸம்ப்ரவக்ஷ்யாமி ஸ்வரூபம் பரமாத்மன: |**
**யத்விஜ்ஞாய நரோ பந்தாத் முக்த: கைவல்யம் அச்னுதே ||**

**விளக்கம்**

## 6 - வது கேள்வி: பரமாத்மா என்றால் என்ன?

இந்த ஸ்லோகத்தில் பரமாத்மா என்றால் என்ன என்ற கேள்விக்கு பதில் சொல்லப்போகிறேன் என ஆசிரியர் ஆரம்பிக்கிறார்.

அனாத்மாவைப்பற்றி இதுவரை விளக்கிய பிறகு, இனி உனக்கு பரமாத்மாவினுடைய ஸ்வரூபம் பற்றி கூறப்போகிறேன். எந்த பரமாத்ம தத்துவத்தை தெளிவாக அறிந்து கொண்டு பந்தத்திலிருந்து விடுதலை அடைவானோ அவன் பரம்பொருளை அடைவான்.

இந்த பரமாத்மாவினுடைய ஞானத்தினால் ஒருவன் எதை அடையப்போகிறான் என்ற பிரயோஜனத்தையும் கூறி உள்ளார். இந்த ஞானத்தின் பலனை அடைவதைப் பற்றி கூற வேண்டுமானால் ஆத்ம, அனாத்ம வேறுபாடு தெரிந்து கொண்டால்தான் அவன் விவேகமுடையவன் ஆவான்.

**40. அஸ்தி கச்சித் ஸ்வயம் நித்யம் அஹம் ப்ரத்யய லம்பன: |**
**அவஸ்தா த்ரய ஸாக்ஷீ ஸன் பஞ்சகோச விலக்ஷண: ||**

**<u>விளக்கம்</u>**

நான் என்ற உணர்விற்கு ஆதாரமானதும் இயற்கையாக என்றும் உள்ளதுமாகிய ஒன்று இருக்கிறது. அது விழிப்பு, கனவு, உறக்கம் என்ற மூன்று நிலைகளுக்கும் சாக்ஷியாக இருந்து கொண்டு ஐந்து கோஷங்களிலிருந்தும் (அன்னமயம், பிராணமயம்,

மனோமயம், விஜ்ஞானமயம் மற்றும் ஆனந்தமயம்) வேறாக இருக்கிறது.

பரமாத்வினுடைய ஞானத்தை படிப்படியாகத்தான் இங்கு கூற உள்ளார். இதற்கு விஷாரம் அதிகம் தேவைப்படுகிறது. இதுதான் ஆத்மா என்று எடுத்த உடனே கூறினால் அது ஏற்புடையதாக இருக்காது என்பதால் ஆசிரியர் தெளிவாக இன்னும் புரியவைப்பார்.

**41. யோ விஜானாதி ஸகலம் ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்திஷு |**
**புத்தி தத்வ்ருத்தி ஸத்பாவம் அபாவம் அஹமிதி அயம் ||**

**விளக்கம்**

இந்த ஸ்லோகத்தில் அவஸ்தா த்ரய சாக்ஷி என்பதை ஆசிரியர் விளக்குகிறார்.

எந்த ஆ(பரமா)த்மாவானது அனைத்தையும் அறிகின்றதோ, விழிப்பு, கனவு, உறக்கம் என்கின்ற மூன்று அனுபவத்திற்குள் எவைகளெல்லாம் இருக்கின்றதோ அவைகளை அறிகின்றது.

இந்த உலகத்தில் இருக்கின்ற அனைத்து பொருட்களையும் அறிகின்றது.

ஆ(பரமா)த்மா என்பது இந்த உலகத்தை மட்டும் விளக்கவில்லை, இந்த உலகத்தை பார்த்து அனுபவிக்கும் மனதையும் விளக்குகிறது.

உண்மையில் ஜடமான மனமானது ஆத்மாவினுடைய இருப்பினால் ஒரு அறிவுத் தன்மையை அறிகிறது.

மனம் உறக்கத்தில் இருக்கும் பொழுது இந்த உலகமானது விளங்கவில்லை, மனம் விழித்துக் கொண்டிருக்கும் பொழுது இந்த உலகமானது விளங்குகிறது.

ஆத்மாவானது மனதிற்கு அறிவுத்தன்மையை கொடுத்து அந்த மனதின் மூலமாக உலகத்தை விளக்கி வருகின்றது.

அப்படியென்றால் மனதை (ஆதாவது மனதிற்குள் இருக்கின்ற விருப்பு, வெறுப்பு போன்றவைகளை) யார் விளக்கி வருகிறார்கள் என்றால் அதுவும் பரமாத்மாதான்.

அதுபோல, ஆழ்ந்த உறக்கத்தில் மனமே இல்லையே அதையையும் பரமாத்மாதான் சாக்ஷியாக இருந்து பார்த்துக் கொண்டு இருக்கின்றார்.

அவரே மனசாக்ஷியாகவும் இருக்கின்றார்.

புத்தி என்பது நம்முடைய அந்தக்கரணம், அதாவது ஸூக்ஷ்ம சரீரம் ஆக இருக்கின்ற மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் போன்றவைகள் ஆன இந்த புத்தியை பிரகாஷித்து வருகின்றது.

அந்த புத்தியில் எண்ணங்கள் இருக்கும். அந்த எண்ணங்களை பரமாத்மா பார்த்துக் கொண்டிருக்கின்றார்.

வெளி உலகத்தில் இருக்கின்ற பொருட்களை நாம் பார்ப்பதினால் தெரிந்து கொள்கிறோம்.

அந்த பொருள் இருப்பது நம் கண்ணை கொண்டு பார்ப்பதினால் அது இருக்கின்றது என்பது புத்தியை கொண்டு உறுதி செய்யப்படுவது போல, நம் மனதினில் தோன்றும் எண்ணங்களினால்தான் அனைத்தையும் அறிகிறோம் என்றால், அந்த எண்ணங்களின் இருப்பாக இருக்கும் புத்தியாக இருப்பவரும் பரமாத்மா ஆவார்.

விழிப்பு நிலையில் வெளி விஷயங்களை புத்தியின் மூலம் விளக்கிக் கொண்டு, புத்தியில் இருக்கின்ற எண்ணங்களையும் பரமாத்மா விளக்கிக் கொண்டிருக்கின்றது.

கனவு நிலையில் வெளி உலகம் இல்லை. மனதிற்குள்ளேயெ ஒரு உலகத்தை நாம் தோற்றுவிக்கின்றோம். நம்முடைய மனதினுடைய துணை கொண்டு ஒரு கனவு உலகத்தை உருவாக்கிக் கொண்டிருக்கிறோம். அந்த உலகத்தினையும் பரமாத்மா பிரகாஷப் படுத்திக்கொண்டிருக்கின்றது.

ஆகவே, கனவு நிலையிலும், விழிப்பு நிலையிலும் புத்தியையும், புத்தியில் இருக்கின்ற எண்ணங்களையும் விளக்குகின்றது.

இனி ஆழ்ந்த உறக்கத்தில் என்ன நேரிடுகின்றது என்றால் நம்முடைய புத்தியானது காரண சரீரத்தில் ஒடுங்கி உறங்கிக் கொண்டிருக்கின்றது. இந்த புத்தியினுடைய ஒடுக்கமான நிலையை பரமாத்மா விளக்கிக் கொண்டிருக்கின்றது.

இவ்வாறு நான், நான் என்று இருந்து கொண்டு அனைத்தையும் எவன் விளக்கிக்கொண்டிருக்கிறானோ இது தான் ஆ(பரமா)த்மா.

**42. ய: பச்யதி ஸ்வயம் ஸர்வம் யம் ந பச்யதி கச்சன |**
**ய: சேதயதி புத்த்யாதி ந தத் யம் சேதயதி அயம் ||**

**<u>விளக்கம்</u>**

இந்த ஸ்லோகத்தில் பரமாத்மாவினுடைய விளக்கம் வருகின்றது.

பரமாத்மா என்பது அறிவு ஸ்வரூபம் ஆனது. அனைத்தையும் அறிவு ஸ்வரூபம் ஆக்கி இந்த உலகத்தை பார்க்கவைத்துக்கொண்டு இருக்கிறது.

உண்மையில் நம்முடைய ஸ்தூல உடலும், இந்த பிரபஞ்சமும் ஜடமோ, அதுபோல இந்த ஸ்தூல உடலும், பிரபஞ்சமும் பஞ்ச பூதங்களின் சேர்க்கை.

இவைகளெல்லாம் ஜடமாகவேதான் இருக்கிறது.

ஆனால் ஜடமாக இருந்தாலும் இந்த உடலிலும், மனதிலும் மற்றும் பிரபஞ்சத்திலும் ஒரு அறிவுத்தன்மையை நாம் பார்க்கிறோம்.

இங்கு பரமாத்மாதான் இந்த உடலுக்கும், மனதிற்கும் சேதனத்துவம் என்ற அறிவுத்தன்மையை கொடுத்து மனதின் மூலமாக உலகத்தை பார்த்து வருகிறார்.

இவ்வாறு பரமாத்மா ஆறிவு ஸ்வரூபமாக இருந்து மனதின் மூலமாக இந்த உலகத்தை பிரகாஷப் படுத்திக்கொண்டிருக்கிறார் என்றால் பரமாத்மாவை யார் பிரகாஷப் படுத்துகிறார்கள்? என்ற கேள்வி வரும்.

உண்மையில் பரமாத்மா ஸ்வயம் பிரகாஷம் என்பதால் அதனை யாரும் பிரகாஷப்படுத்த முடியாது. இதனை சாஸ்திரத்தில் பரமாத்மாவை **ஸ்வயம் ஜோதி:** என்று கூறுகிறார்கள்.

அது ஸ்வயப்பிரகாஷமாக இருப்பதால் அதனை பார்ப்பதற்கு வேறு யாரும் கிடையாது.

எவன் தானாகவே அனைத்தையும் பார்க்கிறானோ, எவனை வேறெதுவும் பார்க்க இயலாதோ, எவன் புத்தி, மனம் முதலியவற்றை பிரகாஷிக்கிறானோ, எவனை வேறு எதுவும் பிரகாஷிக்க முடியாதோ அவன் தான் இந்த ஆ(பரமா)த்மா.

**43. ப்ரக்ருதி விக்ருதி பின்ன: சுத்த போத ஸ்வபாவ:**
**ஸதஸதிதம் அசேஷம் பாஸயன் நிர்விசேஷ: |**
**விலஸதி பரமாத்மா ஜாக்ரதாதிஷு அவஸ்தாஸு**
**அஹம் அஹமிதி ஸாக்ஷாத் ஸாக்ஷி ரூபேண புத்தே: ||**

**விளக்கம்**

காரண (பிரக்ருதி) காரியத்திற்கு (விக்ருதி) அப்பாற்பட்டு இருக்கிறது. காரியமாகவும், காரணமாகவும் இல்லை, காரண காரியத்திற்கு அப்பாற்பட்டு வேறாகவும் இருக்கிறது. இங்கு காரணம் என்பது மாயை, காரியம் என்பது சூட்சும சரீரம் அல்லது சூட்சும பிரபஞ்சம் ஆகும்.

தூய்மையான அறிவு சொருபமான ஸ்வரூபம், அதாவது சைதன்ய ஸ்வரூபம். அறியாமை கலக்காத அறிவு சுபாவமாக இருப்பதே ஆ(பரமா)த்மா ஆகும்.

இங்கு **சத்** என்ற கண்ணுக்கு தெரிகின்றது, **அசத்** என்ற கண்ணுக்கு தெரியாதது எனலாம். அதாவது சத் என்பது வெளித்தோற்றத்திற்கு வந்தது, அசத் என்பது வெளித்தோற்றத்திற்கு வராதது என்பது பொருள்.

சத்தாகவும், அசத்தாகவும் இருக்கின்ற அனைத்தையும் விளக்கிக்கொண்டு இருக்கிறது. தான் எந்த விதத்திலும், காரணமாகவும், காரியமாகவும் இல்லாமல் நிர்குண ஸ்வரூபமாக இருக்கிறது.

மூன்று அவஸ்தைகளிலும் (ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி) பிரகாஷமாக நான், நான் என்று நேரடியாக, புத்தியை சாட்சி ரூபமாக பார்த்துக்கொண்டு விளங்கிக்கொண்டு பரமா(ஆ)த்மா இருக்கிறது.

**பரமா(ஆ)த்மா என்றால் என்ன?**

ஒவ்வொரு ஜீவனும், ஆத்மா, அனாத்மா என்ற இரண்டு தத்துவத்தின் சேர்க்கை ஆகும். நம்முடைய ஸ்தூல, ஸூட்சும சரீரங்களை அனாத்மா என்றும், அறிவு ரூபமாக நான், நான் என்று கூறிக்கொண்டு இருப்பது ஆ(பரமா)த்மா என பார்த்தோம். இந்த அறிவைத்தான் பரமாத்மா என்று கூறுகிறார்.

உண்மையில் அனாத்மாவான இந்த உடலை விளக்கிக்கொண்டு, அறிவு ஸ்வருபமாக நம்முள் இருந்து நான், நான் என்று இந்த உலகத்தை பார்த்துக்கொண்டு இருப்பதுதான் பரமா(ஆ)த்மா ஆகும்.

இதனைத்தான் **“அஹம் பிரம்மாஸ்மி”** மற்றும் **“தத்துவமஸி”** என வேதம் நமக்கு புரிய வைக்க முயற்சிக்கின்றது.

ஆனால் நாம் அதை புரியாமல் அறிவு ஸ்வரூபமான பரமா(ஆ)த்மாவையும், உடலான இந்த அனாத்மாவையும் ஒன்றாக பாவித்து நான் என்ற அஹங்காரத்தில் திளைத்திருக்கிறோம்.

இந்த ஆத்மா, அனாத்மாவை எப்படி பிரித்து அறிவது என்பதை இனியும் பார்க்கலாம்.

**முதலாவது கேள்வி : - பந்தம் என்பது என்ன?**

**44. அத்ரானாத்மன் யஹமிதி மதி: பந்த: ஏஷோஸ்ய பும்ஸ:**
**ப்ராப்தோ ஜ்ஞானாத் ஜனன மரண க்லேச ஸம்பாத ஹேது: |**
**யேனைவ அயம் வபு: இதம் அஸத் ஸத்யமிதி ஆத்மபுத்த்யா**
**புஷ்யதி உஷதி அவதி விஷயை: தந்துபி: கோசக்ருத்வத் ||**

**விளக்கம்**

இங்கு ஆத்மாவாகிய நான் அனாத்மாவாகிய உடலை நான் என்று நினைக்கும் எண்ணம்தான் பந்தம் என்பதாகும் இந்த ஜீவனுக்கு இதுதான் பந்தம். மற்றபடி யாரும் நம்மை கயிற்றினால் கட்டி பந்தப்படுத்துவதை அல்ல.

இந்த பந்தமானது அஞ்ஞானத்தினால் (அறிவின்மையால்) வந்து சேர்ந்துள்ளது. பிறப்பு, இறப்பினால் ஏற்படும் துயரங்களுக்கு காரணம் இந்த அறியாமைதான்.

பொய்யான இந்த உடலை உண்மை என்று நம்பி, நான் என்ற எண்ணத்துடன், தினமும் உணவை உண்டும், குளிப்பாட்டியும் பாதுகாத்து வருகின்றான்.

இது எப்படி இருக்கிறது என்றால், பட்டுப்புழுவானது தன்னை பாதுகாக்க நூலினால் ஒரு கூட்டை பின்னி, பிறகு அந்த கூட்டிலிருந்து வெளி வர இயலாமல் அழிந்து விடுகிறதோ, அதுபோல உலக விஷயங்களினால் பாதுகாப்பை தேடுபவன் பிறகு அதனாலேயே அழிந்து விடுகிறான்.

இந்த அனைத்து பிரச்சனைகளுக்கும் அறியாமைதான் காரணம் என்பதினால் முதலில் அறியாமை நீங்கி அறிவு வரவேண்டும் என்பதற்காகவே ஆசிரியர் மிகவும் முயற்சிக்கிறார்.

**இரண்டாவது கேள்வி: -**

## இது (பந்தம்) எப்படி வந்தது?

**45. அகண்ட நித்யாத்வய போத சக்த்யா**
**ஸ்புரந்தம் ஆத்மானம் அனந்த வைபவம் |**
**ஸமாவ்ருணோதி ஆவ்ருதி சக்தி: ஏஷா**
**தமோமயீ ராஹு: இவார்க்க பிம்பம் ||**

**விளக்கம்**

இந்த பந்தம் அறியாமையினால் வந்தது. இந்த அறியாமை அனாதி காலமாக இருக்கிறது.

இங்கு அறியாமையின் தன்மையை இந்த ஸ்லோகத்தில் விளக்கி, இந்த அறியாமை எப்படி பந்தத்தை கொடுக்கிறது என்றும், இந்த அறியாமையின் தன்மை என்ன? என்றும் இனி பார்க்கலாம்.

அறியாமைக்கு இரண்டு சக்தி இருக்கிறது. ஒன்று மறைக்கின்ற தன்மை, இரண்டாவது ஏற்றி வைக்கின்ற தன்மை. மறைக்கின்ற சக்திக்கு ஆவரண சக்தி அல்லது ஆவிருக்தி என்றும், அடுத்து, ஏற்றி வைக்கின்ற சக்தி அல்லது படைக்கின்ற சக்திக்கு விட்சேப சக்தி என்றும் கூறுகிறார்.

உதாரணமாக கயிறு இருக்கின்றது, நம்முடைய அறியாமையானால் அதனை பாம்பு என்று நினைத்துக்கொள்கிறோம். இங்கு கயிற்றின் மீது பாம்பை ஏற்றிப்பார்ப்பது விட்சேப சக்தி எனவும், கயிற்றை மறைக்கின்ற சக்திக்கு ஆவரண சக்தி எனவும் கொள்ளலாம்.

அதுபோல இந்த அறியாமை இருக்கின்றதே அது ஆ(பரமா)த்மாவை நமக்கு தெரியாமல் மறைக்கின்றது. இதில் மறைத்தல் மட்டும் நடைபெற்றிருந்தால் நமக்கு துன்பங்கள் வராது. ஆனால், ஆத்மவின் மீது ஆத்மாவினிடத்தில் இல்லாத தன்மைகளையெல்லாம் ஏற்றி வைக்கின்றது.

சூரியன் மேகத்தினால் மறைக்கப்பட்டு இருக்கிறது என்பதற்காக மேகம் சூரியனை விட பெரியது என்று எடுத்துக்கொள்ள முடியாதோ, அதுபோல, அறிவு ஸ்வரூபமான ஆத்மாவை அறியாமை மறைக்கின்றது என்பதற்காக, அறியாமை என்பது ஆத்மாவை விட பெரியது என எடுத்துக்கொள்ளக்கூடாது.

ஆக, இந்த இரண்டு சக்திகளினால்தான் மனிதன் பந்தப்பட்டுக் கொண்டிருக்கின்றான். அதாவது துயரப்பட்டுக் கொண்டிருக்கின்றான் என ஆசிரியர் இங்கு தெளிவு படுத்துகின்றார்.

இந்த ஸ்லோகத்தில் மறைக்கின்ற சக்தியைப்பற்றியும், அடுத்துவரும் ஸ்லோகத்தில் ஏற்றி வைக்கின்ற சக்தியைப் பற்றியும் ஆசிரியர் கூறுகிறார்.

பிளவுபடாததும், என்றுமுள்ளதும், இரண்டற்றதுமான, ஞானசக்தியுடன் (அறிவு ஸ்வரூபமாக) பிரகாஷிக்கும், இப்படிப்பட்ட எங்கும் நிறைந்த அளவு கடந்த பெருமை வாய்ந்த ஆத்மாவை, தமோ மயமான அறியாமை கொண்ட இந்த ஆவரண சக்தியானது சூரியனை ராகு மறைப்பது போல மறைக்கின்றது.

**46. திரோபூதே ஸ்வாத்மனி அமலதர தேஜோவதி புமான்**
**அனாத்மானம் மோஹாத் அஹமிதி சரீரம் கலயதி |**
**த்த: காம க்ரோத ப்ரப்ருதிபி: அமும் பந்தன குணை:**
**பரம் விஷேபாக்யா ரஜஸ: உருசக்திர் வ்யதயதி ||**

**விளக்கம்**

அதாவது கயிற்றினுடைய தன்மையை மறைப்பது ஆவரண சக்தி என்றும் அதைத்தொடர்ந்து கயிற்றை பாம்பாக காட்டுவது விட்சேப சக்தி என்றும் பார்த்தோம்.

தூய்மையான அறிவு ஸ்வரூபமான ஆத்மாவானது மறைக்கப்படும் பொழுது, மனிதன் அனாத்மாவான இந்த உடலை மோகத்தினால் நான் என்று எண்ணுகின்றான். அதைத்தொடர்ந்து, ஆசை, கோபம் போன்ற கட்டுப்படுத்தும் குணங்களால் இவனை விட்சேப சக்தியானது துயரப்படுத்துகிறது.

உடலை நான் என்று நினைத்த மாத்திரத்தில் இந்த உலகை நாம் விருப்பு, வெறுப்பு, பொறாமை போன்ற குணங்களை உண்டாக்கிக்கொண்டு இவைகளினால் நாம் பந்தப்படுகிறோம்.

ஆழ்ந்த உறக்கத்தில் இந்த உடலின் மீது நமக்கு அபிமானம் இல்லாததால், இந்த உலகம் நமக்கு தெரிவதில்லை. ஆனால் விழித்தவுடன் இந்த உலகத்தைப்பார்ர்க்கிறோம், உடனே நமக்கு அனைத்து பந்தங்களும் உண்டாகின்றது.

இந்த உலகத்தைப் பார்த்து என்னுடைய துயரத்திற்கு காரணம் என்னைச்சார்ந்த என்னுடைய உற்றார் உறவினர்கள், நண்பர்கள், என்னுடைய சகோதர சகோதரிகள் அல்லது இந்த சமுதாயம், அல்லது இந்த அரசாங்கம் என அறியாமையினால் மற்றவர்களின் மீது

பழியை சுமத்திக்கொண்டு துயரத்திற்கு ஆட்பட்டு கிடக்கிறோம். இதிலிருந்து மீளவும் வழி அறியாமல் தவிக்கிறோம்.

ஆக, அனாத்மாவான இந்த உடலை நான் என்று நினைப்பதினால்தான் இந்த துயரங்கள் அனைத்துமே உண்டாகின்றன. தன்னை ஆத்மா என அறிந்தவனுக்கு இந்த துன்பங்கள் எதுவுமே கிடையாது.

இத்தகைய துன்பங்களிலிருந்து மீள ஒரே வழி வேதாந்தம் படிப்பதினால் மட்டுமே சாத்தியம் ஆகும்.

**“நான் யார்”** என்ற அறிவை வேதத்தின் கடைசிப்பகுதியான ‘வேதாந்தம்’ கொடுக்கிறது.

இந்த உலகம்தான் இந்த துயரத்திற்கு காரணம் என்று நினைப்பவர்களிடம் வேதாந்தம் பேசினால், இந்த வேதாந்தம் எல்லாம் வயதானவர்களுக்குத்தான் தேவைப்படும் எங்களைப்போன்ற இளைஞர்களுக்கு தேவைப்படாது அல்லது வேலையில்லாத கடைசி காலத்தில் பார்க்கலாம் எனஅனைத்து துன்பங்களையும் அனுபவித்துக்கொண்டே கூறுவார்கள்.

இளமையிலேயே இதனை அறிந்து இந்த துன்பங்கள் அற்ற மன நிலையில் அனைவரையும் நேசித்து ஆனந்த மயமான வாழ்க்கையை வாழலாம் என தெரியாமல் அறிவற்றவர்களாக இருக்கிறார்கள்.

இதற்கு காரணம் அவர்கள் உடலின் மீது வைத்துள்ள **'நான்'** என்ற அபிமானம்தான் காரணம்.

வேதாந்தத்தின் உள்ளே நுழைய முதல் தகுதியே விவேகம் **(அறிவு)** வேண்டும்.

**47. ஏதாப்யாமேவ சக்திப்யாம் பந்த: பும்ஸ: ஸமாகத: |**
**யாப்யாம் விமோஹிதோ தேஹம் மத்வாத்மானம் ப்ரமத்யயம் ||**

**விளக்கம்**

ஆவரண சக்தி மற்றும் விட்சேப சக்தி என்ற இந்த இரண்டு சக்திகளினால் மனிதனுக்கு பந்தம் வந்துள்ளது. இவற்றினால் விஷேசமான மோகத்தை அடைந்தவன் இந்த உடலை ஆத்மா என்று நினைத்து இவன் மதி மயக்கத்தினால் அலைகிறான்.



## சம்ஸார விருக்ஷம்

================

**48. பீஜம் ஸம்ஸ்ருதி பூமிஜஸ்ய து தமோ தேஹாத்ம தீ: அங்குரோ ராக: பல்லவம் அம்பு கர்ம து வபு: ஸ்கந்தோऽஸவ: சாகிதா: | அக்ராணீந்திரிய ஸம்ஹதிச்ச விஷயா: புஷ்பாணி து:க்கம் பலம் நானாகர்ம ஸமுத்பவம் பஹுவிதம் போக்தாऽத்ர ஜீவ: கக: ||**

**<u>விளக்கம்</u>**

பிறப்பு இறப்பு என்ற தொடர் நிகழ்வுக்கு காரணமான சம்ஸாரம் என்ற மரத்திற்கு விதை எதுவெனில், அது அஞ்ஞானம் என்ற அறியாமை ஆகும். இங்கு அறியாமை என்பது ஆத்ம அனாத்ம வேறுபாடு தெரியாத அறியாமையை கூறப்படுகிறது.

இந்த ஸ்லோகத்தில் அறியாமையின் அங்கங்களை ஒரு மரத்திற்கு ஒப்பிட்டு விளக்கம் கொடுக்கப்படுகிறது.

விதையிலிருந்து முதலில் வெளிப்படுகின்றது முளை ஆகும். அதுபோல இந்த உடலை ஆத்மா என்று நினைத்தலே அறியாமையின் முதல் தவறு என இங்கு கூறப்படுகிறது.

அடுத்து விதை முளைத்து துளிர் விடுவதை உடலின் மீது கொண்டுள்ள பற்று (ஆசை) என்றும், ஒரு விதை நன்கு வளர தண்ணீர் எப்படி

தேவைப்படுகிறதோ, அதுபோல இந்த சம்ஸாரத்திற்கு நம்முடைய கர்ம வினைகள்தான் காரணம் என்கிறார்.

அதாவது ஒரு மரம் நன்கு வளர தண்ணீர் காரணமாக இருப்பது போல நம்முடைய சம்ஸாரம் என்கின்ற துயத்திற்கு காரணம் நாம் செய்த பாவ, புண்ணியங்கள் காரணமாகின்றன என இங்கு கூறுகிறார்.

அடுத்து மரத்தினுடைய நடுப்பகுதியானது ஜீவர்களினுடைய ஸ்தூல சரீரத்தை குறிப்பிடுகிறது.

அடுத்து கிளைகள் இருந்தால்தான் ஒரு மரமானது சுவாசித்து உயிர் வாழ முடியுமோ, அதுபோல, பிராணன்கள் இருந்தால்தான் இந்த உடலானது சுவாசித்து உயிர் வாழ முடியும் என மரங்களின் கிளைகளை பிராணனுடன் ஒப்பிடுகிறார்.

இனி அடுத்து, கிளையில் இருக்கின்ற நுனிப்பகுதியை நம்முடைய இந்திரியங்களுடன் (ஐம்புலன்கள்) ஒப்பிடுகிறார்.

அடுத்து மரங்களில் காணப்படுகின்ற நம்மை கவர்கின்ற அழகான மலர்களை, இந்த உலகியல் வாழ்வில் நம்மை கவர்கின்ற பல்வேறு விஷயங்களுடன் ஒப்பிடுகிறார்.

மேலும் ஒரு ஜீவனுக்கு வருகின்ற சுக, துக்கங்களை மரங்களிலிருந்து பெறப்படுகின்ற பழங்களுடன் ஒப்பிடுகிறார்.

இவ்வாறு பலவிதமான சுக துக்கங்களுக்கு காரணம் பலவிதமான நம்முடைய கர்மத்தினால் வருகின்றது என கூறுகிறார்.

மரத்தின் மீது பறவைகள் அமர்ந்து அதில் உள்ள பழங்களை சாப்பிடுவது போல, இந்த மனிதன் சம்ஸாரம் என்ற மரத்தில் அமர்ந்து இந்த பழங்களை அனுபவித்து உண்ணுகிறான்.

இதுபோல, விதை, துளிர், கிளைகள் மற்றும் தண்ணீர் கொண்டு இந்த மரமானது எப்படி வேறுன்றி இருக்கிறதோ, அதுபோல பல கர்மபலன்களை கொண்டு இந்த சம்ஸாரம் என்ற மரம் வேறுன்றி இருக்கிறது.

இவ்வாறு சம்ஸாரம் என்ற பந்தம் எப்படி வந்தது என்ற கேள்விக்கு கர்மபலன்கள்தான் காரணம் என்று ஆசிரியர் இங்கு பதில் அளிக்கிறார்.

குறிப்பு:-

இந்த ஸ்லோகத்துடன் ஒப்பிட்டு பகவான் ஸ்ரீகிருஷ்ணர் பகவத்கீதையில் 15 - வது அத்தியாயத்தில் இதுபோல கூறியுள்ளதையும் இங்கு காணலாம்.

சம்சார மரத்திற்கு அறியாமையினால் உண்டான அஹங்காரம், மமகாரம், வாசனைகள் என்ற வேர்கள், அனாதி காலமாக ஊட்டம் பெற்று வந்திருப்பதால் மிக உறுதியாக உள்ளன.

அந்த வேர்கள் அடியோடு வெட்டி எறியாதவரை இந்த சம்சார மரத்தை அழிக்க முடியாது.

மரத்தின் மேற்பகுதிகளை வெட்டினாலும், அதாவது வெளிப்படையாக உலக சம்பந்தத்தை தியாகம் செய்தாலும், அஹங்கார - மமகார - வாசனைகளைத் தியாகம் செய்யாத வரையில், சம்சார மரத்தை அடியோடு அழிப்பதாகாது.

இதைத்தான் அந்த வேர்களை அடியோடு வெட்டி அழிப்பது கடினமான செயல் என்கிறார்.

இந்த சம்சார மரத்தின் வேர்களை அடியோடு வெட்டி ஏறிவது என்பது விவேகம் என்ற அறிவைக்கொண்டு வைராக்கியம் என்ற கோடரி ஆயுதத்தினால் மட்டுமே சாத்தியம் ஆகும்.

ஆகவே, விவேகம், வைராக்கியம் மிகவும் அவசியம் என்று இங்கு போதிக்கப்படுகிறது.

**49. ச்ருதி ப்ரமாணைகமதே: ஸ்வதர்ம**
**நிஷ்டா தயைவ ஆத்ம விசுத்தி: அஸ்ய |**
**விசுத்த புத்தே: பரமாத்ம வேதனம்**
**தேனைவ ஸம்ஸார ஸமூல நாச: ||**

**<u>விளக்கம்</u>**

சம்ஸார விருக்ஷத்தை வீழ்த்தி மோட்சம் அடைய வேண்டுமென்றால் ஒருவன் ஆரம்பத்திலிருந்து செல்ல வேண்டிய சரியான பாதை என்ன?

**“சரியான பாதையை அறிந்தால் மட்டும் போதாது, அந்த பாதையில் செல்ல சரியான முயற்சியும் வேண்டும்”.**

சரியான பாதையில் செல்ல முதல் அடி எடுத்து வைத்தல் என்பதே நம்முடைய கடமையில் இருந்து தான் ஆரம்பிக்க வேண்டும். கடமை தவறாமைதான் மிக முக்கியம் என்கின்றது.

ஒவ்வொருவரும் தனது கடமையை பகவான் கொடுத்த பிரசாதமாக செய்வதில்லை. ஒருவன் தனது கடமையில் சரியாக இருக்க வேண்டுமென்றால், அவனுக்கு வேதத்தின்மீது நம்பிக்கை இருக்கவேண்டும்.

இந்த வேத சாஸ்திரமானது உலகியலில் ஒருவன் எப்படி இருக்க வேண்டும் என போதிக்கின்றது. ஒருவன்

எதை செய்யக்கூடாது, எதை செய்ய வேண்டும் என சரியான வழியை காட்டுகிறது.

அதாவது பொய் சொல்லாதே, திருடாதே, மது அருந்தாதே, புலால் உண்ணாதே போன்றவைகளையும், பிறருக்கு உதவி செய், மற்ற உயிரினங்களையும் அன்புடன் நேசி, நல்லதே பேசு போன்ற பல்வேறு உபதேசங்களை கூறி இதன் மூலமாக வரும் பாவ, புண்ணியங்களினால் கிடைக்கும் பலன்கள் ஒருவனை எப்படி சம்ஸாரத்தில் மூழ்கடிக்கின்றது எனவும், அதிலிருந்து எப்படி விடுபடுவது எனவும் வழி காட்டுகிறது.

ஒருவன் தனது கடமையில் சரியாக இருக்க அவன் வேதத்தின் வழி நடக்கவேண்டும் எனவும், அதாவது கர்மயோகத்தின்படி அவன் வாழ்க்கையை வாழ்ந்து, கடமையை சரியாக செய்தால் இவனுக்கு என்ன பலன் கிடைக்கும் என்றால் மனதிற்கு தூய்மை ஏற்படும் எனவும், அதனால் மனதில் இருக்கின்ற அழுக்குகளான காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் போன்ற விருப்பு, வெறுப்புக்கள் எல்லாம் சென்றுவிடும்.

இந்த அறியாமை நீங்கினால் விவேகம் வரும். மோகம் நீங்கினால் வைராக்கியம் வரும். இந்த வைராக்கியத்தினால் அவன் ஞான யோகத்தை மேற்கொண்டு, பரமாத்மாவைப்பற்றிய அறிவை (ஞானத்தை) உண்டாக்கிக்கொள்வான். இந்த ஞான

நிஷ்டையின் மூலமாகத்தான் அவன் சம்ஸாரத்தினை அழிக்க முடியும்.

இதில் வேடிக்கை என்னவென்றால் நம்முடைய வாழ்க்கையின் இலட்சியம் என்ன என்பதே பெரும்பாலானவர்களுக்கு தெரியாது என்பதுதான்.

நாம் எதற்காக முயற்சி செய்ய வேண்டும், எதை அடைய வேண்டும் என்கின்ற அறியாமை மற்றும் ஆர்வமின்மையே இதற்கு முக்கிய காரணம் ஆகும்.

ஆக, ஒருவன் சாஸ்திரம் கூறியபடி வாழ நினைத்தால் அவனது வாழ்வில் அறியாமை நீங்கி முமுக்ஸுத்வம் உண்டாகும்.

## ஏழாவது கேள்வி:-

================

**பரமா (ஆ) த்மாவையும், அனாத்மாவையும் பிரித்து அறிவது எப்படி?**

50. **முஞ்ஜாத் இஷீகாமிவ த்ருச்ய வர்க்காத்**
**ப்ரத்யஞ்சம் ஆத்மானம் அஸங்கம் அக்ரியம் |**
**விவிச்ய தத்ர ப்ரவிலாப்ய ஸர்வம்**
**ததாத்மனா திஷ்டதி ய: ஸ முக்த:**

**விளக்கம்**

ஆத்மாவையும், அனாத்மாவையும் பிரித்தல் என்பது இங்கு கூறப்படுகிறது. இந்த ஸ்லோகத்தில் உதாரணமாக கூறப்படுவது முஞ்ஜாத் என்கின்ற ஒரு விதமான புல் இருக்கின்றது. அந்த புல்லிற்கு இஷிகா என்ற தண்டு உள்ளது.

அந்த புல்லானது மிக மிக கூர்மையாக இருக்கும் கவனமில்லாமல் கையாண்டால் அது நம் கையை அறுத்துவிடும். இதில் முஞ்ஜாத் என்ற புல்லிலிருந்து இஷிகா என்ற தண்டை எவ்வாறு கவனமாக பிரித்தெடுக்க வேண்டுமோ, அதுபோல நம்மால் அனுபவிக்கப்படுகின்ற உடலிலிருந்து மிக மிக அருகில் இருக்கின்ற, உடலோடு சம்பந்தப்படாத, எந்த செயலும் செய்யாத ஆத்மாவை கவனமாக அனாத்மாவிலிருந்து பிரித்தெடுக்க வேண்டும் என்று கூறுகிறார்.

எப்படி என்றால் அனாத்மா என்கின்ற மூன்று சரீரங்கள் வேறு, நான் என்ற ஆத்ம தத்துவம் வேறு என்று பிரித்து புரிந்து கொள்ளவேண்டும். இது முதல் படி.

இரண்டாவதாக கூறுகின்றார் இந்த அனாத்மாவை தனியாக பிரித்தாலும், அனாத்மா என்ற ஒன்று ஆத்மாவிற்கு வேறாக இல்லை, இதை ஆத்மாவிற்குள் ஒடுக்க வேண்டும்.

இதை எப்படி புரிந்து கொள்ளலாம் என்றால், களிமண்ணால் செய்யப்பட்ட பானை தோற்றத்திற்கு எப்படி பானை வடிவத்தில் இருந்தாலும், அதனை

மீண்டும் அழித்து களிமண்ணாக மாற்றமுடியுமோ, அதுபோல ஆத்மாவிலிருந்து வந்த இந்த அனாத்மாவை மீண்டும் ஆத்மாவிற்குள் ஒடுக்கி விடுவது என்பது ஆகும்.

மூன்றாவது படியாக அனைத்து அனாத்மாவை ஆத்மாவிற்குள் ஒடுக்கி, அந்த அறிவில் நிலைத்திருக்க வேண்டும் என்று கூறுகிறார். அதாவது முதலில் பிரித்தல், இரண்டாவது ஒடுக்குதல், அடுத்து மூன்றாவதாக ஆத்ம அறிவில் நிலைபெறுதல் என்பதாகும்.

இங்கு நான் உடலை உண்மை என்று நம்பி, வேறுபாடு தெரியாமல் இந்த உடலே நானாக நினைத்தேன், ஆனால் இங்கு உடல் வேறு, அறிவு ஸ்வரூபமான ஆத்மா வேறு என்றும், அந்த அறிவு ஸ்வரூபமான ஆத்மாதான் நான் என்ற அறிவை புகட்டுகிறார்.

யார் அந்த ஆத்ம ஸ்வரூபமாகவே நிலை நிற்கிறார்களோ, அவன் ஜீவன் முக்தனாகிறான் என்று இந்த ஸ்லோகத்தின் வாயிலாக முழு வேதாந்தத்தையே உபதேஷிக்கிறார்.

**51. தேஹோऽயம் அன்னபவனோ அன்னமய: து**
**கோசச்ச அன்னேன ஜீவதி விநச்யதி தத் விஹீன: |**
**த்வக் சர்ம மாம்ஸ ருதிராஸ்தி புரீஷராசி:**
**நாயம் ஸ்வயம் பவிதும் அர்ஹதி நித்யசுத்த: ||**

**விளக்கம்**

இனிமேல் ஆசிரியர் அனாத்மாவான மூன்று சரீரங்களையும் ஐந்து கோஷங்களாக பிரித்து ஒவ்வொரு கோஷத்தினுடைய இலட்ஷணங்களை கூறி இந்த கோஷங்கள் எதனால் ஆத்மா இல்லை என்பதையும் கூறப்போகிறார். கோஷங்கள் என்பது ஆத்மாவை மறைத்துக்கொண்டுள்ள மேல் உறைகள் ஆகும்.

இந்த மூன்று சரீரங்களில் நாம் பார்த்து அனுபவிக்கின்ற இந்த ஸ்தூல சரீரத்தை அன்னமய கோஷம் என்றும், மனமான ஸூட்சும சரீரத்தை பிராணமய கோஷம், மனோமய கோஷம், விஞ்ஞானமய கோஷம் என்றும், பிறகு காரண சரீரத்தை ஆனந்தமய கோஷம் என்றும் பிரிக்கின்றோம்.

ஆகவே, இங்கு ஆசிரியர் இந்த ஐந்து கோஷங்களையும் அனாத்மா என்றும், இந்த கோஷங்கள் எந்த காரணத்தினால் ஆத்மா அல்ல என்றும், எந்த காரணத்தினால் இந்த உடல்,மனம் போன்றவைகள் நானாக இருக்க முடியாது என்பதையும் விளக்கமாக கூற உள்ளார்.

## அன்னமய கோஷம்
=================

உணவினாலேயே தோன்றி, உணவினாலேயே வளர்ந்து, மீண்டும் மண்ணிற்கு உணவாகப் போகிறதோ

அது **அன்னமய கோஷம்** ஆகும். அது இந்த ஸ்தூல சரீரமாகும்.

இந்த தேகமானது (உடலானது) தாய், தந்தையரின் உணவினால் தோன்றியது. உணவினால் இந்த உடல் வாழ்கிறது. அன்னம் இல்லாமல் போனால் இந்த உடல் அழிந்து விடுகிறது. அதாவது அதிகமான உணவு அல்லது வெகு குறைவான உணவு உட்கொண்டாலும் கூட இந்த உடல் பாதிக்கப்பட்டு அழிந்து விடும்.

இந்த உடலானது மாமிசம், இரத்தம், எலும்பு சதை மற்றும் மலம் இவைகளின் கூட்டம் ஆகும். இப்படிப்பட்ட உடலானது '**நான்**' என்ற சொல்லுக்கு எப்படி தகுதியுடையதாகும். எப்பொழுதும் தூய்மையாக இருக்கின்ற ஆத்மாவிற்கு நிகரான தகுதி இந்த உடலுக்கு இல்லை. அதலால், இதனை '**நான்**' என்று கூறாதே என கூறுகிறார்.

52. **பூர்வம் ஜனே: அதிம்ருதே: அப் நாயம் அஸ்தி**
**ஜாதக்ஷண: க்ஷண குணோ அநியத ஸ்வபாவ: |**
**நைகோ ஜடச்ச கடவத் பரித்ருச்யமான:**
**ஸ்வாத்மா கதம் பவதி பாவவிகார வேத்தா ||**

**விளக்கம்**

நாம் பிறப்பதற்கு முன்பும், இறந்த பின்பும் இந்த உடலானது இல்லை. பிறந்ததிலிருந்து ஒவ்வொரு

நொடிப்பொழுதும் மாறிக்கொண்டே, ஒரு குறிப்பிட்ட காலம் மட்டுமே இருக்கும் இந்த உடலானது எப்படி எப்பொழுதும் நித்தியமான ஆத்மாவாக இருக்க முடியும்?.

இந்த உடலை இப்படிப்பட்ட தன்மை கொண்டது என கூற முடியாது. நன்றாக இருந்த உடல் திடீர் என நோய் படும், வளர்ச்சியில் மாறுபடும், இவ்வாறு ஒரு நிலையற்ற உடலை எப்படி '**நான்**' என கூற முடியும்.

மேலும் இந்த உடலானது பறவை உடல், மிருக உடல் என அனேகமாக இருக்கின்றது. பானையைப் போல பார்த்து அனுபவிக்கக்கூடிய இந்த உடலானது ஜடம் ஆகும்.

இப்படிப்பட்ட அனைத்து மாற்றங்களையும் அறியும் அறிவு ஸ்வரூபமான ஆத்மா 'நான்' அன்றி, இந்த உடலானது எப்படி '**நான்**' ஆக இருக்க முடியும்? அகவே, இந்த உடலிலிருந்து '**நான்**' என்ற அறிவை எடுக்க வேண்டும்.

## பிராணமய கோஷம்

=================

**53. கர்மேந்த்ரியை: பஞ்சபி: அஞ்சிதோऽயம்
ப்ராணோ பவேத் ப்ராணமயஸ்து கோச: |
யேன ஆத்மவான் அன்னமயோऽனுபூர்ண:
ப்ரவர்த்ததே அஸௌ ஸகல க்ரியாஸு ||**

**விளக்கம்**

ஐந்து கர்மேந்திரியங்களுடன் பிணைக்கப்பட்ட பிராணன் (ஐந்து பிராணன்கள் சேர்ந்த பிராணன்) பிராணமய கோஷம் ஆகின்றது.

எந்த பிராணமயத்தினால் அன்னமயமானது நிரப்பபப்பட்டுள்ளதோ அது பிராணமய கோஷம் ஆகும். அதாவது ஸ்தூல சரீரத்திற்கு உயிரை கொடுப்பதே இந்த பிராணமயன் என்கிறார்.

அனைத்து செயல்களை செய்யும் இந்த உடலானது பிராணமயத்தினாலேயே செயல்படுகிறது. இப்படிப்பட்ட பிராணன் இல்லையெனில் இந்த உடல் 'ஜடம்' என்பது உறுதியாகத்தெரியும்.

**54. நைவ ஆத்மாபி ப்ராணமயோ வாயுவிகாரோ**
**கந்தாSSகந்தா வாயுவத் அந்தர் பஹிரேஷ: |**
**யஸ்மாத் கிஞ்சித் க்வாபி ந வேத்தி இஷ்டம் அநிஷ்டம்**
**ஸ்வம் வா அன்யம் வா கிஞ்சன நித்யம் பரதந்த்ர: ||**

**விளக்கம்**

இந்த பிராணமய கோஷமும் ஆத்மா அல்ல, இது வாயுவினால் ஆனது. இது போவதும், வருவதும் ஆக இருக்கின்றது. காற்றானது உள்ளும், புறமும் இருக்கின்றது. இந்த பிராணனானது எதையையும், எப்பொழுதும் அறியாது, இதுவும் ஜடமானது ஆகும்.

அப்படிப்பட்ட இந்த ஜடத்தை '**நான்**' என்று கூறுவதா?

இது தன்னையும், தனக்கு வேறான ஒன்றையும் அறிவதில்லை, பிரியமானதையும், பிரியமில்லாததையும் கொஞ்சமும், ஒரு பொழுதும் அறிவதில்லை.

எப்பொழுதும் ஸ்தூல சரீரத்தை சார்ந்து இருக்கின்றது. இது அமைதியாக செயல்பட மனதையும் சார்ந்து இருக்கின்றது. இப்படிப்பட்ட இந்த பிராணன் எப்படி '**நான்**' ஆக இருக்க முடியும்?.

## மனோமய கோஷம்

==================

55. **ஜ்ஞானேந்த்ரியாணி ச மனச்ச மனோமய: ஸ்யாத்**
**கோசோ மமாஹமிதி வஸ்து விகல்பஹேது: |**
**ஸம்ஜ்ஞாதி பேத கலனா கலிதோ பலீயான்**
**தத் பூர்வகோஷம் அபிபூர்ய விஜ்ரும்பதே ய: ||**

**<u>விளக்கம்</u>**

ஐந்து ஞானேந்திரியங்களும், மனமும் சேர்ந்து மனோமய கோஷம் ஆகின்றது. இந்த உலகத்தில் எத்தனையோ பொருட்கள் இருக்கின்றன.

அதில் சில பொருட்கள் என்னுடையது, இது வேறோருவருடையது என்றும், மேலும் நான், நீ என்ற பேத புத்தியை தருவது இந்த மனம்தான்.

என்னுடையது, நான் என்றும், பெயர்களைக்கொண்டு வேற்றுமைகளை தோற்றுவிப்பதும், மிகவும் வலிமை வாய்ந்த்தும் ஆன இந்த மனத்தை கடப்பது என்பது அவ்வளவு சுலபமல்ல.

இந்த மனோமயகோஷமானது இதற்கு முன்பு உள்ள பிராணமய கோஷத்துடன் வியாபித்து விளங்குகின்றது. இப்படிப்பட்ட மனோமய கோஷம் '**நான்**' அல்ல.

**56. மனோமயோ நாபி பவேத் பராத்மா**
**ஹ்யாத்யந்தவத்வாத் பரிணாமி பாவாத் |**
**து:க்காத்மகத்வாத் விஷயத்வ ஹேதோ:**
**த்ரஷ்டா ஹி த்ருச்யாத்மதயா ந த்ருஷ்ட: ||**

**<u>விளக்கம்</u>**

இப்படிப்பட்ட மனம் ஆத்மாவாக இருக்க முடியாது. இந்த மனதிற்கு தோற்றமும், முடிவும் இருக்கின்றது. அதாவது சிறியவயதில் இருந்த மனோ நிலை தற்பொழுது பெரியவர்களாக ஆனவுடன் மனோ நிலை அப்படியே மாறி விட்டது. ஒவ்வொரு வினாடியும் இந்த மனமானது மாறிக்கொண்டே இருக்கிறது. இப்படிப்பட்ட மனம் '**நான்**' அல்ல.

இந்த மனமே துயரத்துடன் கூடியதாக இருக்கின்றது. மனதில் உண்டாகும் சந்தோஷம் என்பது ஆனந்தமய கோஷத்தினால் உண்டாகின்றது. நம்முடைய மனதை நாம் பார்ப்பதினால், எவையெல்லாம்

பார்க்கப்படும் பொருளாக இருக்கின்றதோ, அவையாக ஆத்மா இருக்கமுடியாது.

உதாரணமாக மனதை பார்ப்பது என்றால், யாராவது நம்மை தவறாக பேசினால், என்னுடைய மனதில் அப்படிப்பட்ட எண்ணம் இல்லை என்று கூறுவோம் அல்லவா, அதைத்தான் பார்த்து அனுபவிப்பது என்ற பொருளில் இங்கு கூறப்படுகின்றது. இதிலிருந்து என்னுடைய மனதினை நான் அறிவேன் என்பது தெரிகின்றது.

பார்ப்பவன் பார்க்கப்படும் பொருளாக பார்க்கப்படவில்லை.

பார்ப்பவன் என்றும் பார்ப்பவன், பார்க்கப்படும் பொருள் என்றும் பார்க்கப்படுபவை. ஆக, பார்ப்பவன் பார்க்கப்படும் பொருளிலிருந்து வேறுபட்டவன். அவனே **“நான்”** அல்லது **“ஆத்மா”** ஆகும்.

எனவே மாறிக்கொண்டிருக்கும் மனம் நிச்சயமாக **‘நான்’** இல்லை.

இங்கு மனோமய கோஷத்தைக் கடப்பது என்பது மனத்தை அழிப்பது அல்லது மனமற்ற நிலைக்கு போவது என்று தவறாக புரிந்துகொள்ளக்கூடாது. மனதின் வசம் கட்டுப்படாமல் இருப்பது, அதாவது மனம் போன போக்கில் போகாமல் இருப்பது என்பது பொருள் ஆகும்.

மனோமய கோஷத்தை கடப்பது என்பது மனதில் தேவையற்ற எண்ணங்களை வளர்க்காமல், கற்பனையில் வாழாமல், விருப்பு வெறுப்பு என்ற பேதத்தை விடுவது என்பதாகும். அதாவது யாரையும் வெறுக்காமல், யாருடைய அன்புக்கும் ஏங்காமல் சம நிலையில் இருப்பது ஆகும்.

## விஞ்ஞானமய கோஷம்

=====================

**57. புத்திர் புத்தீந்திரியை: ஸார்த்தம் ஸவ்ருத்தி: கர்த்ருலக்ஷண: |**
**விஞ்ஞானமய கோஷ: ஸ்யாத் பும்ஸ: ஸம்ஸார காரணம் ||**

**விளக்கம்**

நம்முடைய மனதில் இருக்கின்ற எண்ணங்களை இரண்டாக பிரிக்கிறோம். அதில் எந்த எண்ணங்கள் நிச்சயம் செய்யுமோ அல்லது தீர்மானம் செய்யுமோ அது புத்தி ஆகும். எந்த எண்ணங்கள் நிச்சய முடிவு எடுக்காமல் இதுவா, அதுவா என தடுமாறுவதை மனம் என்கிறோம்.

நிச்சய முடிவு எடுக்கின்ற புத்தியும், ஐந்து ஞானேந்திரியங்களும் சேர்ந்து விஞ்ஞானமய கோஷம் ஆகும்.

மனதுடன் கூடிய ஐந்து இந்திரியங்கள் மனோமய கோஷம் என்று பார்த்தோம். அதுபோல இங்கு

புத்தியுடன் கூடிய ஐந்து இந்திரியங்கள் சேர்ந்தது விஞ்ஞானமய கோஷம் ஆகும்.

இது எண்ணங்கள் ரூபமானது, நான் செய்தேன் என்ற செய்பவன் ஸ்வரூபமாக இருக்கின்றது. காரீய ஆத்மா என்றால் அன்னமய கோஷமும், பிராணமய கோஷமும் ஆகும். கரண ஆத்மா என்றால் அது மனோமய கோஷம் ஆகும். கர்த்ரு ஆத்மா என்றால் அது **விஞ்ஞானமய கோஷம்** எனப்படும்.

ஜீவனின் துயரத்திற்கு (பிறவிச் சுழலுக்கு) காரணமாக இருப்பது இந்த விஞ்ஞானமய கோஷம் ஆகும். அதாவது '**நான்**', '**நான்**' என்ற அஹங்காரத்திற்கு காரணமாக இருப்பது இந்த விஞ்ஞானமய கோஷம் ஆகும்.

58. **அனுவ்ரஜத் சித் ப்ரதிபிம்ப சக்தி:**
**விஜ்ஞான ஸம்ஜ்ஞ: ப்ரக்ருதே: விகார: |**
**ஜ்ஞான க்ரியாவான் அஹமிதி அஜஸ்ரம்**
**தேஹேந்த்ரியாதிஷு அபிம்ன்யதே ப்ருசம் ||**

**விளக்கம்**

நம்முடைய மனமானது சூட்சுமமான பஞ்சபூதங்களால் உருவானது. நாம் பார்கின்ற ஸ்தூல பஞ்சபூதங்கள் ஜடமாக இருக்கின்றது. இந்த ஸ்தூல பஞ்சபூதங்கள் தோன்ற காரணமாக இருந்த சூட்சும பஞ்சபூதங்களும் ஜடமாகத்தான் இருந்திருக்க முடியும்.

காரணம் ஜடமான பஞ்ச பூதங்களிலிருந்து இந்த பூதங்கள் தோன்றியுள்ளது.

அந்த சூட்சுமமான பஞ்ச பூதங்களின் மாற்றம்தான் நம்முடைய சூட்சும சரீரம் ஆகும். ஆகவே நம்முடைய மனம், விஞ்ஞானமய கோஷம் இவைகளெல்லாம் உண்மையில் ஜட ஸ்வரூபம். அதற்கு என்று அறிவு கிடையாது.

ஆனால் நம்முடைய அனுபவத்தில் விஞ்ஞானமய கோஷத்தில் அறிவு இருக்கின்றது. அது சேதன தத்துவமாக இருக்கின்றது என்றால் அது வேறு எங்கிருந்தோ கடன் வாங்கி இருக்க வேண்டும்.

ஒரு கண்ணாடியிலிருந்து வெளிச்சம் வருகின்றது என்றால், அந்த வெளிச்சம் வேறு எங்கிருந்தோ பிரதிபிம்பிக்கின்றது.

அதாவது கண்ணாடிக்கு சுயமாக வெளிச்சம் கொடுக்கும் சக்தி கிடையாது, அது சூரியனுடைய ஒளியை பிரதிபிம்பிப்பது போல இங்கு மனோமய கோஷமும், விஞ்ஞானமய கோஷமும் ஜடமாக இருந்த போதிலும் ஆத்மாவினுடைய சைதன்யம் அங்கு பிரதிபிம்பித்து அறிவு இருப்பது போல காட்டுகின்றது.

விஞ்ஞானமய கோஷத்தில் இருக்கும் ஆத்மாவினுடைய அறிவைத்தான் **“சிதாபாசம்”** என்கிறோம்.

ஆத்மவினுடைய அறிவானது பிரதிபிம்பமாக ஜீவனை தொடர்ந்து நிற்கும் விஞ்ஞானமய கோஷம் எனப்படுகிறது.

காரண சரீரத்தினுடைய மாறபாடே இந்த விஞ்ஞானமய கோஷம் ஆகும். இந்த விஞ்ஞானமயகோஷம் அறிவை அடைந்து கொண்டிருக்கின்ற செயலில் இருக்கின்றது. இந்த விஞ்ஞானமய கோஷத்தின் செயல் என்னவென்றால் ஞானம். அதாவது அறிவை அடைவதுதான் இதன் செயல்.

இத்துடன் இந்த விஞ்ஞானமய கோஷம் '**நான்**' என்று இடைவிடாது இந்திரியங்களையும், மனதையும் பிணைத்திருக்கின்றது.

அதாவது அனாத்மவை ஆத்மா என்று நினைப்பதே இந்த விஞ்ஞானமய கோஷம் ஆகும். மேலும் இந்த உடலை '**நான்**' என்று மிக மிக உறுதியாக நினைக்கின்றது.

இங்கு முக்கியமான கருத்து என்னவெனில் விஞ்ஞானமய கோஷத்தின் தவறான புரிதலினால், நாம் வேறு எந்த கோஷத்தை சரி செய்ய முயன்றாலும் அது சரியாக இருக்காது.

காரணம் உடலை, மனதை, பிராணனை சரி செய்ய முயலும் நம்முடைய முயற்சி வீணாக போவதற்கு

காரணம் இந்த விஞ்ஞானமய கோஷத்தின் 'நான்' என்ற தவறான புரிதலினால், அதாவது அஹங்காரத்தினால் எல்லா துயரத்திற்கும் விதையாக அமைகின்றது.

நாம் விஞ்ஞானமய கோஷத்தின் வாயிலாக அறிவிற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் எத்தனை விதமான காரியங்களில் ஈடுபட்டாலும் அதன் முடிவு மோட்சத்தை அடைய முடியாமல் பயனற்றதாக முடியும்.

எனவே நம்மிடையே உள்ள அஞ்ஞானம் என்ற அறியாமை நீங்க வேண்டுமானால், ஒரு நல்ல குருவை நாடி சாஸ்திரத்தின் துணையுடன் ஸ்ரவனம் (சாஸ்திரத்தை கேட்டல்), மனனம் (சாஸ்திரத்தை சிந்தித்தல்), நிதித்யாசனம் (சாஸ்திரத்தின் வழி நிற்றல்) செய்து அறிவை அடையவேண்டும்.

59. **அனாதி காலோ அயம் அஹம் ஸ்வபாவோ**
**ஜீவ: ஸமஸ்த வ்யவஹார வோடா |**
**கரோதி கர்மாணி அபி பூர்வவாஸன:**
**புண்யானி அபுண்யானி ச தத்பலானி ||**

**விளக்கம்**

**"நான்"**, **"நான்"** என்று **"நான்"** அல்லாத இடத்தில் இருக்கின்ற இந்த புத்தியானது பிறப்பினால் மட்டும் கூறாமல், அனாதி காலமாக இந்த உடலை **"நான்"**, **"நான்"** என்று கூறுவது ஸ்வபாவமாக ஜீவனுக்கு இருக்கிறது என்றும், எல்லா செயல்களையும் நடத்துபவன் இந்த அஹங்காரமயமான **"நான்"** என்று

கூறிக்கொண்டுள்ள இந்த விஞ்ஞானமய கோஷம்தான் என்றும், தன்னை ஜீவனாக வைத்து எல்லா செயல்களையும் இந்த விஞ்ஞானமய கோஷம்தான் செய்து கொண்டிருக்கின்றான் என்றும் கூறுகிறார்.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான செயல்களிலும் ஈடுபடுகிறார்களே என்றால், அவனது பூர்வ வாஸனையினால் இவ்வாறு விதவிதமான செயல்களில் ஈடுபடுகின்றான்.

இந்த விஞ்ஞானமய கோஷம் அவரவர்களது பூர்வ வாஸனைகளினால் (முன்வினையின் காரணமாக) செயல்பட்டு கொண்டிருக்கின்றது. ஏற்கனவே உள்ள பழைய பதிவுகளை எடுத்துக்கொண்டு அதன் தூண்டுதலின் அடிப்படையில் நம்முடைய அஹங்காரம் விதவிதமான செயல்களைச் செய்துகொண்டிருக்கின்றது.

அந்த செயல்கள் இரண்டு விதங்களில் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றது. அவைகள் ஒன்று நற்செயல்கள் (புண்ணியச்செயல்கள்), மற்றொன்று தீய செயல்கள் (பாவச்செயல்கள்) ஆகும்.

ஆக பாவத்தையும், புண்ணியத்தையும் செய்வதே இந்த **“விஞ்ஞானமய கோஷம்”** ஆகும்.

அவ்வாறு பாவ, புண்ணியங்களை ஒருவன் செய்துவிட்டால், அதன் பலன்களை அவன் அனுபவித்துத்தான் ஆகவேண்டும். அதிலிருந்து அவன்

தப்பவே முடியாது. அந்த பாவ, புண்ணிய பலன்களை அனுபவிப்பவன், உடலை "**நான்**" என்று கூறுபவன் எல்லாமே இந்த விஞ்ஞானமய கோஷம் ஆகும். இதற்கும் ஆத்மாவிற்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை என்பதனை இங்கு அறிந்துகொள்ளவேண்டும்.

ஆக இந்த விஞ்ஞானமய கோஷம் யார்? என்றால் எல்லா செயல்களையும் செய்பவன், அதன் பலன்களை அனுபவிப்பவன். ஆகவே இதில் முக்கிய பங்கு அஹங்காரத்திற்கு இருக்கின்றது.

**60. புங்கதே விசித்ராஸ்வபி யோனிஷு**
**வ்ரஜன் ஆயாதி நிர்யாதி அத ஊர்த்வம் ஏஷ: |**
**அஸ்யைவ விஜ்ஞானமயஸ்ய ஜாக்ரத்**
**ஸ்வப்னாத்யவஸ்தா: ஸுகது:க்க போக: ||**

**விளக்கம்**

விஞ்ஞானமய கோஷம் என்பது இந்த ஜீவன்தான், அவனே விதவிதமான ஜென்மங்களை எடுத்து சுக, துக்கங்களை அனுபவித்துக் கொண்டிருக்கின்றான்.

இவன் விதவிதமான கர்பங்களில் உருவாகி பலவிதமான சரீரங்களை அடைகின்றான், மீண்டும் அந்த சரீரங்களை விட்டு வருகின்றான், மீண்டும் பலவிதமான கர்பங்களில் செல்கின்றான். இவ்வாறு மேலேயும், கீழேயும் பிறப்புக்கு ஆளாகின்றான்.

ஆத்மா என்பது சைதன்யம் ஆகும், உயிர் என்பது ஜீவன் என்ற இந்த விஞ்ஞானமய கோஷம் ஆகும். இந்த விஞ்ஞானமய கோஷத்திற்குத்தான் விழிப்பு, கனவு, மற்றும் ஆழ்ந்த உறக்கம் என்ற மூன்று அவஸ்தைகள் ஏற்படுகின்றது.

காரணம் இந்த ஜீவனுக்குத்தான் இந்த அவஸ்தைகள் எல்லாம் வருகின்றது. மேலும் சுகம், துக்கம் என்ற போகங்களெல்லாம் இந்த ஜீவனுக்குத்தான், ஆத்மாவிற்கு எந்த விதமான செயல்களும் கிடையாது.

இப்படிப்பட்ட விஞ்ஞானமய கோஷமானது **'நான்'** ஆக இருக்க முடியாது.

61. **அதோ நாயம் பராத்மா ஸ்யாத் விஜ்ஞானமய சப்தபாக் |**
**விகாரித்வாத் ஜடத்வாச்ச பரிச்சின்னத்வ ஹேதுத: |**
**த்ருச்யத்வாத் வ்யபிசாரித்வாத் ந அநித்யோ நித்ய இஷ்யதே ||**

**விளக்கம்**

இந்த விஞ்ஞானமயம் என்ற பெயரை உடைய இது பரமாத்மா ஆகாது. ஏனெனில், இது மாற்றத்தை அடைகின்றது, இது சூட்சும சரீரத்தில் இருக்கின்ற ஒரு அங்கமானதால் ஜடமாக இருக்கின்றது.

மேலும் இது அளவிற்குட்பட்டதாக இருப்பதினாலும், இது **"நான்"** அல்ல. இந்த அஹங்காரம் அனுபவிக்கப் படுவதினால், ஒரு நிலையில் இந்த

விஞ்ஞானமய கோஷம் மாறுவதினால், அதாவது ஆழ்ந்த உறக்கத்தில் எவ்வளவுதான் அறிவு இருந்தாலும் அங்கு அது இல்லாமல் போகின்ற காரணத்தினால் இது ஆத்மாவாகிய **"நான்"** அல்ல.

இவ்வாறு அனித்தியமான இந்த விஞ்ஞானமய கோஷம் எப்படி நித்தியமான ஆத்மாவாக இருக்க முடியும் என ஆசிரியர் கூறுகிறார்.

## ஆனந்தமய கோஷம்
====================

**62. ஆனந்த ப்ரதிபிம்ப சும்பித தனு: வ்ருத்தி: தமோ ஜ்ரும்பிதா**
**ஸ்யாதானந்தமய: ப்ரியாதிகுணக: ஸ்வேஷ்டார்த்த லாபோதய: |**
**புண்யஸ்ய அனுபவே விபாதி க்ருதினாம் ஆனந்தரூப: ஸ்வயம்**
**பூத்வா நந்ததி யத்ர ஸாது தனுப்ருன்மாத்ர: ப்ரயத்னம் விநா ||**

**<u>விளக்கம்</u>**

நம்முடைய காரணசரீரம் ஆனந்தமய கோஷம் ஆகும். நாம் இந்த உலகத்தில் விஷயங்களோடு சம்பந்தம் வைத்து ஆனந்தத்தை அனுபவிக்கின்றோம். ஒரு விருப்பமான பொருளை நாம் பார்க்கிறோம், பிறகு அதனை அடைகிறோம், அதன் பிறகு அதனை நாம் அனுபவிக்கின்றோம். அப்பொழுது நம்முடைய மனதிற்கு ஆனந்தம் வருகின்றது.

ஆனால், சாஸ்திரம் என்ன கூறுகிறது என்றால் எந்த ஒரு பொருளிலும் ஆனந்தம் என்ற ஒன்று கிடையாது. காரணம் என்னவெனில், நமக்கு ஆனந்த்த்தை கொடுக்கும் அதே பொருள் வேறொருவருக்கு துக்கத்தை கொடுக்கலாம்.

உதாரணமாக நாம் விரும்பி உண்ணும் இனிப்பு பதார்த்தங்கள் சர்க்கரை நோய் உள்ள ஒருவருக்கு கொடுத்தால் அது அவருக்கு துக்கத்தைத்தான் தருகின்றது.

எப்படி ஜடமான மனதில் சேதனத்துவம் ஆகிய அறிவு என்ற ஒன்று ஆத்மாவின் பிரதிபிம்பிப்பதினால் உண்டாகின்றதோ அதுபோல, ஆத்மாவாகிய ஆனந்த ஸ்வரூபத்தின் பிரதிபிம்பத்தைத்தான் நாம் அனுபவித்துக் கொண்டிருக்கின்றோம்.

மனதில் சூட்சுமமான எண்ணங்கள் உதயமாகின்ற பொழுது, அந்த எண்ணங்களில் ஆத்மாவின் ஆனந்தம் பிரதிபிம்பிக்கின்றது. ஆனால் நாம் அனுபவிக்கும் ஆனந்தம் என்பது உண்மையான ஆனந்தம் கிடையாது. ஆத்மாவின் பிரதிபிம்பம் ஆகும். ஆக ஆனந்தமய கோஷம் என்பது ஆத்மாவின் ஸ்வரூபமான ஆனந்தத்தை பிரதிபிம்பிப்பது ஆகும்.

பிரதிபிம்பிக்கின்ற ஆனந்தத்தில் சிறிது ஆனந்தம், நிறைந்த ஆனந்தம் என்ற உயர்வு, தாழ்வு காணப்படுகின்றது. சாஸ்திரம் இந்த உயர்வு, தாழ்வு என்ற வேற்றுமைகளை மூன்றாக பிரிக்கின்றது.

இவைகளெல்லாம் ஆனந்தமய கோஷத்தில் இருக்கின்ற தத்துவங்கள் என்று கூறுகின்றது.

நம்முடைய மனதில் விருப்பு, வெறுப்பு போன்ற எத்தனையோ வாஸனைகள் இருக்கின்றது. நமக்குள்ளேயே இஷ்டம் (பிடித்தது), அநிஷ்டம் (பிடிக்காதது) என்ற புத்தியும் இருக்கின்றது. நாம் எதை அதிகம் விரும்புகின்றோமோ, அப்படிப்பட்ட ஒரு பொருளை நாம் பார்க்கிறோம். பார்த்தவுடனேயே நமக்கு முதலில் அதன் மீது விருப்பம் அல்லது மகிழ்ச்சி வரும். உடனே நாம் அதனை அடைய விரும்புவோம். அவ்வாறு அதனை அடைந்தவுடன் அதனை நாம் அனுபவிக்கின்றோம். இப்பொழுது நம்முடைய ஆனந்தம் எவ்வாறு இருக்கும்?

இவ்வாறு ஆனந்தத்தின் எல்லைகள் மாறிக்கொண்டே இருக்கின்றது.

முதலில் நாம் ஒரு பொருளை பார்த்தவுடன் வருகின்ற ஆனந்தத்திற்கு '**பிரியம்**' என்றும், பிறகு அந்த பொருளை அடைந்தவுடன் வருகின்ற ஆனந்தத்திற்கு '**மோதம்**' என்றும், அதன்பிறகு அனுபவிக்கப்படுகின்ற பொழுது வருகின்ற ஆனந்தத்திற்கு '**பிரமோதம்**' என இவ்வாறு ஆனந்தத்தை மூன்றாக பிரித்துள்ளது.

ஆனந்தத்தினுடைய பிரதிபிம்பிக்கின்ற தன்மையுடன் கூடியது எதுவோ அது ஆனந்தமய கோஷம் ஆகும்.

அவித்தையிலிருந்து (அறியாமையிலிருந்து) தோன்றிய எண்ணங்களினால் பிரதி பிம்பிக்கின்ற ஆனந்தம் இந்த ஆனந்தமய கோஷம் ஆகின்றது.

இந்த ஆனந்தமய கோஷம் ஆனது பிரியம் முதலிய குணங்களுடன் தோன்றியது. தனக்கு விரும்பிய பொருளினுடைய இலாபத்தினால் தோன்றுவது இந்த ஆனந்தமய கோஷம் ஆகும். இது போன்ற ஆனந்த அனுபவங்களைப்பெற புண்ணியம் வேண்டும்.

ஆனந்தமய கோஷம் வரவேண்டுமெனில் அதனை அனுபவிக்க புண்ணியங்கள் இருந்தால்தான் அதனை அனுபவிக்கமுடியும். ஆகவே புண்ணியங்களை செய்தவர்களுக்கு அதை தீர்க்கின்ற காலத்தில் ஆனந்தமய கோஷத்திற்கு வந்து அதை அனுபவிப்பதுதான் ஆனந்தம் ஆகும்.

இதிலிருந்து உடலை எடுத்தவன் ஆனந்தத்தை கொண்டு வருவதற்கு எந்தவிதமான முயற்சியும் செய்யாமல், பழைய வாஸனைகளில் (பூர்வ ஜென்மங்களில்) புண்ணியங்கள் அதிகம் சேர்த்து வைத்து இருந்தால் மட்டுமே, அந்த புண்ணியங்களின் விளைவாக **ஆனந்தமய கோஷம்** விளங்கி ஆனந்தத்தை அனுபவிக்க முடியும்.

**63. ஆனந்த மய கோசஸ்ய ஸுஷுப்தௌ ஸ்பூர்த்தி: உத்கடா |**
**ஸ்வப்ன ஜாகரயோ: ஈசத் இஷ்ட ஸந்தர்சனாதினா ||**

**விளக்கம்**

கனவில்லாத ஆழ்ந்த உறக்கத்தில் ஆனந்தமானது பரிபூர்ணமாக விளங்குகின்றது. அதுவே கனவிலும், விழிப்பு நிலையிலும் இஷ்டமான பொருட்களை பார்த்தாலோ, அடைந்தாலோ அல்லது அனுபவித்தாலோ மட்டுமே ஆனந்தம் கிடைக்கின்றது.

நம்முடைய ஆழ்ந்த உறக்கத்தில் எந்த விதமான விட்சேபமும் மனதில் நடைபெறாத பொழுது நாம் நன்கு ஆனந்தத்தை அனுபவிக்கின்றோம்.

உதாரணமாக குளத்தில் உள்ள தண்ணீரில் சூரியன் அல்லது சந்திரனின் பிரதிபிம்பமானது அந்த தண்ணீர் அசைவின்றி இருந்தால் தெளிவாகத் தெரியும். அதுவே அந்த தண்ணீர் அசைந்தவாறு இருந்தால் அந்த சூரிய, சந்திரனின் பிரதிபிம்பமானது தெளிவின்றி தெரியும்.

அதுபோல, எந்த விதமான கனவுகளும் இல்லாத (ஆழ்ந்த உறக்கத்தில்) ஸுஷுப்தி அவஸ்தையில்தான் ஆத்மாவின் ஆனந்தம் நன்கு பிரதிபிம்பிக்கின்றது.

ஆழ்ந்த உறக்கத்தில் இந்திரியங்கள் உலகத்தோடு சம்பந்தம் வைப்பதில்லை. மனதும் ஏற்கனவே உள்ள சம்ஸ்காரங்களோடும் சம்பந்தம் வைப்பதில்லை.

அனால், ஸ்வப்ன, ஜாக்ரதா (கனவு, விழிப்பு) அவஸ்தைகளில் நாம் கற்பனையான உலகத்தில் கனவு காண்பதாலும், விழித்துக்கொண்டு இந்த உலகத்தை பார்ப்பதாலும் மனதில் விதவிதமான சஞ்சலங்கள் ஏற்பட்டு இருப்பதாலும் ஆத்மாவின் ஆனந்தம் இங்கு நன்கு பிரதிபிம்பிக்க முடிவதில்லை.

அதாவது இங்கு ஆனந்தமய கோஷத்தை ஓரளவுதான் உணரமுடியும். பிரியமான வஸ்துவை நாம் பார்த்தோ, அடைந்தோ அல்லது அனுபவித்தாலோதான் சிறிது ஆனந்தம் கிடைகின்றது.

இதுபோல, பல சமயங்களில் நாம் விரும்பிய பொருளை அடையவும், அனுபவிக்கவும் முடியாமல் போகும் பொழுது நமக்கு துயரமும் வருகின்றது. இதுபோன்ற உயர்வு, தாழ்வுகளுடன் கூடியதுதான் இந்த ஆனந்தமய கோஷம் ஆகும்.

**64. நைவாயம் ஆனந்தமய: பராத்மா**
**ஸோபாதிகத்வாத் ப்ரக்ருதே: விகாராத் |**
**கார்யத்வ ஹேதோ: ஸுக்ருத க்ரியாயா**
**விகார ஸங்காத ஸமாஹிதத்வாத் ||**

**விளக்கம்**

இந்த ஆனந்தமய கோஷமானது மேலான பரமாத்மா அல்ல. இது இஷ்டமான ஒன்றை பார்த்து, அடைந்து, அனுபவித்து அடையக்கூடிய நிமித்தம்

காரணமாக ஆனந்தம் இருப்பதினால், இந்த ஆனந்தம் என்னுடைய ஸ்வரூபம் அல்ல. நான் எதையும் சாராத அனுபவத்திற்கு வராத எல்லா ஆனந்தத்திற்கும் மூலமாக இருக்கின்ற ஆனந்த ஸ்வரூபம்.

அதாவது நீ சர்க்கரையை அனுபவிப்பவன் அல்ல. நீயே சர்க்கரை ஸ்வரூபம் என்று சாஸ்திரம் இங்கு விளக்குகின்றது.

அதனால், நாம் அனுபவிக்கின்ற ஆனந்தம் எல்லாம் சர்க்கரையை சாப்பிடுவதால் கிடைக்கின்ற ஆனந்தம் போன்றது.

மாறுபாடுகளுடன் கூடிய காரண சரீரமான இந்த ஆனந்தமய கோஷம் **'நான்'** அல்ல.

நாம் செய்கின்ற ஒவ்வொரு செயலுக்கும் பாவம், புண்ணியம் என்ற பலன் இருக்கின்றது. இதில் புண்ணியம் என்ற பலன் நமக்கு சுகத்தைக் கொடுத்து தீரும். பாவம் என்ற பலன் நமக்கு துன்பத்தைக் கொடுத்து தீரும்.

புண்ணியம் என்ற காரணம் இருந்தால்தான் நமக்கு சுகம் என்ற காரியம் இருக்கும். இந்த ஆனந்தமய கோஷம் என்பது புண்ணியத்தின் காரணமாக இருப்பதினால் இது ஆத்மா அல்ல. எது பிரியம், மோதம், பிரமோதம் என்று ஆனந்தத்தில் மாற்றத்தை உடையதோ அது **'நான்'** அல்ல.

65. பஞ்சானாமபி கோசானாம் நிஷேதே யுக்தித: ச்ருதே: |
தந்நிஷேதாவதி: ஸாக்ஷீ போத ரூபோSவசிஷ்யதே ||

**விளக்கம்**

இதுவரை நாம் ஐந்து கோஷங்களை எடுத்துக்கொண்டு, அவைகளின் இலட்சணங்களைப் பார்த்தோம்.

இப்படிப்பட்ட இலட்சணங்களை உடைய கோஷங்கள் எந்தெந்த காரணங்களினால் ஆத்மா இல்லை என பார்த்தோம்.

இதுவரை இந்த காரணங்களைத் தெரிந்து கொண்டதினால் நாம் இந்த ஐந்து கோஷங்களையும் கடந்து விட்டவர்கள் ஆகி விட்டோமா? என்றால் நம் அனுபவம் அப்படியா இருக்கின்றது?

ஒருவர் புதியதாக ஒரு வாகனம் வாங்கியுள்ளார், அந்த வாகனத்தில் ஒரு சிறிய கீறல் ஏற்பட்ட உடன் அடுத்த நொடியிலேயே அவருடைய அந்த வாகனத்தில் விழுந்த கீறல் இவர் மீதே விழுந்தது போல எப்படி கோபப்படுவார் என்பதை சொல்லவும் வேண்டுமோ?

அப்படி குழந்தை, மனைவி, பணம் மற்றும் பொருட்கள் போன்றவைகளை ஆறாவது கோஷமாக ஒரு ஞானி நகைச்சுவைக்காக கூறுகிறார்.

அதாவது சாதாரண ஜடமான இந்த வாகனத்தின்மீதே இவ்வளவு பற்று கொண்டுள்ள நாம் நம் மீது அன்பை செலுத்தும் மனைவி, குழந்தைகள் விஷயத்தில் எவ்வாறு இருப்போம் என்றால், அவர்கள் மீது என்னுடையவர்கள் என்ற அபிமானம் இன்னும் அதிகம் இருக்கும்.

உண்மையில் ஆறாவது கோஷம் கிடையாது. இவற்றின் மீது இருக்கும் நான், என்னுடையது என்ற அபிமானத்தை நீக்க இந்த ஆறாவது கோஷத்தையும் கடக்க வேண்டியுள்ளது என நகைச்சுவையாக ஒரு ஞானி கூறுகிறார்.

அதாவது நம்முடைய '**நான்**' என்ற அபிமானம் நம்முடைய புறப்பொருட்களிடமே வந்துவிட்டது என்றால், இதுவரை இந்த ஐந்து கோஷங்களை படித்துத்தான் வந்திருக்கிறோமோ தவிர மனதளவில் '**நான்**' என்ற அஹங்காரம் நீங்கி விடாது என்கிறார்.

அப்படியானால், நாம் எவ்வாறு இந்த ஐந்து கோஷங்களையும் கடந்து பரமா(ஆ)த்மாவை தரிசிக்க முடியும் என்றால், அதற்கென்று ஒரு வழி இருக்கின்றது. நாம் அதைத் தெரிந்து கொண்டு அதை நடைமுறையில் பயன்படுத்த வேண்டும்.

அதற்கு இந்த அகில பிரபஞ்சத்தையே இரண்டு பகுதிகளாக பிரிக்க வேண்டும்.

ஒன்று **மமஹார விஷய:** மற்றொன்று **அஹங்கார விசய:** என இரண்டாக பிரிக்க வேண்டும்.

இந்த உலகமே இரண்டுதான் ஒன்று '**என்னுடையது**' என்று கூறுவதற்கு பொருளாக இருப்பது, இனி ஒன்று "**நான்**" என்று கூறுவதற்கு பொருளாக இருப்பது. இதுதான் உலகமே!

நாம் உலகம் மிகவும் பெரியது என்று நினைத்துக் கொண்டிருக்கின்றோம். அப்படி கிடையாது, உலகம் மிகவும் சிறியது.

எது நமக்கு உலகம் என்றால், நீ எதையெல்லாம் "**என்னுடையது**" என்று கூறுகின்றாயோ, எதையெல்லாம் "**நான்**" என்று கூறுகின்றாயோ அதுதான் உலகம்.

நீ எதையுமே "**என்னுடையது**" என்று கூறவில்லை என்றால், எந்த அனாத்மாவையும் "**நான்**" என்று கூறவில்லையென்றால், அப்பொழுது உனக்கு இந்த உலகத்திலிருந்து விடுதலை.

எப்படியென்றால், எந்தப்பொருளையும் "**என்னுடையது**" என்று கூறவில்லையோ இந்த பெரிய உலகத்திலிருந்து உனக்கு விடுதலை கிடைக்கின்றது.

நாம் விடுதலை என்றால் எதையாவது வாங்கி வைத்துக்கொள்ளுதல் என்று தவறாக நினைத்துக்

கொண்டிருக்கிறோம். ஆனால், சாஸ்திரம் அப்படியே எதிர்பதமாக கூறுகின்றது.

அதாவது உன்னுடைய உள் மனதில் ‘**என்னுடையது**’ என்ற புத்தி உனக்கு இல்லாமல், இது இறைவன் எனக்கு பயன்படுத்த கொடுத்தது என்று நினைத்து, **“இதை பகவான் எனக்கு பயன்படுத்த கொடுத்திருக்கிறார்”** ஆனால் என்னுடையது அல்ல என நினைத்தல் ஆகும்.

இவ்வாறு நினைத்தால் நம்முடைய ‘**மமஹாரம்**’ போய்விடும்.

அடுத்து அஹங்கார விஷயம் எது என்றால், அதுதான் இந்த பஞ்ச கோஷங்கள். இந்த கோஷங்களில்தான் நாம் ‘**நான்**’ என்ற புத்தியை வைக்க முடியும்.

இந்த ஐந்து கோஷங்களிலும் ‘**நான்**’ என்ற புத்தி மாறி மாறி இருந்து கொண்டிருக்கும். இங்கு நம்முடைய மனதை ‘**நான்**’ என்று கூறும் பொழுது உடலை ‘**என்னுடையது**’ என்று கூறுவோம். சில சமயங்களில் உடலை ‘**நான்**’ என்று கூறும் பொழுது மனதை ‘**என்னுடையது**’ என்று கூறுவோம்.

என்னுடைய மனதில் நிம்மதி இல்லை என கூறுவோம். நான் மிகவும் சஞ்சலமாக இருக்கிறேன் என்று கூறும் பொழுது மனதை ‘**நான்**’ என்று

கூறுகிறோம். பிறகு **‘நான்’** என்பது புத்தியாக மாறிவிட்டது. அதாவது புத்தியாக இருந்து மனதை பார்த்து இப்படி கூறுவோம்.

இவ்வாறு இந்த ஐந்து கோஷங்களிலும் சில இடங்களில் **‘நான்’** என்றும், சில இடங்களில் **‘என்னுடையது’** என்றும் கூறிக்கொண்டிருக்கிறோம்.

மருத்துவரிடம் செல்லும் பொழுது இந்த ஸ்தூல உடலை என்னுடைய உடல் நிலை சரியில்லை என கூறுவோம். அங்கு நான் சரியில்லை எனக் கூறமாட்டோம்.

முதலில் இந்த அஹங்கார விஷயமாக இருக்கின்ற இந்த ஐந்து கோஷங்களையும் **‘நான்’** இல்லை, என முடிவு செய்து இது **‘என்னுடையது’** என மாற்ற வேண்டும்.

அதன் பிறகு இது என்னுடையதும் அல்ல என விட்டு விடவேண்டும். முதலில் நான் அல்ல, அதன் பிறகு என்னுடையதும் இல்லை என்று படிப்படியாக வரவேண்டும்.

இந்த கோஷங்களில் **‘நான்’** எங்கெல்லாம் இருக்கின்றது எனத்தெரிந்து கொண்டால்தான் நாம் இந்த கோஷங்களை கடக்க முடியும். அதற்காகத்தான் இதுவரை இந்த ஐந்து கோஷங்களைப் பற்றி விரிவாக பார்த்தோம்.

ஒரு பகைவனை வெல்ல வேண்டும் எனில், அந்த பகைவனின் இருப்பிடத்தை முதலில் கண்டுபிடித்தாலே நமக்கு பாதி வெற்றி கிடைத்தது போல, அவன் எங்கு இருக்கிறான் எனத்தெரியாமல் அவனை எப்படி வெல்வது?.

இங்கு பகைவனாக இருப்பது நம்முடிய அஹங்காரம்.

இந்த அஹங்காரத்திற்கு இடம் எது? என்பதை முதலில் கண்டுபிடிக்க வேண்டும். அந்த இடம்தான் இந்த பஞ்ச கோசங்கள் ஆகும்.

இந்த ஐந்து இடங்களில்தான் '**நான்**' என்ற புத்தி இருந்து கொண்டுள்ளது. பிறகு சாஸ்திரத்தின் துணை கொண்டு, **அறிவினுடைய** துணை கொண்டு ஒவ்வொரு இடத்திலிருந்தும் '**நான்**' என்ற புத்தியை ஏன் எடுக்க வேண்டும்? என்றால் உண்மையில் '**நான்**' ஆகிய ஞானமே வடிவானதும், ஸாக்ஷி வடிவானதுமான ஆத்மாவைத் தவிர வேறு எதற்கும் '**நான்**' என்று கூறும் யோக்கியதை கிடையாது என்பதை **அறிவினால்** அறிய வேண்டும்.

அதாவது நான் பரமா(ஆ)த்மா என்ற நிலையை அடைய முதலில் இந்த ஐந்து கோஷங்களிலும் '**நான்**' என்ற புத்தியை நீக்க வேண்டும்.

இதற்கு இப்படிபட்ட கோஷங்களெல்லாம் தடையாக உள்ளது என்ற ‘**அறிவு**’ நமக்கு வேண்டும்.

<u>குறிப்பு:-</u>

(பெரும்பாலானவர்கள் அறிவிற்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. அறிவிற்கு முக்கியத்துவம் கொடுக்கத் தவறியதால்தான் நாம் எந்த இடத்தில் ‘**நான்**’ என்ற புத்தியை வைத்து கொண்டிருக்கிறேன் என்பது தெரியாமல் இருக்கிறார்கள்.

இவர்கள் அறிவைச்சார்ந்து விஷாரம் செய்யாமல், சாதனைகள் பல செய்தாலும் பரமா(ஆ)த்மாவை அறிவதில் முன்னேற்றம் காண்பதில்லை.)

## ஆத்மஸ்வரூபம்
===============

**66. யோSயமாத்மா ஸ்வயம் ஜ்யோதி: பஞ்சகோச விலக்ஷண:**
**அவஸ்தாத்ரய ஸாக்ஷீ ஸன் நிர்விகாரோ நிரஞ்ஜன: |**
**ஸதானந்த: ஸ விஜ்ஞேய: ஸ்வாத்மத்வேன விபச்சிதா ||**

<u>**விளக்கம்**</u>

ஜீவன், ஜகத், ஈஸ்வரன் என்ற மூன்று பிரிவில், ஜீவன் என்பது நாம். ஜகத் என்பது நாம் அனுபவிக்கும் இந்த உலகம். இந்த ஜகத்தானது ஈஸ்வரனுக்குள்

அடங்குகின்றது. காரணம் ஈஸ்வரன்தான் இந்த ஜகத்தை (உலகத்தை) படைத்துள்ளார். ஆகவே ஜகத் ஈஸ்வரனோடு சேர்கின்றது. ஈஸ்வரன், ஜீவன் என்ற வேறுபாடு இருக்கின்றது.

இப்பொழுது இதுவரை நாம் ஆத்ம, அனாத்மா விஷாரத்தில் ஜீவனை பற்றிய விஷாரத்தை மேற்கொண்டு வந்தோம்.

ஜீவன் என்றால் நாம் என்றும், நம்மையே இரண்டாக ஆத்ம ஸ்வரூபம், அனாத்ம ஸ்வரூபம் என்று பிரித்து, இந்த அனாத்மா என்பது பஞ்ச கோஷங்கள், நம்மால் அனுபவிக்கப்படுகின்ற உடல்கள். ஆத்மா என்பது இந்த உடலல்ல, உடலுக்கு வேறுபட்ட **அறிவு** ஸ்வரூபமாக இருக்கின்ற ஒரு தத்துவம் என்று பார்த்தோம்.

இதுவரை பஞ்ச கோஷ விவேகத்தில் நான் எப்படி ஒவ்வொரு கோஷமும் அல்ல என்று யுக்தியை பயன்படுத்தி அறிவு பூர்வமாக ஆராய்ந்தோம். இந்தந்த கோஷங்கள் அல்லது அனாத்மாக்கள் '**நான்**' அல்ல என்று பார்த்தோம்.

உண்மையில் '**நான்**' எதுவாகத்தான் இருக்கின்றேன் என்று பார்க்கவேண்டும். நான் உடலல்ல, நான் மனதல்ல, நான் புத்தியல்ல, நான் மனதில் இருக்கின்ற ஆனந்தமும் அல்ல என்ற் நீக்கிக்கொண்டே வந்தேனே தவிர, எதுதான் '**நான்**' என்று

பார்க்கும்பொழுது, ஆத்மாதான் **'நான்'** என்று இனி வரும் ஸ்லோகங்களின் வாயிலாக பார்க்க உள்ளோம்.

இதுவரை ஜீவன் தன்னை தவறாக எதை புரிந்து கொண்டானோ, அது அல்ல என்று நீக்கப்பட்டது. ஜீவனுடைய அனாத்ம ஸ்வரூபம் நீக்கப்பட்டு, ஜீவனுடைய உண்மையான ஆத்ம ஸ்வரூபம் இனி கூறப்படுகின்றது.

தானே ஸ்வயமாக பிரகாஷித்து விளங்கிக் கொண்டிருக்கின்றதாயும், ஐந்து கோஷங்களினின்றும் வேறானதாகவும், எந்த ஆத்மா உள்ளதோ, அது விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் என்ற மூன்று நிலைகளுக்கும் சாக்ஷியாகவும், என்றும் உள்ளதாகவும், மாறுபாடு அற்றதாகவும், மாசற்றதாகவும், எப்பொழுதும் ஆனந்த வடிவானதாகவும் உள்ள அறிவு ஸ்வரூபமான இந்த **'ஆத்மா'** நான் என்று உண்மையை அறிந்தவனே **'ஞானி'** ஆவான்.

## சிஷ்யனுடைய சந்தேகம்

=====================

67. மித்யாத்வேன நிஷித்தேஷு கோசேஷு எதேஷு பஞ்சஸு |
ஸர்வாபாவம் விநா கிஞ்சித் ந பச்யாமி அத்ர ஹே குரோ |
விஜ்ஞேயம் கிமு வஸ்து அஸ்தி ஸ்வாத்மனாऽத்ர விபச்சிதா ||

**விளக்கம்**

இங்கு சிஷ்யன் குருவிடம் ஒரு கேள்வியை கேட்கிறான்.

குருவே! இதுவரை இந்த உடல்தான் ‘**நான்**’ என்று நினைத்திருந்தேன். ஆனால், தாங்கள் சில யுக்திகளை கையாண்டு இந்தந்த காரணங்களினால் இந்த உடல் ‘**நான் அல்ல**’ என்று கூறிவிட்டீர்கள்.

இந்த அறிவை பயன்படுத்தி பார்க்கும்பொழுது, தாங்கள் கூறுவது சரியாகத்தான் உள்ளது. எதோ அனுபவத்தில் இந்த உடலை நான் என்று நினைத்தாலும் கூட, அறிவைப் பயன்படுத்தி பார்க்கும் பொழுது நீங்கள் கூறுவது சரிதான், இந்த உடல் நான் அல்ல.

அடுத்தது இந்த உடலில் உள்ளே ஸூட்சமமாக இருக்கின்ற பஞ்ச கோஷங்களில் ஒவ்வொன்றையும் ‘**நான்**’ என்று நினைத்தேன் அவைகளும் ‘**நான்அல்ல**’ என நிரூபித்தீர்கள்.

இப்படி எதையெல்லாம் ‘**நான்**’ ‘**நான்**’ என்று நினைத்துக்கொண்டிருந்தேனோ அவைகளெல்லாமே ‘**நான் அல்ல**’ என்று கூறிவிட்டால், கடைசியில் எனக்கு என்ன தெரிகின்றது என்றால் சூன்யம்தான் எஞ்சி நிற்கின்றது. அதாவது ஒன்றுமே இல்லாத சூன்யம் சூழ்ந்துள்ளது போல அறிகிறேன்.

**குறிப்பு:-**
======

முற்றிலும் ஏதும் இல்லை --- இது பௌத்தர்களின் சூன்யவாதம். இதற்கு மறுப்பு அடுத்து வரும் ஸ்லோகத்தில் ஆசிரியர் கூற உள்ளார்.

## குருவினுடைய பதில்
===================

**68. ஸத்யமுக்தம் த்வயா வித்வன் நிபுணோऽஸி விசாரணே |
அஹமாதி விகாராஸ்தே த்தபாவோऽயமபி அனு ||**

**விளக்கம்**

சிஷ்யனுடைய கேள்வியில் தவறு இருந்தாலும், குருவானவர் அதனை நேரடியாக வெளிப்படுத்தாமல், நீ நல்ல அறிவாளி, நல்லவிதமாக விஷாரம் செய்து இதுவரை கேட்ட விஷயங்களில் நல்ல ஆர்வம் உன்னிடம் இருப்பதினாலேயே இந்த கேள்வி வந்துள்ளது என்று அவனை பாராட்டுகின்றார்.

**அறிவாளியே!**

ஆராய்ந்தறிவதில் நீ திறமையுள்ளவனாக இருக்கிறாய், நீ கூறுவது உண்மைதான். இதுவரை நீ

விஷாரத்தில் அனைத்தையும் நீக்கிக் கொண்டே வந்துள்ளாய், ஆனால், ஒன்றை நீ தவறவிட்டுள்ளாய்.

அந்த பகுதியை குருவானவர் இப்பொழுது விளக்குகின்றார்.

நான் (அஹங்கரம்) என்ற எண்ணம் முதலிய எல்லா மாற்றங்களும் உன்னிடத்தில் நிகழ்கின்றன.

இதில் எந்த அறிவால் ஐந்து கோஷங்களையும் நீ பார்த்தாயோ, பிறகு எந்த அறிவினால் இவைகள் இல்லை, இல்லை என நீக்கி வந்தாயோ, அந்த அறிவு எதனாலும் அறியப்படவில்லை, அப்படிப்பட்ட அந்த அறிவுதான் எஞ்சி நிற்கின்றது.

இதில் ஏதும் இல்லாத சூன்யம் என்ற இதுவும் கூட அது போன்ற ஒரு அறிவின் வெளிப்பாடே.

இதுபோல எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கின்ற நீ, இவைகளை எல்லாம் பார்கின்றவனை பார்க்கத் தவறி விட்டாய்.

இந்த உலகமே ஒரு மாயாஜாலம். எப்படி எனில் பார்கின்றவனை பார்க்காமல் செய்வதே இந்த உலகம் ஆகும். காரணம் இந்த உலகத்தை நாம் பார்த்துக்கொண்டிருக்கின்றோம், ஆனால் அப்படி இந்த உலகத்தை பார்ப்பவனை நாம் பார்க்கத்தவறி விட்டோம்.

அதாவது எந்த ஒரு அறிவினால் நீ சூன்யத்தை பார்க்கின்றேன் என்று கூறுகின்றாயோ, மேலும் எந்த அறிவினால் நீ இவைகளையெல்லாம் நீக்கினாயோ அதை நீ அறியவேண்டும்.

**“எந்த ஒரு அறிவு பார்க்கப்படவில்லையோ, எதனால் அனைத்தும் பார்க்கப்படுகின்றதோ”** அதை நீ அறியவேண்டும்.

**69. ஸர்வே யேனானுபூயந்தே ய: ஸ்வயம் நானுபூயதே |**
**தமாத்மானம் வேதிதாரம் வித்தி புத்த்யா ஸுஸூக்ஷ்மயா ||**

**விளக்கம்**

நீ பார்த்த பஞ்ச கோஷங்களையும், பிறகு அவைகளை நீக்கியதுவும், அதன்பிறகு நீ பார்க்கின்ற சூன்யமும், அதாவது, இருப்பும், இல்லாமையும் இவைகள் அனைத்தும், எந்த அறிவினால் அனுபவிக்கப்படுகின்றதோ, எந்த அறிவு ஒன்று தானாகவே அனுபவிக்கப்படுவதில்லையோ **அந்த அறிவை நீ ஆத்மாவாக** அறியவேண்டும்.

அப்படிப்பட்ட ஆத்மா அனைத்தையும் அறிகின்ற ஸ்வரூபம் என்பதையும் நீ அறியவேண்டும். இப்படி நான் ஆத்மாவாக அறிய வேண்டுமென்றால், அதனை மிக மிக நுண்ணிய புத்தியின் துணை கொண்டு அறியவேண்டும்.

குறிப்பு:-

இது புத்தியை பயன்படுத்தாத சாதாரணமான பாமரர்கள் தவறு செய்யக்கூடிய இடமல்ல, புத்தியை நன்கு பயன்படுத்துகின்ற சில தத்துவவாதிகளே கூட தவறிய இடம். அதனால்தான் சூன்யவாதம் என்ற பௌத்த மதமே உருவானது.

70. **ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்திஷுஸ்புடதரம் யோSஸௌ ஸமுஜ்ஜ்ரும்பதே**
**ப்ரத்யக் ரூபதயா ஸதா அஹமஹம் இத்யந்த:ஸ்புரன் ஏகதா |**
**நானாகார விகார பாஜின இமான் பச்யன் அஹம் தீமுகான்**
**நித்யானந்த சிதாத்மனா ஸ்புரதி தம் வித்தி ஸ்வமேதம் ஹ்ருதி ||**

விளக்கம்

இந்த மூன்று அவஸ்தைகளிலும் (விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம்) மிகத்தெளிவாக எந்த ஆத்மாவானது விளங்கிக்கொண்டு இருக்கின்றதோ, அப்படிப்பட்ட இந்த ஆத்மாவானது மிகமிக அருகில் எப்பொழுதும் "**நான்**", "**நான்**" என்று இருந்து விளங்கிக்கொண்டிருக்கின்றது.

இப்படிப்பட்ட ஆத்மாவானது மனதிற்குள் ஒன்றாக '**நான்**' என்று விளங்கிக் கொண்டு, விதவிதமான மாற்றங்களையுடைய அஹங்காரம் முதலான எல்லா வற்றையும் சாட்சியாக வேடிக்கைப் பார்த்துக்கொண்டு, என்றும் குறைவில்லாத சைதன்ய ஸ்வரூபமாக விளங்கிக்கொண்டிருக்கின்றது.

அதை நீ, “நான்” (**“நான் ஆத்மா”**) என்று உன்னுடைய மனதிற்குள் அறியவேண்டும்.

## பிரஹ்ம ஸ்வரூபம்

=================

**71. ப்ரஹ்மாபின்னத்வ விஜ்ஞானம் பவமோக்ஷஸ்ய காரணம் |**
**யேனாத்விதீயம் ஆனந்தம் ப்ரஹ்ம ஸம்பத்யதே புதை: ||**

**விளக்கம்**

வேதாந்தத்தினுடைய மையக்கருத்தாக மஹாவாக்கியம் என்று கூறுகின்றோம். அந்த மஹா வாக்கியத்தை புரிந்து கொள்ள பல கருத்துக்கள் உபநிஷத்துக்களில் கூறப்படுகின்றது.

**“மஹா”** என்றால் பெரிய என்று பொருள். அதாவது பெரிய பலனைக்கொடுப்பதினால் அதைப் பெரிய வாக்கியம் என்று கூறப்படுகின்றது.

அப்படிப்பட்ட மஹா வாக்கியங்கள் பல உள்ளன.

அதாவது எந்த வாக்கியமானது ஜீவாத்ம, பரமாத்ம ஐக்கியத்தை கூறுமோ, அந்த வக்கியத்திற்கு **“மஹா வாக்கியம்”** என்று பொருள்.

ஜீவ - ஈஸ்வர ஐக்கிய வாக்கியம் மஹா வாக்கியம் ஆகும்.

எது ஜீவனும், ஈஸ்வரனும் ஒன்று, அல்லது ஆத்மாவும், பிரம்மனும் ஒன்று என்று கூறுமோ அது மஹா வாக்கியம் ஆகும்.

நாம் விஷாரத்திற்கு பிரசித்தமாக எடுத்துக்கொள்ளும் மஹா வாக்கியம் **"தத்துவமஸி"** (தது துவம் அஸி) என்ற மஹா வாக்கியம் அகும். சாந்தோக்கிய உபநிஷத்தில் இந்த மஹா வாக்கியம் வருகின்றது.

தது - அது, துவம் - நீ, அஸி - இருக்கின்றாய்.

அதாவது **"தத்துவமஸி"** என்றால் **"அதுவாக நீ இருக்கின்றாய்"**. என்று பொருள்.

இங்கு '**தத்**' என்ற சொல் ஈஸ்வரனை குறிக்கின்றது.

'**துவம்**' என்ற சொல் ஜீவாத்மாவை குறிக்கின்றது. இத்துடன் '**அஸி**' என்ற சொல் ஐக்கியத்தை குறிக்கின்றது.

ஆக அதுவாக நீ இருக்கின்றாய் என்றால் '**ஈஸ்வரனாக நீ இருக்கின்றாய்**' என்பது பொருள்.

ஈஸ்வரனாக '**நான்**' எப்படி இருக்க முடியும் என்பதைத்தான் இதுவரை விஷாரம் செய்தோம்.

இதில் ஜீவனும், ஈஸ்வரனும் ஒன்று என்றால் அது எதன் அடிப்படையில் என்பது இனியும் சந்தேகமாக இருந்தால், அதைப்பற்றி இன்னும் விரிவாக அறிய ஈஸ்வரனைப் பற்றி விஷாரம் செய்து அதன் வாயிலாகவும் உண்மையை அறியலாம்.

இங்கு வேதாந்தத்தில் **"தத்"** பத விஷாரம் **"துவம்"** பத விஷாரம் அடுத்து **"அஸி"** பத விஷாரம் என்று மூன்று விதமான விஷாரங்களை மேற்கொள்ளப்படுகின்றது.

இந்த விவேகசூடாமணியில் இதுவரை நாம் **"துவம்**" பத விஷாரத்தை பார்த்தோம், இனி **"தத்"** பத விஷாரமும் **"அஸி"** பத விஷாரமும் பார்க்க உள்ளோம்.

இப்பொழுது '**தத்**' பத விஷாரத்திற்கு செல்ல இருக்கின்றோம்.

அதாவது இதுவரை '**நான் யார்**' என்று பார்த்தோம். இனி, ஈஸ்வரன் யார் என பார்க்க உள்ளோம்.

அடுத்து இறுதியாக ஞானத்தின் பலனை பார்க்க உள்ளோம். இனி விளக்கமாக பார்க்கலாம்.

ஜீவன், ஈஸ்வரன் என்ற இரண்டு தத்துவங்கள் இருக்கின்றன.

இந்த உடலோடு கூடிய பஞ்சகோஷங்களைக் கொண்டது இந்த ஜீவன் என்று புரிந்து கொண்டால், இந்த ஜகத்திற்கு காரணமானவர் ஈஸ்வரன் என்றும் புரிந்து கொண்டால், இந்த உடலோடு கூடிய ஜீவனுக்கும், இந்த ஜகத்திற்கு காரணமான மாயா சக்தியை படைத்த ஈஸ்வரனுக்கும் என்ன சம்பந்தம் என்பது தோன்றும்.

இப்படி மேலே கூறப்பட்ட கண்ணோட்டத்தில் பார்த்தால், இந்த உலகை படைத்தவர் ஈஸ்வரன், அவரால் படைக்கப்பட்டவர்கள் நாம் என்பது தெரியும்.

அதாவது இந்த உலகத்திற்கு காரணமானவர் ஈஸ்வரன், நாமெல்லாம் ஈஸ்வரனால் படைக்கப்பட்ட காரியமானவர்கள் என்று தோன்றும்.

மேலும் நாம் கர்மம் செய்பவர்கள், ஈஸ்வரன் அதற்கு தகுந்த பலனை கொடுப்பார். நாம் வழிபடுபவர்கள், ஈஸ்வரன் வழிபடப்படுபவர் என்ற சம்பந்தம் காணப்படும்.

இங்கு நாம் ஜீவனும், ஈஸ்வரனும் ஒன்று என்று கூறமுடியாது. கூறவும் மாட்டோம்.

ஆனால், நாம் இதுவரை ஜீவனை எடுத்துக் கொண்டு விஷாரம் செய்ததில் ஐந்து கோஷங்களுடன்

கூடிய, பஞ்ச பூதங்களினால் ஆன இந்த உடலான அனாத்மாவிலிருந்து ஜீவனைப் பிரித்து பார்த்து, விஷாரம் செய்து பார்த்ததில் ஜீவனுடைய உண்மையான நிலை என்ன என்று பார்க்கையில், இந்த பஞ்ச கோஷங்களுக்கு அப்பாற்பட்ட, என்றும் மாறுபாடு அடையாத, நித்யமான, அறிவு ஸ்வரூபமான ஜீவனைப் பார்த்தால் அது சத் ஸ்வரூபம், சித் ஸ்வரூபம், ஆனந்த ஸ்வரூபம் ஆகிய **'ஆத்மா'** என்று விஷாரத்தினால் இதுவரை அறிந்து கொண்டோம்.

இதுவரை நாம் **'துவம்'** பத விஷாரத்தினால் இந்த ஜீவன் என்கின்ற நாம் யார் என்பது பற்றி விஷாரம் செய்தோம்.

இனி இதே போன்று **'தத்'** பத விஷாரம் மூலமாக இந்த ஈஸ்வரன் யார் என்றும் பார்க்கப் போகிறோம்.

ஜீவனின் மனதிலிருக்கின்ற குறைகளிலிருந்து விடுதலை அடைவதற்கு, நான் பிரம்மத்தினிடத்திலிருந்து வேறில்லை என்ற ஞானம் தேவை. எந்த அறிவினால் இரண்டற்ற ஆனந்தமான பரம்பொருளை அடையப்படுகின்றதோ அந்த விஞ்ஞானமே மோட்சத்திற்கு காரணம்.

அப்படிப்பட்ட பிரம்மத்தை (ஈஸ்வரனை) இனி விஷாரம் செய்யப்போகிறோம்.

**72. ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ப்ரஹ்ம விசுத்தம் பரம் ஸ்வத: ஸித்தம் |**
**நித்யானந்தைகரஸம் ப்ரத்யகபின்னம் நிரந்தரம் ஜயதி ||**

<u>**விளக்கம்**</u>

இனி ஈஸ்வர விஷாரம் செய்யப்போகிறோம். இங்கு ஈஸ்வரன் என்ற சொல்லுக்கு இலட்சணம் ஜகத்காரணம், அதாவது இந்த உலகத்திற்கு காரணமாக இருப்பவர் ஈஸ்வரன்.

இந்த உலகத்திற்கு காரணம் என்றால், எப்படிப்பட்ட காரணம் என்றால், அவரே நிமித்த காரணமாகவும், உபாதான காரணமாகவும் இருக்கின்றார்.

எப்படி களிமண் பானைக்கு உபாதான காரணமாகவும், அதை செய்பவன் நிமித்த காரணமாகவும் இருக்கின்றானோ, அப்படி ஈஸ்வரன் இந்த உலகத்திற்கு இரண்டு காரணமாகவும் இருக்கின்றார்.

ஈஸ்வரன் என்ற சொல்லுக்கு அனைத்திற்கும் காரணமாக இருப்பவர் என்று பொருள். பிறகு இந்த ஈஸ்வரனைப் பார்த்தால், எந்த ஒரு சக்தியினால் அனைத்திற்கும் காரணமானார் என்று பார்க்கையில் அவரிடம் மாயா என்ற ஒரு சக்தி இருக்கின்றது. அவ்வாறு மாயா என்ற சக்தியின் துணை கொண்டு அவர் இந்த உலகத்திற்கு காரணமாக மாறி இருக்கின்றார்.

அப்படிப்பட்ட மாயையின் தன்மையை பார்த்தால் அந்த மாயையும் கூட அறிவற்ற ஜடமாக இருக்கின்றது. பிறகு அந்த மாயைக்கு ஏதோ ஒரு தத்துவமானது அறிவைக் கொடுக்கின்றது. அந்த அறிவான தத்துவத்தைத்தான் சாஸ்திரம் பிரம்மம் என்று அறிமுகப்படுத்துகின்றது.

ஆகவே பிரம்மம் என்ற தத்துவம் தன்னிடம் உள்ள மாயைக்கு அறிவைக் கொடுத்து இருத்தல் என்ற தன்மையைக் கொடுத்து, அந்த மாயையின் துணைக் கொண்டு இந்த உலகத்திற்கு காரணமாக இருக்கின்றது.

இப்பொழுது நாம் ஈஸ்வரனை மீண்டும் பிரித்து பார்த்தால், ஈஸ்வரன் என்பவர் இரண்டு அம்ஸத்துடன் கூடியவர். எப்படி ஜீவனை நாம் இரண்டாக பிரித்தோமோ, அதாவது ஆத்மா, அனாத்மா என்று இரண்டாக பிரித்தோமோ, அதுபோல, ஈஸ்வரனையும் இரண்டாக பிரிக்கின்றோம்.

ஒன்று பிரம்ம அம்ஸம், இனியொன்று மாயா அம்ஸம். பிரம்மனும், மாயையும் சேர்ந்த தத்துவம்தான் ஈஸ்வரன்.

ஆகவே ஈஸ்வரனிடம் பிரம்ம அம்ஸமும், மாயா அம்ஸமும் கலந்து இருக்கின்றது. அதாவது ஈஸ்வரனிடம் பிரம்ம தத்துவமும், மாயா தத்துவமும் கலந்து இருக்கின்றது.

இனி அடுத்து பிரம்ம தத்துவத்தின் இலட்சணம் என்ன?

மாயா தத்துவத்தின் இலட்சணம் என்ன?

என்று பார்த்தால் சாஸ்திரம் மாயைப் பற்றி கூறும்பொழுது அது ஜடமானது, பிரம்மத்தைச் சார்ந்து இருப்பது, முக்குண வடிவமானது (**'திரிகுணாத்மிகா மாயா'**), அது மித்யாவாக இருக்கின்றது என்றெல்லாம் வர்ணிக்கின்றது.

இனி பிரம்மத்தின் இலட்சணத்தைப் பார்த்தால் சத்தியம், ஞானம், அனந்தம் பிரம்மம். அதாவது தைத்திரிய உபநிஷத்தில் கூறப்பட்டதை அப்படியே எடுத்து ஆசிரியர் இங்கு கூறுகிறார்.

சத்தியம் என்றால் மூன்று காலத்திலும் எது எப்பொழுதும் இருக்கின்றதோ, என்றும் நித்தியமாக, அழியாததாக இருக்கின்றதோ அது பிரம்மம். ஞானம் என்றால் சைதன்ய ஸ்வரூபம், அதாவது அறிவு ஸ்வரூபம் பிரம்மம். அடுத்து அனந்தம் என்றால் பூர்ணமானது, நிறைவானது இந்த பிரம்மம்.

இந்த உலகத்தில் நாம் பார்த்து, கேட்டு பெறுகின்ற அறிவெல்லாம் அனந்தமல்ல. அது மறந்து விடும், நாசத்தை அடைந்து விடும். ஆனால் பிரம்மமோ அனந்தமான ஞானம், அனந்தமான சத்தியம்.

இப்படிப்பட்ட பிரம்மத்தை மாயையுடன் பார்த்தால் அந்த பிரம்மமே ஈஸ்வரனாக இருக்கின்றது. மாயையை நீக்கிப் பார்த்தால் அந்த பிரம்மத்தினுடைய இலட்சணம் இங்கு கூறப்பட்ட '**சச்சிதானந்தம்**' ஆகும்.

**சத்தியம், ஞானம், அனந்தம் பிரஹ்ம.**

பிரம்மம் என்பது சத்தியமாகவும், ஞானமாகவும், அனந்தமாகவும் இருக்கின்றது.

தூய்மையானதாகவும் இருக்கின்றது. மேலானதாகவும் இருக்கின்றது. எதனுடைய துணையும் இன்றி, தானாகவே ஒளிர்ந்து (சுயம்பிரகாசமாக) கொண்டும் இருக்கின்றது.

என்றும் எப்பொழுதும் ஆனந்தமான ஒரே ஒரு ஸ்வரூபமாக இருக்கின்றது.

இப்படிப்பட்ட பிரம்மமானது சைதன்ய ஸ்வரூபமான ஆத்மாவான தன்னிடமிருந்து வேறு படாததாகவும், என்றும் விளங்கிக் கொண்டிருக்கின்றது.

73. **ஸத்ப்ரஹ்ம கார்யம் ஸகலம் ஸதைவ**
**தன்மாத்ரம் ஏதத் ந ததோ அன்யதஸ்தி |**
**அஸ்தீதி யோ வக்தி ந தஸ்ய மோஹோ**
**விநிர்கதோ நித்ரிதவத் ப்ரஜல்ப: ||**

**விளக்கம்**

ஈஸ்வரன் இருக்கின்றார், அந்த ஈஸ்வரனிடத்தில் பிரம்ம ஸ்வரூபம் இருக்கின்றது. அந்த பிரம்மமும், ஜீவனும் ஒன்று என்று பார்த்தோம். அப்படியானால், பிறகு நாம் பார்க்கும் இந்த உலகம் என்னவாவது? என்ற சந்தேகம் தோன்றும். ஆனால், ஆசிரியர் இந்த உலகம் என்ற ஒன்று உண்மையில் இல்லை என்று கூறுகின்றார்.

இதைப்படித்தவுடன் எப்படி இவ்வளவு பெரிய உலகத்தை இல்லை என்று கூறலாம் என்று, இதை நம்புவதே கடினமாகத் தோன்றும். ஆனால், இந்த உலகம் உண்மையில் ஒரு பெயரிட்டு அழைக்கப்படுகின்ற **நாமரூபம் தான்** அதாவது **சப்தம்தான்** என்று சாஸ்திரம் கூறுகின்றது.

இதை புரிந்து கொள்ள ஒரு உதாரணத்தைப் பார்க்கலாம்.

பத்து கிலோ எடையுள்ள களிமண் இருக்கின்றது என்று வைத்துக்கொண்டு, அதிலிருந்து விதவிதமான பானைகளைச் செய்கின்றோம்.

இதிலிருந்து 30 பானைகளை விதவிதமாக செய்து வைத்து விட்டோம் அதாவது, சட்டி வடிவம், டம்பளர் வடிவம், விளக்கு வடிவம் மற்றும் பல விதமான பானைகள் என்றால், இதற்கு முன்பு களிமண் என்ற ஒரு பெயரைக் கொண்ட ஒரு பொருள் விதவிதமான பானைகளாக தோற்ற மாற்றம் அடைந்துள்ளது.



இப்பொழுது படைக்கப்பட்ட இவ்வளவு பானைகளும் பல விதமான வேற்றுமைகளுடன் காணப்படுகின்றன. உண்மையில் எது படைக்கப்பட்டது? படைக்கப்பட அனைத்து விதமான பானைகளையும் எடை பார்த்ததில் அதுவும் அதே 10 கிலோ இருக்கின்றது. இதில் புதியதாக 30 விதமான உருவங்கள்தான் தோன்றியுள்ளன. மேலும் 30 விதமான பெயர்களும் கொடுக்கப்பட்டுள்ளது. அதாவது நாம ரூபமாக, சத்தமாக இருக்கின்றது.

முன்பு களிமண் என்று ஒரு பெயரைக் கூறி சத்தம் போட்ட நாம் இப்பொழுது 30 விதமான பெயர்களில் சத்தம் போட்டு அழைக்கின்றோம். இதில் அந்த சப்தங்கள் களிமண்ணிற்கு அல்ல, அதற்கு கொடுத்த வித விதமான உருவங்களுக்கு ஆகும்.

இதேபோல தங்கத்தை எடுத்துக்கொள்வோம். இந்த தங்கத்திலிருந்து விதவிதமான நகைகள் செய்கின்றோம். அதன் பிறகு அவைகளை கம்மல், மூக்குத்தி, வளையல் மற்றும் செயின் என்று விதவிதமான பெயரிட்டு சப்தம் போடுகின்றோம்.

ஆனால் உண்மையில் அங்கு இருப்பது தங்கம் மட்டும்தான்.

ஆகவே, இந்த காரியமாக எது படைக்கப்பட்டதோ இவைகளையெல்லாம் எடுத்துப் பார்த்தால், படைக்கப்பட்டது அனைத்தும் உபாதான காரணமாகத்தான் இருக்கின்றதே தவிர, வேறு ஒன்றுமில்லை, ஆக இவைகள் அனைத்தும் நாம ரூபம் ஆகும். அந்த நாம ரூபம் என்பது உண்மையில் பொருளல்ல.

ஒருவர் விதவிதமான நகைகளைக் காட்டி இதில் ஏதேனும் ஒன்றை எடுத்துக்கொள்ளுங்கள் என்று கூறும் பொழுது, நாம் எனக்கு இந்த வித விதமான நகைகள் வேண்டாம், எங்களுக்கு தங்கம் மட்டும் போதும் என்றால், அந்த கடைக்காரர் எப்படி கூறுவார். இவைகள் அனைத்தும் தங்கம்தான், வித விதமான பெயர்களில் வித விதமாக வடிவமைக்கப்பட்டு இருக்கின்றது என்பார்.

அதுபோல படைக்கப்பட்ட இந்த உலகம் வெறும் சப்தம், வெறும் நாம ரூபம்.

அதாவது நமக்கு ஒரு உடல் இருக்கின்றது. இந்த உடலுக்கு (அதாவது நமக்கு) என்று ஒரு பெயர் இருக்கின்றது. இதில் ஒரு உருவம் இருக்கின்றது. இந்த உருவம் போய்விட்டது என்றால், அதாவது இந்த உடலும் போய்விட்டது என்றால், இந்த உடலின் பெயரும் போய்விடும்.

இறந்த பின்பு இந்த உடல் எரிக்கப்பட்டவுடன் யாராவது அதை பெயர் கூறி அழைப்பார்களா? சட்டியில் வைக்கப்பட்டுள்ள சாம்பலைப் பார்த்து யாராவது வைத்த பெயர் கூறி அழைப்பார்களா? நிச்சயமாக இல்லை, இனி, அது எலும்பு, சாம்பல் என்று பெயர் மாற்றம், அல்லது சப்த மாற்றம் அடைந்து விடுவது போல, அப்படி இந்த உலகமே வெறும் நாம ரூபம் அல்லது சப்தரூபம் ஆகும்.

இப்படிப்பட அனைத்து உலகங்களுக்கும் உபாதான காரணமாக இருப்பது பிரஹ்மம். **சத் ஸவரூபம், சித் ஸ்வரூபம்** ஆகும். இதில் நாம ரூபத்தைத்தான் **“மாயா”** என்று அழைக்கின்றோம்.

ஈஸ்வனிடம் இருக்கின்ற இரண்டு தத்துவங்களில் பிரம்ம தத்துவமும், நாம ரூப தத்துவமும் இருக்கின்றது. பிரஹ்மனின் தத்துவம் சத். இருக்கின்ற பிரஹ்மத்தின் மீது எத்தனையோ விதமான நாம ரூபங்கள் ஏற்றி வைக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு நகையும், ஒவ்வொரு பானையும் எப்படி தங்கமோ, எப்படி களிமண்ணோ, அப்படி இந்த அனைத்து உலகமும் சத் ஸ்வரூபமான பிரஹ்மம் ஆகும்.

பிரஹ்மத்திற்கு வேறாக எந்த ஒரு பொருளும் இல்லை என்று இந்த ஸ்லோகத்தில் ஸ்ரீசங்கரர் இந்த உலகத்தையே வெறும் நாம ரூபம். மித்யா என்று கூறிவிடுகின்றார்.

குழந்தைகளுக்கு சர்க்கரையில் செய்யப்பட்ட விதவிதமான விலங்கு வடிவம் கொண்ட மிட்டாய்களைப் பார்த்திருபோம்.



அந்த மிட்டாய்களில் குழந்தைகள் எனக்கு குதிரை வேண்டும், சிங்கம் வேண்டும், குரங்குதான் வேண்டும் என்று அடம் பிடித்து அழுகின்றதோ, அப்பொழுது, பெரியவர்களாகிய நாம் ஒரு குரங்குதான் உள்ளது, ஆனால் இவைகள் அனைத்தும் சர்க்கரையில் செய்யப்பட்ட மிட்டாய்கள்தான், இதில் எதை சாப்பிட்டாலும் ஒரே சுவைதான் இருக்கும், அவைகள் அனைத்தும் சர்க்கரையில் செய்யப்பட்டதுதான்.

எனவே நீ குரங்கு பொம்மைக்கு பதிலாக சிங்கம் பொம்மை மிட்டாய் எடுத்துக் கொள் என்று கூறினாலும், அந்த குழந்தை குரங்குதான் வேண்டும் என்று அழுவது போல, அறிவற்ற அஞ்ஞானிகள் இந்த

தோற்ற மாற்றத்தில் மயங்கி, இந்த உலகம் உண்மையில் அனுபவிக்கப்படுகின்றது போல மாயையை உண்மை என நினைத்து வாதிடுகின்றார்கள்.

ஆக, எல்லாமே வெறும் நாம ரூபம் தான், உண்மையில் இருப்பது பிரம்ஹம் மட்டுமே ஆகும். நாம ரூபத்தில் சத்தியத்துவத்தைக் கொடுத்து பிரம்ஹத்தை மறந்து விடுகின்றோம். பிரம்ஹத்தில் சத்தியத்துவம் போனவுடன் நாம ரூபம் மட்டும் தான் தெரிகின்றது.

அதாவது தங்கத்தினால் செய்யப்பட்ட நகைகள் தங்கம்தானே, களிமண்ணினால் செய்யப்பட்ட பானைகள் களிமண்தானே. அதுபோல, சத் ஸ்வரூபமான பிரஹ்மத்தினடத்திலிருந்து வந்த அனைத்தும் எப்பொழுதும் சத்தாகத்தானே இருக்க முடியும். ஆக, பிரம்ஹத்தை விட்டு வேறு ஒன்று உண்மையில் கிடையாது.

எது உண்மையில் இருக்கின்றதோ, அதை விட்டு விட்டு, இல்லாத நாம ரூபத்தை உண்மை என்று அறிவதற்கு காரணம் மோகமாகும். யாரெல்லாம் பிரஹ்மத்தை தவிர மற்றதெல்லாம் இருக்கு, இருக்கு என்று கூறுகின்றார்களோ, அவர்களது மோகமானது (மயக்கமானது) இன்னும் செல்லவில்லை என்பது பொருள்.

மோகத்தினால் அவர்கள் பானை இருக்கின்றது கூஜா இருக்கின்றது, செயின் இருக்கின்றது, மோதிரம் இருக்கின்றது, கம்மல் போன்றவைகள் இருக்கின்றது,

என்று கூறுபவர்கள் இருக்கின்றது களிமண்தானே, இருக்கின்றது தங்கம் தானே என்று கூறுவதில்லை.

இது எப்படி என்றால், உறங்கிக் கொண்டிருப்பவன் கனவில் யாருடனோ பேசிக்கொண்டிருக்கின்றான், ஆனால் வெளியே இருந்து பார்ப்பவன் அவனை எதோ உளறுகிறான் என்று கூறுவது போல, உண்மையை அறியாதவன் மயக்கத்தினால் உளறுகிறான் என்று பிரஹ்மத்தை அறிந்தவன் கூறுவான் என்று ஶ்ரீ சங்கரர் கூறுகின்றார்.

74. **ப்ரஹ்மைவேதம் விச்வம் இத்யேவ வாணீ**
**ச்ரௌதீ ப்ருதேதர்வ நிஷ்ட்டா வரிஷ்ட்டா |**
**தஸ்மாதேதத் ப்ரஹ்ம மாத்ரம் ஹி விச்வம்**
**ந அதிஷ்ட்டானாத் பின்னதா ரோபிதஸ்ய ||**

இங்கு ஶ்ரீசங்கரர் முண்டக உபநிஷத்திலிருந்து 2:2:11 என்ற ஸ்லோகத்திலிருந்து விளக்கம் கொடுக்கின்றார்.

**ப்ரஹ்மைவேதம் அம்ருதம் புரஸ்தாத் ப்ரஹ்ம**
**பச்சாத் ப்ரஹ்ம தக்ஷிணச் சோத்தரேண |**
**அதத்சோர்த்வம் ச ப்ரஹ்ருதம்**
**ப்ரஹ்மைவேதம் விச்வமிதம் வரிஷ்டம் ||**

- முண்டக உபநிஷத் 2:2:11.

**விளக்கம்**

இந்த உலகம் பிரஹ்மனுக்கு வேறாக இல்லை. இவ்விதம்தான் அதர்வண வேதத்தில் இருக்கின்ற ஸ்ருதியில் உள்ள வேதவாக்கியம் கூறுகின்றது.

ஆகவே, இந்த உலகமே நிச்சயமாக பிரஹ்மம் தவிர வேறு ஒன்று அல்ல. ஒன்றின் மீது ஒன்றை நாம் ஏற்றிவைத்தால் அந்த ஏற்றி வைக்கப்பட்ட ஒன்று அதற்கு அடிப்படையான பொருளிலிருந்து வேறாக இல்லை.

எல்லா பானைகளும் களிமண்ணிலிருந்து வேறாக இல்லை, எல்லா நகைகளும் தங்கத்தினிடத்திலிருந்து வேறாக இல்லை. அதுபோல, இந்த உலகம் பிரஹ்மத்தினிடத்திலிருந்து வேறாக இல்லை.

ஜீவனையும், பிரம்மனையும் ஐக்கியப்படுத்தி விட்டால் இந்த உலகம் என்னவாவது என்ற சந்தேகம் இதிலிருந்து தெளிவாகின்றது.

ஆக, உண்மையில் இந்த உலகம் பிரஹ்மனிடத்தில் ஏற்றிவைக்கப்பட்ட வெறும் நாமரூபம். இந்த உலகம் பிரஹ்மனிடத்திலிருந்து வேறாக இல்லை. பிரஹ்மமேதான் இந்த உலகமாக இருக்கின்றது.

அறியாமையினால் கயிற்றின் மிது ஏற்றி வைக்கப்பட்ட பாம்பு போல, நம்முடைய அறியாமையின் காரணமாக இந்த உலகம் பிரஹ்மத்தின் மீது ஏற்றி வைக்கப்பட்டுள்ளது.

**“பிரஹ்மம் சத்தியம் ஜகத் மித்யா”** - என்று சாஸ்திரம் கூறுகின்றது.

அனுபவத்தில் இருக்கின்றது போல காணப்படுகின்ற இந்த உலகம் உண்மையில் இல்லை.

75. **ஸத்யம் யதி ஸ்யாத் ஜகதேதத் ஆத்மனோ**
**அனந்தத்வ ஹானி: நிகமாப்ரமாணதா |**
**அஸத்ய வாதித்வம் அபி ஈசிது: ஸ்யாத்**
**நைதத் த்ரயம் ஸாது ஹிதம் மஹாத்மனாம் ||**

**<u>விளக்கம்</u>**

அதாவது நாம் இந்த உலகத்தை சத்தியம் என்று கருதினால் என்னவாகும்?

இந்த உலகத்தை சத்தியம் என்று நாம் நம்பினால் மூன்று முக்கியமான தோஷங்கள் வரும் என்று இங்கு இந்த ஸ்லோகத்தில் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

காரணம் என்னவென்றால், பல அஞ்ஞானிகளினால் (அறிவற்றவர்களினால்) இந்த உலகம் சத்தியம் என்று நினைத்தால் பரவாயில்லை, பல தத்துவவாதிகளினாலும் கூட இந்த உலகம் உண்மை என்று நம்புபவர்கள் உள்ளனர்.

காரணம் நான் பார்த்து அனுபவிக்கும் இந்த உலகத்தை எப்படி மித்யா (பொய்) என்று கூறுவது என்பது அவர்களுடைய வாதம்.

இவ்விதம் இந்த உலகம் உண்மை என்று நம்பினால் என்ன என்ன குறைகள் வருகின்றன அதாவது தோஷங்கள் வருகின்றன என ஆசிரியர் விளக்கமாக இனி கூற உள்ளார். சற்று கவனமாக இதை ஆழ்ந்து படியுங்கள்.

இங்கு ஸ்ரீசங்கரர் பிரஹ்மம் சத்தியம் என்பது எவ்வளவு முக்கியமோ, அதுபோல இந்த உலகம் மித்யா என்பதுவும் மிக மிக முக்கியம் என்கின்றார்.

ஆத்மாவினிடத்தில் (பிரஹ்மம் = ஆத்மா) ஏற்றி வைக்கப்பட்ட இந்த உலகம் ஒருக்கால் உண்மையாக இருந்தால், பூர்ணமான இந்த பிரஹ்மத்தின் பூர்ணத்துவத்திற்கு (அனந்தத்துவத்திற்கு) அழிவு ஏற்படும்.

அனந்தம் என்றால் எதனாலும் வரையறுக்கப்படாதது.

அதாவது, இந்த உலகத்தை உண்மை என்றால் தேசம், காலம் போன்ற குணங்களினால் வரையறுக்கப்படாத தன்மையை பிரஹ்மம் இழந்து விடும்.

இதில் பிரஹ்மம் என்றாலே அதனது பூர்ணத்துவம்தான் சிறப்பு, அதை இழந்துவிட்ட பிரஹ்மத்தை எதற்காக நாம் அடையவேண்டும் என்ற எண்ணம் எழும்.

இதனால் பிரஹ்மத்திற்கு வேறாக இன்னொன்று இருக்கின்றது என்று தோன்றும் அதன் இருப்பே பிரஹ்மத்தை வரையறுத்துவிடும், அதாவது இரண்டு பொருள் இருந்து விட்டாலே உயர்வு, தாழ்வு என்று வரையரைக்கு உட்பட்டுவிடும், பிறகு அது பிரஹ்மத்தை விட சிறப்பானதாக தோன்றும். **இது முதல் குறை.**

பிரஹ்மம் வரையறுக்க முடியாதது என்று யார் கூறியது? நமக்கு எப்படி தெரிந்தது என்றால், இது நமக்கு உபநிஷத்துக்களிலிருந்து கிடைத்த ஞானம்.

சத்தியம், ஞானம், அனந்தம் என்று பிரஹ்மத்தை உபநிஷதங்கள் கூறுகின்றது.

இப்படிப்பட்ட உபநிஷதங்கள் பிரஹ்மத்தை அனந்தம் என்று கூறியது பொய்யாகிவிடும். அதனால், வேதம் பொய்யாகிவிடும் **இது இரண்டாவது குறை.**

அடுத்து, இந்த வேதம் ஒரு மனிதனுடைய புத்தியில் திடீரென்று தோன்றி எழுதப்பட்டது அல்ல. அந்த காலத்து ரிஷிகள் பொழுது போகவில்லை என்று எழுதப்பட்ட சாஸ்திரம் அல்ல.

பிறகு இந்த வேதம் எப்படி கிடைத்தது என்றால், இது ஈஸ்வரனின் வாக்கு, அதாவது ஈஸ்வரனாலேயே கூறப்பட்ட சொல் என்பது நம்முடைய சம்பிரதாயத்தில் காலம்காலமாக கூறப்பட்டு வருகின்றது.

இந்த உலகத்தை ஈஸ்வரன் படைத்திருக்கின்றார் என்றால், இந்த உலகத்தை எப்படி பயன்படுத்துவது என்பதையும் சேர்த்து விளக்கியுள்ள பகுதிகளே இந்த வேதங்கள்.

தாங்கள் ஒரு புதிய செல்போன் ஒன்று வாங்கியுள்ளீர்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள், அதனை எப்படி பயன்படுத்துவது என்ற சிறிய குறிப்பு புத்தகம் ஒன்றையும் உடன் கொடுப்பார்கள். காரணம், அதை எப்படி பயன்படுத்துவது என்ற அறிவு அந்த பொருளோடு சேர்ந்து கிடைக்கவேண்டும்.

அதுபோல, இந்த உலகத்தை பகவான் படைத்தவுடன் இந்த உலகத்தை எப்படி பயன்படுத்துவது என்ற குறிப்பை வேதமாக ஈஸ்வரன் கொடுத்திருக்கிறார்.

ஒரு பொருளை பயன்படுத்த விரும்புபவர்களால், அந்த பொருளைப் பற்றிய அறிவைக் கொடுக்க முடியாது. ஆனால், அந்தப் பொருளை படைத்தவர்களால்தான் அந்தப் பொருளை எப்படி பயன்படுத்துவது என்ற அறிவை கொடுக்க முடியும்.

அதாவது எந்த நிறுவனம் அந்த பொருளை படைக்கின்றதோ அந்த நிறுவனத்தினர்களினால்தான் அந்த பொருளை எப்படி பயன்படுத்துவது என்ற அறிவைக் கொடுக்க முடியும்.

அதுபோல இந்த உலகத்தை எப்படி பயன்படுத்த வேண்டும் என்ற அறிவை அதைப் பயன்படுத்திக்கொண்டிருக்கின்ற நம்மால் அந்த அறிவைக் கொடுக்க முடியாது.



இந்த உலகத்தைப் படைத்த பகவானினால்தான் அந்த அறிவைக் கொடுக்க முடியும். ஆகவே, வேதம் ஈஸ்வரனுடைய வாக்கு.

இப்படிப் பார்க்கும் பொழுது, இந்த உலகத்தைப் படைத்த ஈஸ்வரன் கொடுத்த வேதப் புத்தகம் நமக்கு அவரது வாக்கினாலேயே இந்த உலகம் என்மீது ஏற்றி வைக்கப்பட்டுள்ளது என்று கூறுகின்றது.

உலகம் உண்மை என்றால், அந்த வேதத்தின் வாயிலாக ஈஸ்வரன் சொன்னது பொய் ஆகிவிடும்.

அந்த வேதம் பொய் என்றால், அந்த ஈஸ்வரனே பொய் சொன்னதாக ஆகிவிடும். அப்படிப்பட்ட பொய் கூறும் ஈஸ்வரனை அடைய முயற்சிப்பது மடமை ஆகும். இது மூன்றாவதாக வந்த குறை ஆகும்.

இப்படி இந்த உலகத்தை உண்மை என்று கூறினால் இந்த மூன்று தோஷங்களும் வந்துவிடும்.

அதாவது ஈஸ்வரன் தனது வாக்கால் கூறப்பட்ட வேதமானது, அந்த ஈஸ்வரனை பூர்ணம் என்று கூறும் பொழுது, அப்படிப்பட்ட குறைகளற்ற பரிபூர்ணமான ஈஸ்வரன் உண்மையாக இருக்கின்ற பொழுது, அவர் மீது ஏற்றி வைத்த இந்த உலகத்தை உண்மையென்றால் அந்த ஈஸ்வரன் பூர்ணம் அல்ல என்று ஆகிவிடும்.

ஆகவே இந்த உலகம் உண்மை என்று கூறி இப்படிப்பட்ட தோஷங்களை ஒரு ஞானி ஏற்கமுடியாது.

ஆக, இந்த ஜகத்தானது சத்தியம் அல்ல. என்று ஸ்ரீசங்கரர் இங்கு நிலை நாட்டுகின்றார்.

**76. ஈச்வரோ வஸ்து தத்வஜ்ஞோ ந சாஹம் தேஷ்வ்வஸ்தித: |**
**ந ச மத்ஸ்தானி பூதானி இதி ஏவமேவ வ்யசீ க்லுபத் ||**

**<u>விளக்கம்</u>**

**ஜகத் மித்யா என்று ஈஸ்வரன் எங்கு கூறினார்? என்று கேள்வி வரும் பொழுது ...**

**4. ஓ, 'மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்த மூர்த்திநா | மத்ஸ்தாநி ஸர்வபூதானி ந சாஹம் தேஷ்வவஸ்தித: ||**

**5. ந ச மத்ஸ்தாநி பூதாநி பஸ்ய மே யோகமைஸ்வரம் ||** - (பகவத்கீதை 9.4-5).

4. ஈஸ்வரனாகிய நான் இந்த பூதங்களை சார்ந்து இருக்கவில்லை. எல்லா பூதங்களும் என்னை சார்ந்து இருக்கின்றன.

5. அவைகளுக்குள் நான் இல்லை, அவைகள் என்னிடத்திலும் இல்லை.



அதாவது, மேகங்களுக்கு ஆதாரம் ஆகாயம்தான். ஆனால், ஆகாயத்தில் எப்பொழுதும் மேகங்கள் இருப்பதில்லை. அவை அநித்யமானபடியால் அவற்றிற்கு நிரந்தரமான இருப்பும் இல்லை. ஆகவே, அவை ஆகாயத்தில் இல்லை.

இதேபோல இந்தப் பிரபஞ்சம் அனைத்தும் என்னுடைய யோக சக்தியினால் உண்டானவை. நானே அவற்றிற்கு ஆதாரம். ஆகவே, இவையெல்லாம் என்னிடம் உள்ளன. ஆனாலும் நான் அவற்றிற்கு முற்றிலும் அப்பாற்பட்டவன். அவை எப்பொழுதும் என்னிடம் இல்லை, என்னைத் தவிர இவ்வுலகிற்கு வேறு ஆதாரமுமில்லை.

அதாவது மனித நோக்கில் உலகம் என்ற ஒன்று இருக்கும் வரை அவையெல்லாம் என்னிடம் உள்ளவை. என்னைத்தவிர இவற்றிற்கு வேறு ஆதாரம் இல்லை. உண்மையில் நானே அனைத்துமாக இருக்கின்றேன்.

அதாவது பகவானைத் தவிர பிரபஞ்சமே வேறாக இல்லை என்பதிலிருந்து பகவான் தான் படைத்த பொருட்களில் அடங்குவதில்லை. அதாவது, தாமே தனித்து என்றும் விளங்குகிறார். ஆகவே, இந்த பிரபஞ்சத்தை தனித்து பார்ப்பது அறியாமையாகும்.

பகவத் கீதையில் ஒன்பதாவது அத்தியாயத்தில் 4 மற்றும் 5 இந்த இரண்டு ஸ்லோகங்களினுடைய சாரத்தை இந்த ஸ்லோகத்தில் ஸ்ரீசங்கரர் குறிப்பிடுகின்றார்.

நாம் எல்லோரும் பகவத்கீதை பகவானால் இந்த மனிதர்களுக்கு உபதேசிக்கப்பட்டது என்று நம்பி வருகின்றோம். ஆகவே, அந்த பகவானே இந்த இரண்டு ஸ்லோகங்களின் வாயிலாக இதை தெளிவு படுத்துகின்றார் என்று ஸ்ரீசங்கரர் இங்கு கூறுகின்றார்.

ஈஸ்வனாகிய கிருஷ்ணர் உண்மைப் பொருளினுடைய தத்துவத்தை அறிந்தவர். அவர் இவ்விதம் கூறி ஜகத்தினுடைய மித்யாத்துவத்தை இங்கு உறுதி செய்கின்றார்.

**77. யதி ஸத்யம் பவேத் விச்வம் ஸுஷுப்தாவுபலப்யதாம் |**
**யந்நோபலப்யதே கிஞ்சிததோ ऽஸத் ஸ்வப்னவன்ம்ருஷா ||**

**விளக்கம்**

ஒருக்கால் இப்படிப் பார்க்கப்படுகின்ற உலகம் சத்தியமானது என்றால் எல்லாக் காலங்களிலும் இருக்க வேண்டும்.

ஆனால், அதுவே நம்முடைய ஆழ்ந்த உறக்கத்தில் இல்லாமல் போய் விடுகின்றது. அப்படி இருந்திருந்தால் விழிப்பு நிலையில் உள்ளது போல நம்மால் அனுபவிக்கப்பட்டிருக்கும்.

ஆனால், ஆழ்ந்த உறக்கத்தில் நம்மால் அனுபவிக்க முடிவதில்லை. ஆக, இந்த உலகமும் வந்து, சென்று கொண்டிருக்கின்றது.

ஆகவே, எது வந்து போகின்றதோ அது அங்கு நிரந்தரமாக இல்லை.

எனவே கனவை போல இந்த உலகமும் பொய்தான்.

78. **அத: ப்ருதக் நாஸ்தி ஜகத் பராத்மன:**
**ப்ருதக் ப்ரதீதிஸ்து ம்ருஷா குணாஹிவத் |**
**ஆரோபிதஸ்ய அஸ்தி கிம் அர்த்தவத்தா**
**அதிஷ்டானம் ஆபாதி ததா ப்ரமேண ||**

**விளக்கம்**

ஆகவே, பிரம்மனிடமிருந்து இந்த உலகம் வேறாக இல்லை. பிரம்மத்திற்கு வேறாக இது காணப்படுவதற்கு காரணம் கயிற்றில் பார்க்கின்ற பாம்பைப் போல, அதாவது மங்கிய வெளிச்சத்தில் கயிற்றினைப் பார்த்து பாம்பு என்று எப்படி அறியாமையினால் தவறு செய்தோமோ, அதுபோல பிரம்மத்தை தவறாக புரிந்து கொண்டதினால் இந்த உலகம் இருப்பது போல காணப்படுகின்றது.

கயிற்றைப் பற்றிய அறிவு (ஞானம்) வந்ததும், எப்படி பாம்பு மறைந்து கயிறு மட்டுமே தெரிகின்றதோ, அதுபோல, பிரம்மத்தைப் பற்றிய ஞானம் வந்ததும் இந்த உலகம் மறைந்து விடுமா? என்றால்,



அப்படியல்ல,

காரணம், ஓரிடத்தில் கானல் நீர் ஓடுவதைப் பார்த்து உண்மையான நீர் என்று சென்று பார்க்கின்றோம். அப்பொழுது அது கானல் நீர்தான் என்பது புரிகின்றது. இருப்பினும் அந்த கானல் நீர் அப்படியேதான் இருக்கும்.

மேலும் வானத்தை நீல நிறத்தில் பார்க்கின்றோம்.

ஆனால், உண்மையில் வானத்தின் நிறம் நீலம் இல்லை என்பது நமக்கு தெரியும், இருப்பினும் வானம் நீல நிறமாகத்தானே தோன்றுகின்றது.

சில தவறுகள் எல்லாம் ஞானத்திற்கு பிறகும் இருக்கும். ஆனாலும் அதனால் நமக்கு எந்த பாதிப்பும் இல்லை.

அதுபோல பிரம்மத்தினுடைய ஞானம் வந்ததும் இந்த உலகமும் ஞானிக்கு தெரிந்து கொண்டுதான் இருக்கும், ஆனால் அதனால் ஞானி பாதிப்படைவதில்லை.

ஈஸ்வர விஷாரம் இத்துடன் முடிவடைகின்றது.

அடுத்து மஹாவாக்ய விஷாரம்...

## ஜீவ பிரம்ம ஐக்யம் விஷாரம்

==========================

**79. தத் த்வம் பதாப்யாம் அபிதீயமானயோ:**
**ப்ரஹ்மாத்மனோ: சோதிதயோ: யதித்தம் |**
**ச்ருத்யா தயோ: தத் த்வமஸீதி ஸம்யக்**
**ஏகத்வம் ஏவ ப்ரதிபாத்யதே முஹு: ||**

**விளக்கம்**

இனி நாம் பார்க்க இருப்பது **“அஸி”** பத விஷாரம். உபநிஷத்தில் ஜீவனுக்கும், பிரம்மனுக்கும் உள்ள சம்பந்தம் என்ன எனில், **“தத்வமஸி”** என்று உபதேஷம் செய்கின்றது.

‘**தத்**’ என்றால் அந்த ஈஸ்வரன் ‘**துவம்**’ என்றால் நீயாக ‘**அஸி**’ என்றால் இருக்கின்றாய் என்று, அதாவது அதுவாக நீ இருக்கின்றாய் என்கின்றது.

இங்கு நீ என்பது ஜீவனைக் குறிக்கின்றது. அத் என்ற சொல் ஈஸ்வரனைக் குறிக்கின்றது. இருக்கின்றாய் என்ற சொல் ஐக்கியத்தைக் குறிக்கின்றது.

ஜீவனும், பிரம்மமும் ஒன்று என்ற தத்துவத்தை குறிக்கின்றது. ஆகவே ‘**அஸி**’ பத விஷாரம் என்றால் ஐக்கிய விஷாரம் ஆகும்.

இரண்டு பொருட்கள் எடுத்துக்கொள்ளப்பட்டு, இரண்டு பொருட்களும் ஒன்று என்று கூறப்படுகின்றது என்றால், எப்பொழுது கூற முடியும், எப்பொழுது கூறமுடியாது, ஏன் கூறவேண்டும், ஏன் கூறமுடியாது என்பதை சற்று விரிவாக பார்க்கலாம்.

அதாவது இரண்டு வேறு வேறு பொருட்களை எடுத்துக்கொண்டு அவைகள் இரண்டும் ஒன்று என்று கூறமுடியாது. காரணம் ஐந்து = ஆறு என்று கூறமுடியாது. அதாவது ஐந்தை, ஆறுடன் சமப்படுத்த முடியாது.

அதுபோலவே ஐந்து = ஐந்து என்றால், அதனை சமப்படுத்த முடியுமா என்றால், அதுவும் அவசியமில்லை, காரணம் என்னவெனில், ஐந்து = ஐந்து என்பதில் யாருக்கு சந்தேகம் இருக்க முடியும்? இதனை சமப்படுத்துவதற்கு அவசியமில்லை.

பிறகு எப்பொழுது இரண்டையும் எடுத்துக்கொண்டு சமப்படுத்த வேண்டிய சூழ்நிலை உருவாகும் என்றால், ஒரு பக்கம் 2+3 என்று இருக்கின்றது. மற்றொரு பக்கம் 6 -1 என்று இருக்கின்றது. இந்த சமன்பாட்டை சமன்படுத்தி 5 என்ற ஒரே விடையை ஒரு குழந்தைக்கூட எளிதாக சமன் படுத்தி விடும்.

ஆகவே, எந்தச் சூழ்நிலையில் சமன்படுத்த வேண்டிய நிலை ஏற்படும் என்றால் முற்றிலும் ஒன்றாக இருந்தால் சமன்படுத்த முடியாது. முற்றிலும் வேறாக இருந்தாலும் சமன்படுத்த முடியாது.

பிறகு சமன்பாட்டுக்கு ஒரே ஒரு நிபந்தனை என்னவெனில் உண்மையில் முற்றிலும் வேறுபடாமல், ஆனால் தோற்றத்தில் வேறுபட்டது போல எப்பொழுது இருக்கின்றதோ, அப்பொழுதுதான் சமன்பாடே உருவாகும்.

ஆகவே வாழ்க்கையில் எந்தெந்த இடத்திலெல்லாம் நாம் சமப்படுத்துகின்றோமோ, அதுதான் இது என்று கூறுகின்றோமோ அந்த இடத்தில் நிபந்தனை என்னவென்றால் உண்மையில் ஒன்றாக

இருந்து, உண்மையில் வேறுபடாமல் இருந்து, ஆனால் தோற்றத்தில் வேற்றுமையுடன் இருந்தால் அப்பொழுது தான் சமப்படுத்த முடியும்.

இந்த ஒரு நியதியை வேதாந்தத்திற்குள் நாம் கொண்டு வருகின்றோம்.

ஜீவன் என்ற (நாம்) ஒரு தத்துவம், ஈஸ்வரன் என்ற ஒருவர் இருக்கின்றார். இப்பொழுது ஜீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் ஒரு சம்பந்தம் இருக்க வேண்டும். அது என்ன சம்பந்தம்? அதாவது எந்த வகையில் இருவருக்கும் உறவு?

அதாவது ஜீவதத்துவம், ஈஸ்வரத் தத்துவம் என்ற இரண்டுக்கும் என்ன சம்பந்தம்? இங்கு சாஸ்திரம் இந்த இரண்டு தத்துவங்களையும் சமன் படுத்துகின்றது.

எப்படி, ஜீவனும், ஈஸ்வரனும் ஒன்று என்று கூறுகின்றது என்றால் 2+3 = 5, 6 -1 = 5 என்று சமன் படுத்துவது போல ஜீவனும் ஈஸ்வரனும் தோற்றத்தில் வேறு வேறாக இருப்பினும் ஒன்று என்று சமன் படுத்துகின்றது.

அப்படி ஜீவனையும், ஈஸ்வரனையும் ஒன்று என்று உபநிஷத்துகளில் எந்த வாக்கியம் கூறுகின்றதோ, அதைத்தான் நாம் **'மஹா வாக்கியம்'** என்று கூறுகின்றோம்.

மஹா என்றால் பெரிய என்று பொருள். பெரிய பிரயோஜனத்தைக் கொடுக்கக்கூடிய வகையில் இது மஹா வாக்கியம் என்று பொருள் படுகின்றது. இந்த மஹா வாக்கியம் ஜீவனையும், ஈஸ்வரனையும் ஐக்கியப்படுத்துகிறது.

இப்பொழுது, எந்த ஒரு ஐக்கிய சூழ்நிலையிலும் இரண்டு நிபந்தனைகளைப் பார்த்தோம். உண்மையின் அடிப்படையில் ஒன்றாக இருக்க வேண்டும், பிறகு வேறொன்றினுடைய அடிப்படையில் தோற்றத்தில் வேறுபட்டு இருக்க வேண்டும்.

மேலோட்டமாக பார்த்தால் ஒற்றுமை தெரியாது. ஆனால், விஷாரம் செய்து பார்த்தால் இரண்டும் சமன் என்ற ஒற்றுமை தெரியும்.

ஜீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் உள்ள சம்பந்தமானது ஐக்கியம் என்று **'தத்துவமஸி'** என்ற மஹா வாக்கியம் நமக்கு உபதேஷம் செய்கின்றது.

எப்படிப்பட்ட ஜீவன், எப்படிப்பட்ட ஈஸ்வரன் என்றால், நாம் ஏற்கனவே ஜீவனுடைய வார்த்தையை எடுத்துக்கொண்டு, துவம் என்ற பதத்தின் அர்த்தமான ஜீவனாகிய நம்மை நாம் விஷாரத்திற்கு எடுத்துக்கொண்டு, அதாவது **பஞ்சகோஷ விஷாரம்** செய்து ஐந்து கோஷங்களும் நானல்ல, மேலும் மூன்று உடலும் நானல்ல. இதைப் பிரகாஷப் படுத்துகின்ற அறிவு ஸ்வரூபமான சைதன்யம்தான் **'நான்'** என்ற முடிவுக்கு வந்தோம்.

பிறகு ஈஸ்வரனுடைய விஷாரத்தில் இந்த உலகத்திற்கெல்லாம் மாயையின் துணைகொண்டு காரணமாக இருக்கின்றார். ஆனால் அவருடைய உண்மையான ஸ்வரூபம் ‘**சத்தியம், ஞானம், அனந்தம்**’ ஆகும்.

அதாவது ஈஸ்வருனுடைய ஸ்வரூபம் அறிவு ஸ்வரூபம், ஜீவனுடைய ஸ்வரூபம் அறிவு ஸ்வரூபம் என்று முடிவு செய்தோம்.

ஈஸ்வரனுடைய மற்றும் ஜீவனுடைய இடையேயான பொதுவான ஒன்றை எடுத்துக் கொண்டு இரண்டும் ஒன்று என்று ஐக்கியப் படுத்தினோம். அதைத்தான் இந்த செய்யுளில் ஜீவனும், பிரம்மமும் ஒன்று என்பதை “**தத்துவமஸி**” என்று இங்கு கூறப்படுகின்றது.

தது, துவம் என்கின்ற சொற்களினால் சொல்லப்படுகின்ற பிரம்மத்திற்கும், ஆத்மாவிற்கும் உள்ள ஒற்றுமையானது **“தத்துவமஸி”** என்ற வார்த்தையினால் நன்கு விஷாரம் செய்து ஸ்ருதியினால் (சாந்தோக்கிய உபநிஷத்தினால்) கூறப்படுகின்றது.

தத்துவமஸி என்பதை “அதுவாக நீ இருக்கின்றாய்” என்று அதுவும், நீயும் ஒன்று என்பதில் எந்த விதமான சந்தேகமின்றி பலமுறை விளக்கப்பட்டுள்ளது.

**80. ஐக்யம் தயோர் லக்ஷிதயோர் ந வாச்யயோர்
நிகத்யதே அன்யோன்ய விருத்த தர்மிணோ: |
கத்யோத பான்வோ: இவ ராஜ ப்ருத்யயோ:
கூபாம்புராச்யோ: பரமாணு மேர்வோ: ||**

**<u>விளக்கம்</u>**

ஒரு சொல்லைக் கேட்டவுடன், அந்த சொல்லினுடைய பொருள் நம் மனதிற்கு தெரிவது வாக்கியார்த்தம் என்கின்றோம். உதாரணமாக சிங்கம் என்று ஒரு வாக்கியத்தை சொன்னவுடன் நம் மனதில் சிங்கம் என்ற மிருகம் மனதில் தெரியும், இதைத்தான் **"வாக்கியார்த்தம்"** என்கின்றோம்.

பிறகு சில சமயங்களில் ஒரு சொல்லை சொன்னவுடன் அதன் வாக்கியார்த்தம் பொருந்தி வராது. அந்த நேரத்தில் அந்த வாக்கியத்தின் சம்பந்தப்பட்ட வேறு அர்தத்தை நாம் எடுத்தாக வேண்டும். அதே சொல் வேறு ஒரு அர்தத்தை கொடுக்கும். இதற்கு **"இலட்சியார்த்தம்"** என்று பெயர்.

உதாரணமாக, நாம் ஒருவனை பார்த்து '**சிங்கம்**' என்கின்றோம். உடனே நம்முடைய மனதில் எந்தவிதமான வாக்கியார்த்தம் வரும். அவன் ஒரு சிங்கம் என்று நாம் சொன்னவுடன், நம் மனதில் சிங்கம் என்ற மிருகம் தோன்றினாலும், நாம் அவனை சிங்கமாக பார்க்க மாட்டோம். ஆனால், அவனை சிங்கத்தைப் போன்ற தைரியமானவன் என்று அறிவோம்.

அப்பொழுது இந்த சொல்லானது வாக்கியார்தத்தைக் கொடுக்காமல், இலட்சியார்த்தத்தைக் கொடுக்கின்றது. அந்த சொல்லிலிருந்து வேறு ஒரு பொருளை அந்த இடத்திற்கு தகுந்தாற் போல நாம் எடுத்துக்கொள்கின்றோம்.

இப்படி நம்முடைய வாழ்க்கையில் நாம் பல சமயங்களில் வாக்கியார்த்தத்தைப் பயன்படுத்தாமல் இலட்சியார்த்தத்தை பயன்படுத்துகின்றோம்.

இப்பொழுது ஒருவர் நம்மிடம் மாம்பழத்தைக் கொடுத்து சாப்பிடுங்கள் என்கிறார் என வைத்துக்கொள்ளுங்கள். நாம் என்ன செய்வோம்?. அவர் இதை சாப்பிடக்கூறியுள்ளார், ஆகவே, நாம் அந்த மாம்பழத்தின் தோல், கொட்டை முதலிய அனைத்தையும் சாப்பிட்டு விடுவோமா?

இங்கு வாக்கியார்த்தம் மாம்பழத்தைச் சாப்பிடுங்கள் என்பது, ஆனால், நாம் புரிந்து கொள்வது என்னவென்றால் சாப்பிடுங்கள் என்று சொன்னாலும் கூட இதில் கொட்டையை, தோலை சாப்பிடக்கூடாது என்பதை புரிந்து கொள்கின்றோம். இதில் சாப்பிடவேண்டிய பகுதிகளை மட்டுமே சாப்பிடுவோம், அதே இலட்டைக் கொடுத்து சாப்பிடுங்கள் என்றவுடன் முழு லட்டையும் அப்படியே சாப்பிட்டு விடுவோம்.

ஆக, நாம் இடத்திற்கு தகுந்தாற் போல அந்த சொல்லிற்கு அர்த்தம் புரிந்து கொள்கின்றோம்.

இப்படி எந்த ஒரு சொல் நிலையில் மனதில் தோன்றுகின்ற பொருள் ஒத்துவரவில்லையோ, அப்பொழுது நாம் அதிலிருந்து வேறு ஒரு பொருளுக்கு நாம் போயாக வேண்டும். அப்படி போவதற்குப் பெயர் இலட்சியார்த்தம் ஆகும்.

இந்த இலட்சியார்த்தத்தைப் பற்றி இனி வரும் பகுதிகளில் மேலும் விரிவாகப் பார்க்கலாம்.

இதுபோல சாஸ்திரத்தில் ஜீவன், ஈஸ்வரன் என்ற இரண்டு சொற்கள் இருக்கின்றன. நாம் கோவிலுக்கு சென்று பகவானே எனக்கு நல்ல புத்தியைக் கொடு, நல்ல பண்புகளைக் கொடு என்று சொல்லும் பொழுது, ஜீவன் என்பவன் ஈஸ்வரனிடமிருந்து படைக்கப்பட்டவன். நம்முடைய கர்மத்திற்கு எல்லாம் பலனைக் கொடுப்பவர்.

இந்த இடத்தில் ஜீவனும், ஈஸ்வரனும் வேறு வேறாக தோன்றும், இங்கு **'தத்துவமஸி'** என்று கூறக்கூடாது.

அதாவது பகவானை வணங்கும் ஒரு பக்தனாக நாம் இருக்கும் பொழுது, நாம் பகவானால் படைக்கப்பட்டவர்கள், பகவான் அனைத்திற்கும் காரணமாக இருப்பவர் என்பது புரியும்.

நாம் சாதாரணமானவர்கள், பகவான் சர்வ சக்திமான் என்பது விளங்கும்.

இதுபோல, ஜீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் இப்படிப்பட்ட ஒரு பெரிய வேறுபாடு உள்ளது என்பதை நாம் எப்படி புரிந்து கொண்டோம் என்பதில்தான் இரகசியமே இருக்கின்றது.

அதாவது, நாம் இந்த உடலோடு ஜீவனைப் பொருத்திப் பார்க்கும் பொழுது மேற்கண்ட விஷயங்கள் உண்மை.

எப்படி?

பஞ்ச கோஷங்களான அனாத்மாக்களை இந்த உடலோடு சேர்த்து, இந்த உடலை 'நான்' என்று புரிந்துக் கொண்டு, ஈஸ்வரனை இந்த பிரபஞ்சத்தோடு சம்பந்தப்படுத்தி புரிந்து கொள்ளும் பொழுது, ஜீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் பெரிய பேதம் காணப்படுகின்றது.

அவர் படைப்பவர், நாம் படைக்கப்பட்டவர். நாம் செய்கின்ற ஒவ்வொரு செயலையும் அவர் கண்காணித்துக்கொண்டு இருப்பவர். இதையெல்லாம் நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

ஆனால், உபநிஷத் ஒரு பெரிய உண்மையை நமக்கு உபதேஷிக்கின்றது.

அது என்ன?

‘**தத்துவமஸி**’ - நீ அதுவாக இருக்கின்றாய். என்கின்றது.

அந்த ஜீவனும், ஈஸ்வரனும் ஒன்றுதான் என்று கூறியதுமே, நாம் என்ன நினைத்துக் கொள்கின்றோம்?

ஜீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் இவ்வளவு வேற்றுமை நம் கண்ணிற்கு முன்னால் தெரிகின்றதே என்றால், ‘**துவம்**’ என்பதின் வாக்கியார்த்தம் என்ன?

எப்பொழுது எல்லாம் ‘**நீ**’ அல்லது ‘**நான்**’ என்று கூறும் பொழுது என்ன அர்த்தம் மனதிற்கு தெரிகின்றது. மனதிற்கு தெரிகின்ற வாக்கியார்த்தம் - அனாத்மாவுடன் சேர்ந்த ஒரு ஜீவன். ஒரு அறிவு ஸ்வரூபம்.

பிறகு ஈஸ்வரன் என்று கூறியவுடன் என்ன தெரிகின்றது. இந்த உலகத்தை படைத்து, காத்துக்கொண்டிருக்கின்ற ஒரு தத்துவம் என்று புரிந்து கொள்கின்றோம்.

ஆகவே, தது ஈஸ்வரன் என்றவுடன் பிரம்ம தத்துவமோ, சைதன்ய தத்துவமோ தோன்றாது.

அதாவது சிங்கம் என்றவுடன், சிங்கம் என்ற மிருகம் நம் மனதிற்கு வருவது போலவும், அவன் சிங்கம் என்றவுடன் அவன் மிருகம் அல்ல, சிங்கம் போன்ற வலிமை பொருந்தியவன் என்பது புரியும்.

அதுபோல, அது என்ற வாக்கியார்த்தம் ஈஸ்வரன் இந்த உலகத்திற்கு காரணமாக இருப்பவர் என்று முதலில் தோன்றும், பிறகு நான், நீ, ஜீவன் என்று கூறினால் வாக்கியார்த்தம் இந்த உடலோடு கூடிய ஸ்தூல, சூட்சும, காரண சரீரத்தோடு கூடிய ஒரு அறிவு ஸ்வரூபமாகிய 'நான்' என்று தோன்றும்.

இப்படி அறிவு ஸ்வரூபமான மூன்று உடலையும் கொண்டவனும், இந்த உலகத்திற்கே காரணமாக இருக்கின்ற ஈஸ்வரன் ஒருவனையும் ஐக்கிய படுத்த முடியாது.

சம்பந்தப்படுத்த முடியாது. காரணம், மலைக்கும், மடுவுக்கும் உள்ள வேறுபாடு போன்ற மிகப் பெரிய வேறுபாடு காண்கிறோம்.

அப்படியென்றால், "தத்துவமஸி" என்பது எதனுடைய அடிப்படையில் உண்மையாகும் என்றால், இந்த இடத்தில் நாம் வாக்கியார்த்தத்தை விட்டு விட்டு இலட்சியார்த்தத்திற்கு போக வேண்டும்.



இது மாம்பழத்தையும், லட்டையோ எப்படி சாப்பிடக் கொடுத்தால், நாம் இதில் எந்தப் பகுதிகளை சாப்பிடுவது, எந்தப் பகுதிகளைச் சாப்பிடாமல் விடுவது என்பதைப் புரிந்து கொள்கின்றோமோ, அதுபோல ஜீவனும், பிரம்மமும் ஒன்று என்றால் நாம் வாக்கியார்த்தத்தை எடுத்துக்கொள்வதா? அல்லது, இலட்சியார்த்தத்தை எடுத்துக்கொள்வதா? எதை எடுத்துக் கொள்வது, இதில் எப்படி புரிந்து கொள்கிறோம் என்பதில் உண்மை உள்ளது.

**81. தயோ: விரோதோ அயம் உபாதி கல்பிதோ**
**ந வாஸ்தவ: கச்சித் உபாதிரேஷ: |**
**ஈசஸ்ய மாயா மஹதாதி காரணம்**
**ஜீவஸ்ய கார்யம் ச்ருணு பஞ்ச கோஷம் ||**

**விளக்கம்**

ஜீவனுக்குன், ஈஸ்வரனுக்கும் இந்த வேறுபட்ட தன்மை வருவதற்கு காரணம் உபாதி என்ற நம்முடைய உடல்தான் காரணம் ஆகும். அதாவது, ஈஸ்வரனுக்கு இந்த உலகம் உடலாக இருக்கின்றது. நமக்கு பஞ்ச கோஷங்கள் உடலாக இருக்கின்றது. இந்த உபாதியினால்தான் பேதங்கள் வந்துள்ளது.

ஜீவனுக்கும், ஈஸ்வரனுக்கும் ஐக்கியம் என்று கூறும்பொழுது இலட்சியார்தத்தின் அடிப்படையில்தான் கூறுகின்றோம். வாக்கியார்தத்தின் அடிப்படையில் வேற்றுமையானது இருக்கின்றது. ஆனால் இந்த வேற்றுமை உண்மை அல்ல.

ஈஸ்வரனுக்கு உபாதியானது மாயா. மகத் முதலியவற்றிற்கு காரணமாக இருகின்றது மாயா. மகத் என்றால் மாயையிலிருந்து முதலில் தோன்றிய தத்துவம். சூட்சுமமான பஞ்ச பூதங்கள், ஹிரண்யகர்பன் முதலியவைகள் மகத் ஆகும். இப்படிப்பட்ட மாயைதான் ஈஸ்வரனுக்கு உடலாக இருக்கின்றது.

ஜீவனுக்கு பஞ்ச கோஷங்கள்தான் உடலாக இருக்கின்றது. இதில் ஜீவன் என்பவன் ஆத்ம ஸ்வரூபம் ஆனவன். அவன் ஐந்து கோஷங்களோடு சம்பந்தப்படுத்தி பார்க்கும் பொழுது அவனுக்கு பலவிதமான குணங்கள் ஏற்பட்டு விடுகின்றன.

அதாவது, சம்சாரியாக இருத்தல், கர்த்தாவாக இருத்தல், போகத்தாவாக இருத்தல், அல்ப சக்திமானாக இருத்தல், சுக,துக்கியாக இருத்தல் இப்படிப்பட்ட குணங்கள் கொண்டவன் இந்த ஜீவன்.

பிறகு சுத்த சைதன்யமானது அனைத்து காரணத்திற்கும் காரணமான மாயையோடு சேரும்பொழுது, இந்த உலகத்தைப் படைப்பவர், கர்ம பலனைக் கொடுப்பவர் என்ற தர்மங்களெல்லாம் வந்து விடுகின்றது. இவ்விதம் ஒரே ஒரு சைதன்யம் அந்த மாயையோடு சேரும் பொழுது ஈஸ்வரன் என்றும், பஞ்ச பூதங்களோடு சேரும் பொழுது ஜீவன் என்றும் பெயர் பெறுகின்றது.

தண்ணீரானது சூடாக இருந்தால் இங்கு அக்னியானது சம்பந்தப்பட்டுள்ளது என நாம் அறிந்து

கொண்டதினால் நீரில் வெப்பத்தை உணர்கின்றோம். அதுவே, அந்த அக்கினியை அனைத்து விட்டால் நீரானது தனது இயல்பான குளிர்சியை அடைந்து விடும். இங்கு நீரில் உள்ள உஷ்ணம் என்ற வெப்பமானது நெருப்பு என்ற உபாதியினால் வந்தே தவிர, தன்னுடைய இயல்பான ஸ்வரூபம் அல்ல.

இதுபோல ஒரு ஸ்படிகம் இருக்கின்றது. அதனருகில் சிகப்பு நிறமுடைய செப்பருத்தி பூ இருந்தால், அந்த ஸ்படிகமும் அந்த சிகப்பு நிறத்தை அடைகின்றது. அந்த சிகப்பு நிறமானது அந்த ஸ்படிகத்தின்மீது ஏற்றிவைக்கப்பட்டுள்ளது. ஆனால் உண்மையில் ஸ்படிகத்தின் இயல்பு நிறம் சிகப்பு அல்ல.

அதுபோல ஒரே ஒரு சைதன்ய ஸ்வரூபத்தினை இந்த உடலோடு ஏற்றிப்பார்த்தால் இந்த ஜீவன் என்றும், அதுவே இந்த பஞ்ச கோஷங்களான உடலை நீக்கிப் பார்த்தால் இந்த ஜீவனே அந்த பரமாத்ம ஸ்வருபமான ஈஸ்வரன் என்பதும் புரியும்.

ஜீவனுடைய உபாதியானது அனைத்திற்கும் காரியமாக இருக்கின்ற பஞ்ச கோசங்கள். ஈஸ்வரனுடைய உபாதியானது அனைத்திற்கும் காரணமாக இருக்கின்ற மாயை என்பதை நீ நன்கு கேட்டு புரிந்து கொள் என்கின்றார்.

**82. ஏதௌ உபாதீ பரஜீவயோ: தயோ:**
**ஸம்யக் நிராஸே ந பரோ ந ஜீவ: |**
**ராஜ்யம் நரேந்த்ரஸ்ய படஸ்ய கேடக:**
**தயோ: அபோஹே ந படோ ந ராஜா ||**

**விளக்கம்**

இந்த ஸ்லோகத்தின் வாயிலாக வாக்கியார்த்தத்திலிருந்து இலட்சியார்த்தத்திற்கு எப்படி வர வேண்டும் என்பதை ஸ்ரீ சங்கரர் இங்கு விளக்குகின்றார்.

இந்த ஜீவனையும், ஈஸ்வரனையும் வேறு வேறாக பார்க்காமல் ஐக்கியப் படுத்தியாக வேண்டும். அதற்கு என்ன செய்ய வேண்டும் என்றால், ஜீவனிடம் இருக்கின்ற பஞ்ச கோஷங்களை நீக்க வேண்டும்.

அதுபோல, ஈஸ்வரனிடமிருக்கின்ற மாயையை நீக்க வேண்டும். அவ்வாறு இந்த இரண்டையும் நாம் நீக்கி விட்டால், ஈஸ்வரனிடம் வெறும் அறிவு ஸ்வரூபம் இருக்கும், அதுபோல, ஜீவனிடமும் அறிவு ஸ்வரூபம் மட்டுமே எஞ்சியிருக்கும், பிறகு இப்படிப்பட்ட அறிவு ஸ்வரூபம் இரண்டும் ஒன்றுதான் என்பதை நாம் புரிந்து கொள்ள முடியும்.

இங்கு இதை எப்படி பிரிப்பது? என்ற கேள்வி வரும்பொழுது…

இங்கு செயலினால் எதையும் பிரிக்க முடியாது. அறிவினால் பிரிக்க வேண்டும்.

அதாவது அறியாமையினால் கலந்து விட்ட இதை அறிவினால்தான் பிரிக்க முடியும்.

கல்லும், அரிசியும் கலந்து இருந்தால், அதை அறிவினால் பிரிக்க முடியாது. இது கல், இது அரிசி என்ற அறிவு அதைப் பிரித்து விடாது. உண்மையாகவே இரண்டு பொருட்கள் கலந்து இருந்தால் அதைச் செயலின் மூலமாகத்தான் பிரிக்க வேண்டும்.

ஆனால், அறியாமையினால் கலந்து விட்டதாக நினைக்கும் ஒரு பொருளை எப்படி செயலினால் பிரிக்க முடியும். எனவே, இதை அறிவினால் மட்டுமே பிரிக்க இயலும்.



அதாவது, ஸ்படிகம் சிகப்பு நிறத்தில் மலரின் வர்ணத்தை ஏற்று காட்சியளிகின்றது. இங்கு அறிவினால் இந்த ஸ்படிகத்தின் நிறம் சிகப்பு அல்ல என்று தெரிந்து விட்டால், அந்த ஸ்படிகத்தை மலரிடமிருந்து

அறிவினால் பிரித்தால் அந்த ஸ்படிகம் அதன் இயல்பு நிறத்திற்கு தானாகவே வந்துவிடும்.

இந்த ஜீவனுக்கும், ஈஸ்வனுக்கும் இருக்கின்ற இரண்டு உபாதிகளான ஜீவனிடமிருக்கின்ற ஐந்து கோஷங்கள், ஈஸ்வரனிடமிருக்கின்ற மாயா என்ற இந்த உபாதிகளை நீக்க அறிவின் மூலமாக இந்த ஒவ்வொரு கோஷங்களின் மீது இருக்கின்ற அபிமானங்களை தெளிவாக புரிந்து கொண்டு நீக்கி விட்டால், ஈஸ்வரன் என்ற ஒன்று இல்லை, ஜீவன் என்ற ஒன்று இல்லை உண்மையில் அங்கு இருப்பது சுத்த பிரஹ்மம் மட்டுமே என்பது புரியும்.

எதனிடம் எந்த உபாதியும் இல்லையோ அது மட்டுமே நிர்குணபிரஹ்மம் ஆகும்.

இந்த இடத்தில் ஸ்ரீ சங்கரர் ஒரு உதாரணத்தின் மூலமாக விளக்குகின்றார்.

ஒரு மனிதன் இருக்கின்றான், ஒரு நாட்டுக்கு அரசனாக இருக்கின்றான். அந்த நாடே அவனுக்கு அடிமையாக இருக்கின்றது. பிறகு அந்த மனிதனுக்கு ஒரு பெயர் வருகின்றது. அது ‘ராஜா’ என்பதாகும். பிறகு இன்னொரு மனிதன் இருக்கின்றான். அந்த மனிதன் அந்த ராஜாவுக்கு காவலாளியாக இருக்கின்றான். அந்த காவலாளி தன்வசம் அனைத்து ஆயுதங்களையும் தாங்கிய ராஜாவுக்கு ஒரு பாதுகாவலனாக இருப்பான்.

ஒரு மனிதனிடம் கிரீடம் என்ற ஒன்று இருப்பதினால் அவன் அரசன் என்றும், மற்றொரு மனிதனிடம் ஆயுதங்கள் இருப்பதினால், அவனை அரசனுக்கு காவலாளி என்றும் அழைக்கப்படுகின்றான்.

இப்பொழுது ராஜாவிடம் இருகின்ற ராஜ்ஜியத்தை பறித்து விட்டோம் என்றால், அவர் ராஜா அல்ல. அதுபோல அந்த காவலாளியிடம் இருக்கின்ற ஆயுதங்களைப் பறித்து விட்டால், அவன் காவலாளியும் அல்ல. இந்த ராஜா, காவலாளி என்ற தன்மை அவனது ஸ்வபாவமோ, ஸ்வரூபமோ அல்ல. அது அந்த ராஜ்ஜியத்தினாலும், ஆயுதத்தினாலும் தற்காலிகமாக கிடைத்த ஒரு வித பதவி ஆகும்.

இப்பொழுது இருவரையுமே வேறு வேறாக பார்க்காமல் சாதாரணமான மனிதர்களாக எப்படி பார்ப்போமோ, அதுபோல, வாக்கியார்த்தத்தின் அடிப்படையில் ஈஸ்வரனான ராஜாவும், அவருக்கு சேவை செய்கின்ற ஜீவனும் இந்த உலகம் இருக்கும் வரை அந்தந்த பதவியில் இருப்பது போலத் தெரியும் என்கிறார். அதாவது, இந்த உடல் என்ற உபாதி இருக்கும் வரை ஈஸ்வரன் நம்மை ஆள்பவர், நாம் அவருக்கு சேவை செய்பவர்கள்.

அதுவே, நாம் இலட்சியார்த்தத்திற்கு வந்தால் இந்த உபாதிகளை அறிவினால் நீக்கினால், ஈஸ்வரனும், நாமும் வேறு வேறல்ல என்பது நன்றாக புரியும்.

**83. ததஸ்து தௌ லக்ஷணயா ஸுலக்ஷ்யௌ**
**தயோ: அகண்டைக ரஸத்வ ஸித்தயே |**
**நாலம் ஜஹத்யா ந ததாऽஜஹத்யா**
**கிந்து உபயார்த்தாத்மிகயா ஏவ பாவ்யம் ||**

**<u>விளக்கம்</u>**

மீண்டும் இங்கு வாக்கியார்த்தம் மற்றும் இலட்சியார்த்தம் என்ற கருத்துக்கு வருகின்றோம். நாம் சாதாரணமாக ஒரு வார்த்தையை பேசும் பொழுது அந்த வார்த்தையின் பொருளைக் கேட்டவுடன் அதன் நேரடியான பொருளைத்தான் முதலில் எடுத்துக்கொள்ள முயல்வோம். இதில் ஒருக்கால் நேரடியான பொருள் பொருந்தி வரவில்லையென்றால், நம்மை அறியாமல் அதன் சம்பந்தப்பட்ட வேறொரு பொருளை எடுத்துக் கொள்ள முயற்சி செய்வோம்.

இதற்கு உதாரணமாக ஒரு தந்தை மகனை பார்த்து கோபத்தில் **“நீ எங்காவது தொலைந்து போ!”** என்று கோபத்தில் திட்டினார் என்றால் இதற்கு அவர் எப்படி பொருள் எடுத்துக் கொள்வார்?

அவர் தற்பொழுது கோபமாக உள்ளார். ஆதலால், நாம் அவரிடமிருந்து சிறிது நேரம் ஒதுங்கி இருப்பது நல்லது என்று எடுத்துக்கொள்வாரா? அல்லது தொலைந்து போ! என்று கூறிவிட்டார் இனி நான் அவர் கூறியபடி தொலைந்து போகலாம் என்று நினைப்பாரா?

அவரது கோபம் போய்விட்டால் அந்த வார்த்தைக்கு அர்த்தம் இல்லை என்பதினால் சிறிது நேரம் ஒதுங்கி இருப்பார். பிறகு தந்தையின் கோபம் போனவுடன் சிறிது நேரம் கழித்து மீண்டும் அவரை சந்திப்பார். அவரது தந்தையும் தான் திட்டியதை மறந்து இருப்பார். இதுதான் சூழ் நிலைக்கு தகுந்தாற்போல் பொருள் எடுத்துக் கொள்வது என்கிறோம். இந்த இடத்தில் வாக்கியார்த்தம் பொருந்தவில்லை என்பதால் நாம் இலட்சியார்த்தத்தை எடுத்துக்கொள்கிறோம்.

அதனால்தான் நாம் பேசுகின்ற வார்த்தையை வைத்து எதையும் முடிவு செய்ய முடியாது. நாம் என்ன உணர்வுடன் பேசுகிறோம் என்பதை மற்றவர்கள் புரிந்து கொள்வார்கள். நாம் இந்த வார்த்தையைத்தான் கூறினேன் உனக்கு ஏன் கோபம் வந்தது என்று கூறமுடியாது. அந்த வார்த்தையினுடைய இலட்சியார்த்தம் வேறாக இருக்கலாம். அதை நாம் புரிந்து கொள்வோம்.

இவ்வாறு நம்முடைய அன்றாட வாழ்க்கையில் நாம் பேசுகின்ற சொல்லுக்கும், அந்த சொல்லினால் நாம் குறிப்பிடுகின்ற அர்த்தத்திற்கும் வேற்றுமை இருக்கின்றது. இந்த இலட்சியார்த்தத்திற்கு மூன்று விதமான பொருள் இருக்கின்றது.

முதல் விதமான இலட்சியார்த்தத்திற்கு **ஜெகல் இலக்ஷசணா** என்று பெயர். ஜெகல் என்றால் விட்டுவிடுதல் என்று பொருள். தமிழில் இதனை **“விட்ட இலட்சணை”** என்று கூறுவார்கள்.

இரண்டாவது **அஜெகல் இலக்ஷ்சணா** என்று பெயர். இதனை தமிழில் **“விடாத இலட்சணை”** என்று பொருள்.

மூன்றாவது **ஜெகாஜெகல் இலக்ஷ்சணா** என்று பெயர். இதனை தமிழில் **“விட்டும், விடாத இலட்சணை”** என்று பெயர். அதாவது பாதியை விட்டு விட்டு, பாதியை விடாத இலட்சணை ஆகும்.

இது நாம் அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்துகின்ற முறைகள்தான். ஆனால் சமஸ்கிருதத்தில் கேட்டவுடன் ஏதோ புதிதாக உள்ளதாக நினைத்துக் கொள்ளக்கூடாது. இப்பொழுது முதலில் **ஜெகல் இலக்ஷ்சணா** என்றால் என்ன என்று முதலில் பார்க்கலாம். பிறகு ஒவ்வொன்றாக பார்க்கலாம்.

ஜெகல் இலக்ஷ்சணா என்றால் விட்டு விடுகின்ற இலட்சணை. எதை விட்டுவிடுவது? என்றால், ஒரு சொல்லை நாம் பயன்படுத்துகின்றோம், அந்த சொல்லினுடைய முழு அர்த்தத்தையே விட்டுவிட்டு புதியதாக வேறு ஒரு பொருளை எடுத்துக்கொண்டால் அது ஜெகல் இலக்ஷ்சணா எனப்படும்.

உதாரணமாக, கிரிக்கெட் விளையாட்டில் நாம் இந்தியா விளையாடுகின்றது என்கின்றோம். இந்த வார்த்தையில் இந்தியா என்ற சொல்லுக்கு என்ன பொருள்? இந்தியா என்பது ஒரு தேசம். இந்த தேசமா சென்று ஆஸ்திரேலியா தேசத்துடன் சென்று

விளையாடுகின்றது. இது எங்கும் நகர்வதில்லை. இந்தியா விளையாடுகின்றது என்ற வார்த்தையை எடுத்துக் கொண்டால் இந்தியாவில் இருக்கின்ற விளையாட்டு வீரர்கள் விளையாடுகின்றார்கள் என்பதை புரிந்து கொள்கின்றோம்.

அதாவது இந்தியா என்பது ஒரு இடத்தினுடைய பெயர். அதை விட்டுவிட்டு இந்தியாவில் உள்ள விளையாட்டு வீரர்களை எடுத்துக்கொள்கிறோம். இங்கு வாக்கியார்த்தத்தை முழுமையாக விட்டுவிட்டு வாக்கியார்த்தத்துடன் சம்பந்தப்பட்ட வேறு ஒரு அர்த்தத்தை எடுத்துக்கொள்வதுதான் ஜெகல் இலக்ஷசணா என்கின்றோம். அதாவது "விட்ட இலட்சணை" என்கின்றோம்.

அடுத்து அஜெகல் இலக்ஷசணா என்றால், வாக்கிய அர்த்தத்தை தியாகம் செய்யாமல், வாக்கிய அர்த்தத்தை அவ்விதமே வைத்துக் கொண்டு, வாக்கிய அர்த்தத்துடன் வேறு ஒன்றையும் சேர்த்துக் கொள்கின்றோம். இது **அஜெகல் இலக்ஷசணா** எனப்படும். இதை விடாத இலட்சணை என்கின்றோம்.

வாக்கியார்த்தத்தை விடாமல் வேறு ஒரு அர்த்தம் வாக்கியார்த்தத்துடன் சேர்த்துக் கொள்ளப்படுகின்றது அதை **அஜெகல் இலக்ஷசணா** என்கின்றோம்.

உதாரணமாக, ஒருவரிடம் தாங்கள் குடிக்க தண்ணீர் கொண்டு வாருங்கள் என்று கேட்கின்றீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அவரும் ஒரு டம்பளரில்

தண்ணீர் கொண்டு வருகின்றார். அப்பொழுது தாங்கள் நான் தண்ணீரைத்தானே கேட்டேன், நீங்கள் என்ன டம்பளரையும் சேர்த்துக் கொண்டு வந்துள்ளீர்கள் என்று கேட்பீர்களா? இல்லை அவரும் இவர் தண்ணீர்தானே கேட்டார் எப்படி தண்ணீர் கொண்டு செல்வது என்று யோசிக்க மாட்டார்.

காரணம், தண்ணீர் என்று சொல்லும் பொழுதே அந்த தண்ணீரை அவர் விட்டு விடவில்லை, தண்ணீருடன் அதை கொண்டு வரும் பாத்திரத்தையும் சேர்ந்து புரிந்து கொண்டு அவர் அதை கொண்டு வருகின்றார். இதை **அஜெகல் இலக்ஷ்சணா** என்கின்றோம்.

தாங்கள் கேட்டது தண்ணீர்தான் ஆனால் அவர் அதை புரிந்துக்கொண்டது என்னவென்றால், தண்ணீரைக் கொண்டுவருவதற்கு என்ன உபாயமோ அதையும் அவர் சேர்த்துக் கொள்கின்றார். அதாவது வாக்கியார்த்தத்துடன் இனியொன்றை சேர்த்துக்கொள்வது அஜெகல் இலக்ஷ்சணா எனப்படும். இதை **“விடாத இலட்சணை”** என்கின்றோம்.

மூன்றாவது என்னவென்றால், இதில் பாதியை விட்டுவிட்டு, பாதியை வைத்துக் கொள்கின்றோம். அது ஜெகாஜெகல் இலக்ஷ்சணா எனப்படும். விட்டும் விடுகின்றோம், விடாமல் வைத்தும் கொள்கின்றோம்.

இதற்கு ஏற்கனவே பார்த்த ஒரு உதாரணம் கூறவேண்டுமென்றால், இப்பொழுது ஒருவர் நம்மிடம்

மாம்பழத்தைக் கொடுத்து சாப்பிடுங்கள் என்கிறார் என வைத்துக்கொள்ளுங்கள். நாம் என்ன செய்வோம்?. அவர் இதை சாப்பிடக்கூறியுள்ளார், ஆகவே, நாம் அந்த மாம்பழத்தின் தோல், கொட்டை முதலிய அனைத்தையும் சாப்பிட்டு விடுவோமா?

இங்கு வாக்கியார்த்தம் மாம்பழத்தைச் சாப்பிடுங்கள் என்பது, ஆனால், நாம் புரிந்து கொள்வது என்னவென்றால் சாப்பிடுங்கள் என்று சொன்னாலும் கூட இதில் கொட்டையை, தோலை சாப்பிடக்கூடாது என்பதை புரிந்து கொள்கின்றோம்.

இதில் சாப்பிடவேண்டிய பகுதிகளை மட்டுமே சாப்பிடுவோம். இங்கு, இந்த இடத்தில் மாம்பழத்தை சாப்பிடுங்கள் என்ற வார்த்தையை நாம் அப்படியே பொருள் எடுத்துக்கொள்ளாமல், அதிலிருக்கின்ற பாதியை சாப்பிட்டு விட்டு, பாதியை விட்டு விடுகின்றோம். இதுதான் ஜெகாஜெகல் இலக்ஷ்சணா எனப்படுகின்றது. தமிழில் **"விட்டும், விடாத இலட்சணை"** என்கின்றோம்.

சரி! இப்பொழுது விஷயத்திற்கு வருவோம். தற்பொழுது நம்மிடம் ஜீவன், ஈஸ்வரன் என்ற இரண்டு தத்துவங்கள் இருக்கின்றன. இந்த இரண்டு தத்துவங்களின் வாக்கியார்த்தத்தை விட்டு விட்டு இலட்சியார்த்தத்திற்கு போகவேண்டும்.

இதில் இந்த மூன்று விதமான இலட்சியார்த்தத்தில் எந்த விதமான இலட்சியார்த்தத்தை கையாளவேண்டும்

என்றால், இந்த ஸ்லோகத்தில் சங்கரார் ஜீவனிடத்தில் **“விட்டும், விடாத இலட்சணை”** யைக் கையாளவேண்டும்.

அதாவது ஜெகாஜெகல் இலக்ஷ்சணா - வைக் கையாளவேண்டும்.

எப்படியென்றால், ஒவ்வொரு ஜீவனையும் நாம் ஆத்மா, அனாத்மா என்று இரண்டாக பிரித்துள்ளோம். ஆத்மா என்றால் அறிகின்ற அறிவு ஸ்வரூபம், அனாத்மா என்றால் பஞ்ச கோஷங்கள் என்று ஜீவனை இரண்டு கூறாக மனதிற்குள் பிரித்து வைத்துள்ளோம்.

அதேபோல, ஈஸ்வரனையும் இரண்டாக பிரித்து வைத்துள்ளோம். சத்தியம், ஞானம், அனந்தம் என்ற பிரம்மமாகவும், பிறகு இந்த ஜகத்திற்கே காரணமாக இருக்கின்ற மாயை என இரண்டாக பிரித்து வைத்துள்ளோம்.

இங்கு ஜீவனையும், ஈஸ்வரனையும் இணைக்கவேண்டுமென்றால், இங்கு ஜெகல் இலக்ஷ்சணா - வை எடுக்க முடியாது. காரணம் ஜீவனிடத்திலுள்ள அனைத்தையும் விட்டு விட முடியாது. ஏனெனில், ஜீவனிடத்தில் என்றும் அழியாத நித்தியமான ஒரு சைதன்யம் இருக்கின்றது. ஆகவே **“விட்ட இலட்சணை”** என்ற ஜெகல் இலக்ஷ்சணா சரியாக இருக்காது.

பிறகு அஜெகல் இலக்ஷ்சணா - வை எடுத்துக்கொள்ளலாமா என்றால், ஜீவனிடம் ஏற்கனவே சம்ஸாரத்தைக் கொடுக்கின்ற பஞ்ச கோஷங்கள் இருக்கின்றன.

அந்த கோஷங்கள் இருக்கின்ற வரைக்கும் ஈஸ்வரனுடன் இணையமுடியாது. ஆகவே, ஜீவனிடம் இருக்கின்ற எல்லா தன்மைகளையும் விட்டு விட்டு புதியதாக எதை ஒன்றையும் சேர்க்க முடியாது. எனவே, **“விடாத இலட்சணை”** என்ற அஜெகல் இலக்ஷ்சணா - வும் சரியாக இருக்க முடியாது.

தற்பொழுது, ஜெகாஜெகல் இலக்ஷ்சணா - வை எடுத்துக் கொண்டால் சரியாக வரும். எப்படியென்றால், ஜீவனிடம் ஒரு பகுதியை வைத்துக்கொள்கின்றோம், ஒரு பகுதியை விட்டு விடுகின்றோம். இதில் சைதன்ய அம்ஸத்தை வைத்துக்கொண்டு, பஞ்ச கோஷங்களைத் தியாகம் செய்கின்றோம். இங்கு ஒன்றை விட்டு, ஒன்றை விடாமல் வைத்துக்கொள்வதால் **“விட்டும், விடாத இலட்சணை”** என்பது சரியாக இருக்கும்.

அதேபோல, ஈஸ்வரனிடத்தில் மாயை - யை (ஜகத்தை) விட்டு விடுகின்றோம். அந்த சைதன்யத்தை வைத்துக்கொள்கின்றோம். அப்படி ஜீவனிடமும், ஈஸ்வரனிடமும் விட்டும் விடாத இலட்சணை யைக் கையாண்டால்தான் ஜீவனிடம் சைதன்யம் நமக்கு கிடைக்கும், ஈஸ்வரனிடத்திலும் சைதன்யம் நமக்கு கிடைக்கும்.

ஆதலால், ஜீவனிடமும், ஈஸ்வரனிடமும் உபாதியானது நீக்கப்பட வேண்டி இருப்பதினால், இந்த இலக்ஷ்சணையின் மூலமாகத்தான் ஜீவனிடமும், ஈஸ்வரனிடமும் நாம் அணுகவேண்டும்.

அந்த இருவருக்கும் இடையில் அத்வைதத்தை நிலை நாட்ட வேண்டுமென்றால், பிளவுபடாத ஒன்றாக இருக்கின்ற சித்திக்காக நாம் இலக்ஷ்சணையினால் அணுகவேண்டும்.

அது ஜெகல் இலக்ஷ்சணா - வினால் முடியாது. அதுபோல, அஜெகல் இலக்ஷ்சணா - வினாலும் முடியாது. ஆனால், ஜெகாஜெகல் இலக்ஷ்சணா - வினால்தான் நாம் செய்ய முடியும். இப்பொழுது இரண்டும் ஐக்கியம் என்று நாம் கூற இயலும்.

**84. ஸம்லக்ஷ்ய சின்மாத்ரதயா ஸதாத்மனோ:**
**அகண்டபாவ: பரிசீயதே புதை: |**
**ஏவம் மஹாவாக்ய சதேன கத்யதே**
**ப்ரஹ்மாத்மனோ ஐக்யம் அகண்டபாவ: ||**

**விளக்கம்**

சைதன்யத்தை மட்டும் வைத்துக்கொண்டு ஜீவனுக்கும், பிரஹ்மனுக்கும் இடையில் பொதுவாக இருக்கின்ற அறிவு ஸ்வரூபமான பிளவு படாத தன்மையை ஞானிகளால்தான் அறியப்படுகின்றது.

**ஜீவன் = ஈஸ்வரன்**

என்பதை நாம் எந்த வாக்கியார்த்தத்தின் அடிப்படையில் புரிந்து கொண்டுள்ளோமோ அதை விட்டு விட்டு, இலட்சியார்த்தத்தின் அடிப்படையில் இரண்டும் ஒன்றுதான் என்பதை அறிந்து கொள்.

ஜீவனையும், பிரஹ்மனையும் ஒன்றுதான் என்பதை ஒன்றிரண்டு மஹா வாக்கியம் கூறவில்லை, இது போன்ற நூற்றுக்கணக்கான மஹாவாக்கியங்கள் இரண்டும் ஒன்றுதான் என்று கூறுகின்றன.

காரணம் ஒவ்வொரு உபநிஷத்திலும் ஒவ்வொரு மஹாவாக்கியம் இருக்கும். சில உபநிஷத்தில் பல மஹா வாக்கியங்கள் இருக்கின்றன. உபநிஷத் என்றாலே மஹா வாக்கியத்தை போதிக்கின்றது என்று பொருள்.

உபநிஷத்தின் மையக்கருத்தே மஹாவாக்கிய ஞானத்தைக் கொடுப்பது. மஹாவாக்கியம் என்றாலே ஜீவ-பிரஹ்ம ஐக்கியம் என்று பொருள்.

அப்படிப்பட்ட பிரஹ்மத்துக்கும், ஆத்மாவுக்கும் உள்ள பிளவுபடாத பூர்ணமான ஐக்கியத் தன்மையை நூற்றூக் கணக்கான மஹாவாக்கியங்களினால் கூறப்படுகின்றது.

**85. ம்ருத்கார்யம் ஸகலம் கடாதி ஸததம் ம்ருன்மாத்ரமேவ அபித:
தத்வத் ஸஜ்ஜனிதம் ஸதாத்மகம் இதம் ஸன்மாத்ரம் ஏவாகிலம் |
யஸ்மாத் நாஸ்தி ஸத: பரம் கிமபி தத் ஸத்யம் ஸ ஆத்மா
ஸ்வயம் தஸ்மாத் தத்துவமஸி பரசாந்தமமலம் ப்ரஹ்மாத்வயம்
யத்பரம் ||**

**விளக்கம்**

சாந்தோக்கிய உபநிஷத்தில் ஆறாவது அத்தியாயத்தில் அந்த முழு உபநிஷத்துமே ஜீவ - பிரஹ்ம ஐக்கியத்தை நிலை நாட்டுகின்றது என்கின்றது.

களிமண்ணிலிருந்து படைக்கப்பட்ட பானை முதலிய அனைத்து மண்பாண்டங்களும் எப்பொழுதும், எல்லாக்காலங்களிலும் அது களிமண்ணாகவே காணப்படுகின்றது.

இதுபோலவே, தங்கத்திலிருந்து படைக்கப்பட்ட அனைத்து நகைகளும், எப்பொழுதும், எல்லாக் காலங்களிலும் அது தங்கமாகவே காணப்படுகின்றது.

அதுபோல, இந்த அகில உலகத்திற்கும் தங்கம் போல காரணமாக இருக்கின்றவர் சத் ஸ்வரூபமான ஈஸ்வரன், பல்வேறு வடிவத்தில் செய்யப்பட்ட நகைகள் போல காரியமாக இருக்கின்ற அனைத்தும் காரணத்திலிருந்து (ஈஸ்வரனிலிருந்து) வேறல்ல.

இதில் காரியம் (படைக்கப்பட்ட அனைத்தும்) என்பது காரணத்தில் (பிரஹ்மத்தில்) இருந்து வேறாக இல்லை.

இதை உபநிஷத்துக்கள் அனைத்தும் பல மஹாவாக்கியங்களினால் அது ஒன்றுதான் உள்ளது என்றும், அந்த ஒன்றே இப்படி பல நாமரூபங்களினால் பலவாகத் தெரிகின்றது என்றும், ஆனால் அது ஒன்றே ஒன்றுதான் இருக்கின்றது என்பதை பலமுறை பல கோணங்களில் உபதேஷிக்கின்றது.

சத்துக்கு வேறாக எதுவும் கிடையாது. அதாவது ஜீவன், உலகம் என்று எந்த வேற்றுமையும் கிடையாது. இருப்பது ஒன்றே ஒன்றுதான். அது மூன்று காலத்திலும் நீங்காமல் இருக்கின்றது.

அந்த **“சத்”** தான் சத்தியம், அப்படி சத்தியமாக இருக்கின்ற அதுதான் (ஆத்மா) ஜீவன். ஆகவே, அப்படிப்பட்ட அந்த ஆத்மாவான **“சத்”** தான் **‘நீ’** என்றும், அந்த **“சத்”** - தை காட்ட வேறு எந்த உதவியும் தேவையில்லை. காரணம் சத் என்பது **ஸ்வயம் பிரகாஷம்.**

ஆகவே ஜீவனும், பிரஹ்மமும் ஒன்று என்பதை ‘தத்துவமஸி’ என்று உபநிஷத் கூறுகின்றது. அப்படிப்பட்ட **“நீ அதுவாக இருக்கின்றாய்”** என்கின்றது.

**86. நித்ரா கல்பித தேசகால விஷய ஜ்ஞாத்ராதி ஸர்வம் யதா
மித்யா தத்வதிஹாபி ஜாக்ரதி ஜகத் ஸ்வாஜ்ஞான கார்யத்வத: |
யஸ்மாதேவமிதம் சரீரகரண ப்ராணாஹாமாத்யபி அஸத்
தஸ்மாத் தத் த்வமஸி ப்ரசாந்தமமலம் ப்ரஹ்மாத்வயம் யத்பரம் ||**

**விளக்கம்**

இங்கு ஜீவ விசாரம் சாரமாக கூறி மீண்டும் தத்துவமஸி என்ற மஹா வாக்கியத்தை ஆசிரியர் கூறுகின்றார்.

உறக்கத்தின் காரணமாக கனவு உலகம் கற்பிக்கப்பட்டது, அது எப்படி பொய்யோ அது போல நனவு உலகமும் பொய் என்பதை ஆசிரியர் விளக்குகிறார்.

கனவில் ஒரு இடம், காலம், விதவிதமான பொருட்கள் மற்றும் கனவை அறிபவனையும் நாம் கற்பனை செய்து பார்ப்பது எப்படி உண்மை இல்லையோ, அதுபோல விழிப்பு நிலையில் நாம் அனுபவித்துக்கொண்டு இருக்கின்ற இந்த உலகம் கூட உண்மை இல்லை.

கனவில் காணும் அனைத்து காட்சிகளுக்கும் தூக்கம் எப்படி காரணமாக அமைகின்றதோ, அதுபோல நினைவில் காணும் இந்த உலகக் காட்சிகளுக்கு ஆத்ம அஞ்ஞானம் (அதாவது நம்முடைய அறியாமை) காரணம் என்று ஆசிரியர் இங்கு குறிப்பிடுகின்றார்.

**“நீ தெரியாததினால் உனக்கு இந்த உலகம் தெரிகின்றது”**

அதாவது, தன்னைப் பற்றிய அறியாமையினால்தான் இந்த உலகம் தெரிகின்றது. உனக்கு உன்னை யார் என்று தெரிந்து கொண்டால் உனக்கு இந்த உலகம் தெரியாது.

இவ்விதம் உடல், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், பிராணன், பிறகு அஹங்காரம் முதலிய இவைகள் அனைத்தும் உண்மை அல்ல. ஆகவே, எது மேலானதோ, இரண்டற்றதாக இருக்கின்றதோ அத்தகைய ப்ரஹ்மம் நீயாக இருக்கின்றாய்.

அதாவது இந்த உடலை உண்மை என்று நினைத்தால் ப்ரஹ்மம் நீ அல்ல, ப்ரஹ்மம் உண்மை என்று நினைத்தால் இந்த உடல் நீ அல்ல.

## ஜீவன் முக்தி
===========

87. **ப்ரஹ்மாத்மனோ: சோதிதயோ: ஏகபாவாவகாஹினீ |**
**நிர்விகல்பா ச சின்மாத்ரா வ்ருத்தி: ப்ரஜ்ஞேதி கத்யதே |**
**ஸுஸ்திதா ஸா பவேத்யஸ்ய ஜீவன் முக்த: ஸ உச்யதே ||**

**விளக்கம்**

பிரஹ்ம ஞானத்தைப் பற்றிய அறிவு யாரிடம் நிறைந்து காணப்படுகின்றதோ அவர் ஜீவன் முக்தர் ஆவார் என்பதை இங்கு குறிப்பிடுகின்றார். பிறகு அந்த ஜீவன் முக்தரின் மன நிலை வர்ணிக்கப்படுகின்றது.

பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் இருக்கின்ற தத்துவத்தில் சோதனை செய்யப்பட்டு உண்மையான வற்றை எடுத்துக் கொண்டு தவறான புரிதலை திருத்தி, அதாவது தூய்மையாக்கி தேவையற்றவற்றை நீக்கி விட்டால் இருவரும் ஒன்றுதான் என்பதை புரிந்து கொள்ளுகின்ற ஞானம் வந்தவுடன் விகல்பமற்ற, வேற்றுமையற்ற, பிளவுபடாத எண்ணமான சைதன்ய ரூபம் மாத்திரமே இருக்கின்ற நிலையைத்தான் ஆத்ம ஞானம் அல்லது பேரறிவு என்று கூறப்படுகின்றது.

இந்த அறிவு முதலில் ஸ்ரவனத்தின் (கேட்டல்) மூலமாக ஒருவருக்கு வரவேண்டும். அப்படிப்பட்ட அந்த அறிவை அடைந்து விட்டால் மட்டும் போதாது, அந்த அறிவை தெளிவாக புரிந்துகொள்ள மனனம் (சிந்தித்தல்) வேண்டும், அதற்கு பிறகு அந்த ஞானத்தை தக்க வைத்துக்கொள்ள நிதித்யாஸனம் (நிலை பெறுதல்) வேண்டும்.

இப்படிப்பட்ட அறிவை அடைந்த ஞானியைத்தான் ஜீவன் முக்தன் என்று அழைக்கப்படுகின்றான்.

குறிப்பு:-

ஜீவன் முக்தன் என்றால் உயிரோடு வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுதே, அதாவது உடல், மனம், இந்திரியங்கள் அனைத்தும் செயல்பட்டு கொண்டிருக்கும் பொழுதே மனதிலிருக்கும் நிறைவின்மையிலிருந்து விடுதலை அடைந்தவன் எவனோ அவனே ஜீவன் முக்தன் ஆவான்.

எந்த ஒரு சாதகனுக்கு இந்த அறிவு நன்கு தனக்குள் நிற்கின்றதோ, இப்படிப்பட்ட அறிவைத்தான் ஜீவ - பிரஹ்ம ஐக்கியம் என்றும், ஜீவன் முக்தி என்றும் அழைக்கிறோம்.



இந்த ஜீவன் முக்தன் மற்றவர்களைப் போலவே சீதோஷ்ண நிலையில் (குளிர், உஷ்ணம் இவைகளால்) பாதிக்கப்படுவான். சராசரி மனிதன் போலவே உணவை உட்கொள்வான் ஆனால் குறைவாகவும், சாத்வீகமான உணவுகளையே உட்கொள்வான். உண்ட உணவின் கழிவை வெளித்தள்ளுவான். தூங்குவான், சிரிப்பான், பார்வைக்கு ஒரு சாதரண மனிதன் போலவே காணப்படுவான்.

ஆனால் ஒரே ஒரு வித்தியாசம் என்னவெனில் அவன் மன நிறைவுடன் இருப்பான். எதற்கும் அலட்டிக்கொள்ளமாட்டான்.

எதற்கும் ஆசைப்படமாட்டான். தேவைக்கு மேல் பேசவும் மாட்டான். மொத்தத்தில் 'நான்' என்ற அஹங்காரம் அற்றவனாக, தேவையற்ற செயல்களில் ஈடுபடாமல், மாயையை வென்றவனாக இருப்பான்.

**88. யஸ்ய ஸ்திதா பவேத் ப்ரஜ்ஞா யஸ்யானந்தோ நிரந்தர : |**
**ப்ரபஞ்சோ விஸ்ம்ருதப்ராய: ஸ ஜீவன் முக்த இஷ்யதே ||**

**<u>விளக்கம்</u>**

ஜீவனும், பிரம்மனும் ஒன்று என்ற அறிவானது யாருக்கு நிலைப் பெற்று நிற்கின்றதோ, பூரணமான மன நிறைவு காணப்படுகின்றதோ, அவனுக்கு இந்த உலகம் மறந்து விட்டது போல உள்ளதோ அவனே ஜீவன் முக்தன் ஆவான்.

ஞாபகசக்தி எப்படி ஒரு பெரிய சக்தியோ, அதுபோல தேவையற்ற விஷயங்களை மறப்பது அதைவிட மிகப் பெரிய சக்தி ஆகும். இதில் எதை மறக்க வேண்டுமோ அதை மறப்பதுதான் மிக முக்கியம்.

அதனால்தான் ஜீவன் முக்தர்களை பார்க்கின்ற சிலர் அவரை குழந்தையைப் போல, பைத்தியக் காரனைப் போல உள்ளார் என குறிப்பிடுவார்கள்.

இங்கு கவனிக்க வேண்டிய விஷயம் அவர் உண்மையில் பைத்தியமோ, குழந்தையோ அல்ல. பார்ப்பதற்கு பைத்தியக்காரனைப் போல காணப்படுவார். சிறு குழந்தையைப் போல நடந்து கொள்வார்.

இங்கு தேவையற்றதை மறக்காததால்தான் ஒருவன் துக்கப்படுகின்றான் என்பதை உணரவேண்டும்.

யாராவது நமக்கு துயரத்தைக் கொடுத்தால் அவரை பழிக்குப் பழி வாங்க நினைப்பதுதான் நம்முடைய துயரத்திற்கு காரணம். ஆகவே இந்த உலகம் நமக்கு கொடுக்கின்ற துயரங்களை கொடுத்தாலும் அதை பொருட்படுத்தாமல் மறக்கின்ற வல்லமை உள்ளவன் எவனோ அவனே ஜீவன் முக்தன்.

ஆக முக்தி என்பது எங்கோ சென்று அடைவதல்ல, நமக்குள்ளேயே அடைகின்ற விஷயம்.

**89. வர்த்தமானேடபி தேஹேடஸ்மின் சாயாவத் அனுவர்த்தினி |
அஹந்தா மமதாடபாவோ ஜீவன் முக்தஸ்ய லக்ஷணம் ||**

**விளக்கம்**

ஒரு ஜீவன் முக்தன் என்றாலே அவன் உயிரோடு இருந்து கொண்டிருக்கும் பொழுதே அவனுக்கு உடல் இருக்கின்றது. மனம் இருக்கின்றது. பிராணன் இருக்கின்றது. இவைகளெல்லாம் செயல்பட்டு கொண்டிருக்கின்றது.



அப்படியானால் ஒருவன் ஜீவன் முக்தனாக இல்லாமல் இருக்கின்ற பொழுது, அதாவது ஒரு சாதாரணமானவனாக இருந்த பொழுதும் இவைகள் எல்லாம் இருந்தது.

ஆகவே இரண்டிற்கும் உள்ள வேறுபாடு என்ன?

ஒருவன் ஜீவன் முக்தன் ஆனதற்கு பிறகு அவனது உடல், மனம், இந்திரியம் இவைகளையெல்லாம் ஒரு நிழலுக்கு சமமாக அவன் பார்ப்பான்.

எப்படியென்றால் ஒருவன் நடந்து செல்லும் பொழுது அவனது நிழல் கூடவே வந்தாலும் அது பாதையில் உள்ள நல்ல நீரிலும் விழும், கெட்ட சாக்கடை நீரிலும் விழும், இதற்காக அவன் வீட்டிற்கு சென்று உடனே குளிக்க மாட்டான், காரணம் அது **“நான் அல்ல”** என்னுடைய நிழல் என்பது அவனுக்கு தெரிந்துள்ளதோ அதுபோல, ஜீவன் முக்தன் இந்த உடலையே ‘‘நான் அல்ல’’ என்று நினைப்பதுதான் காரணம்.

90. **அதீதானனுஸந்தானம் பவிஷ்யத் அவிசாரணம் |**
**ஔதாஸீன்யமபி ப்ராப்தே ஜீவன் முக்தஸ்ய லக்ஷணம் ||**

**விளக்கம்**

இங்கு பெரும்பாலான மனிதர்கள் யாருமே நிகழ்காலத்தில் வாழ்வதில்லை, ஒன்று நடந்து முடிந்ததையே சிந்தித்துக்கொண்டு இருப்பது, அல்லது நடக்கப்போவதை திட்டமிட்டபடியே சிந்தித்துக்கொண்டு இருப்பது போன்ற மன நிலையில்தான் இருக்கின்றார்கள்.

அப்படி நடந்து முடிந்ததை நினைத்து துயரம், இனி நடக்கப்போவதை நினைத்து துயரம், ஆனால் தற்பொழுது நடந்துக்கொண்டிருப்பதை நாம் விட்டு விடுகின்றோம். இவ்விதம் எல்லா மனிதர்களும் நிகழ்காலத்தில் இல்லை. கடந்த காலத்தை நினைத்தோ, அல்லது எதிர்காலத்தை நினைத்தோ அவர்கள் துயரப்பட்டுக்கொண்டு வாழ்கின்றார்கள்.

ஜீவன் முக்தன் இரண்டு காலங்களிலிருந்தும் விடுதலை அடைந்துள்ளான். அதாவது அவன் இதுவரை வாழ்ந்த காலத்தைப் பற்றியோ, இனி மேல் வரப்போகின்ற காலத்தைப் பற்றியோ ஒரு நாளும் சிந்தித்து துயரப்பட மாட்டான்.

அவனுக்கு கிடைத்துள்ள இன்றைய இந்த ஞானம் அவனது கடந்த காலத்தில் கிடைத்த துயரங்கள், அல்லது சுகங்கள் காரணமாக இருந்ததினால் அதை மறந்து விடுவான், இனிமேலும் என்ன துயரம் வந்தாலும், சுகம் வந்தாலும் அதை ஏற்றுக்கொள்வான். ஆக கடந்த காலத்தைப் பற்றிய துக்கமோ, எதிர்காலத்தைப்பற்றிய துக்கமோ, சுகமோ ஜீவன் முக்தனிடம் கிடையாது.

ஒருவன் குழந்தையாய் இருக்கும் பொழுது விளையாட்டில் காலத்தைக் கடக்கின்றான், வயதானபிறகு கடந்த காலத்தைச் சிந்தித்தே காலத்தைக் கடக்கின்றான். இந்த துயரம் ஜீவன் முக்தனுக்கு கிடையாது.

எவன் ஒருவன் நடந்ததை எதையும் மீண்டும் மீண்டும் சிந்தித்து காலத்தைக் கடக்க மாட்டானோ, இனி

எதிர்காலத்தில் நடக்கப்போவதைப் பற்றியும் சிந்தித்து காலத்தைக் கடக்க மாட்டானோ அவனே ஜீவன் முக்தன் ஆவான்.

**91. குணதோஷ விசிஷ்டேடஸ்மின் ஸ்வபாவேன விலக்ஷணே |**
**ஸர்வத்ர ஸமதர்சித்வம் ஜீவன் முக்தஸ்ய லக்ஷணம் ||**

<u>விளக்கம்</u>

நல்லதும், கெட்டதும் சமமாக கலந்ததுதான் இந்த உலகம். ஒவ்வொரு நல்லதுக்கும், ஒரு கெட்டது இருக்கும், ஒவ்வொரு கெட்டதுக்கும் ஒரு நல்லது இருக்கும். பொதுவாக நல்லது - கெட்டது, விருப்பு - வெறுப்பு, துக்கம் - சந்தோஷம், வறுமை - செழுமை, என இந்த இருமைகள் கலந்ததுதான் இந்த உலகம் ஆகும்.

இந்த உலகத்தில் விரும்பத்தக்கதும், விரும்பத்தகாததும் கலந்துதான் இருக்கும். இப்படிப்பட்ட இந்த உலகம் ஆத்மாவின் உண்மைத்தன்மையை அறியாமல் வேறுபட்டு இருக்கின்றது.

இப்படிப்பட்ட இந்த உலகத்தில் அனைத்தையும் சமமாக பார்ப்பது என்பது ஜீவன் முக்தனுடைய இலக்ஷணம்.

இங்கு ஜீவன் முக்தன் என்பவன் சமதர்ஷணம் கொண்டவன். அதாவது, அவன் இந்த இரண்டையும்

சமமாக பாவிக்கின்றான் என்றால் இந்த இரண்டினாலும் அவன் பாதிக்கப்படுவதில்லை என்பது பொருள்.

**92. இஷ்டானிஷ்டார்த்த ஸம்ப்ராப்தௌ ஸமதர்சிதயா ஆத்மனி | உபயத்ராவிகாரித்வம் ஜீவன் முக்தஸ்ய லக்ஷணம் ||**

**விளக்கம்**

முதலில் நாம் இந்த சமதர்ஷணம் என்றால் என்ன? என்பதனைப் பார்ப்போம்.

ஜீவன் முக்தன் எல்லோரிடத்திலும் சம நோக்கு உடையவன் என்று கூறினால், பலர் என்ன நினைக்கின்றார்கள் என்றால் இவன் எல்லோரிடத்திலும் சமமாகத்தான் பழுகுவான் என்று நினைத்துக் கொள்கின்றார்கள்.

அதாவது, தீயவர்களிடமும், நம்மை விரும்பாதவர்களிடமும் கூட ஜீவன் முக்தன் சமமாகப் பழகுவான் என்று சிலர் நினைக்கின்றார்கள்.

ஒரு சிலர் ஜீவன் முக்தன் என்பவன் சம நோக்கு பார்வை உடையவன் என்பதினால் வேலைக்கு செல்லுமிடத்தில் எல்லோரிடத்திலும் சமமாக பழகவேண்டும் என்று நினைத்து அந்த நிறுவனத்தின் முதலாளியிடமோ, அல்லது மேனேஜரிடமோ இனி நான் உங்களுக்கு கீழ் வேலை செய்யும் வேலைக்காரன் இல்லை நானும், நீங்களும் ஒன்றுதான் என்று கூறினால்

அந்த ஜீவன் முக்தனின் நிலை என்னவாகும் என்பதனை கூறவும் வேண்டுமோ?

ஆகவே, இந்த உலகம் எப்படிப்பட்டது, யார், யார் எப்படி இருக்கின்றார்கள் என்பதனைப் பார்த்து அவரவர்களிடம் அவரவர்களுக்கு தகுந்தாற் போலத்தான் பழகியாக வேண்டும்.



அது சன்னியாசியாக இருந்தாலும், ஞானியாக இருந்தாலும், கிரஹஸ்தனாக இருந்தாலும் யார் நம்மிடம் எப்படி பழகுகின்றார்கள் என்பதைப் பொருத்துத்தான் அவன் அவர்களிடம் பழகியாக வேண்டும். ஆனால் ஆழ்ந்த மனதில் ஜீவன் முக்தனுக்கு எல்லோரிடத்திலும் சமமான பாவனை இருக்கும்.

இங்கு சமதர்ஷணம் என்பது சமமான செயல் அல்ல. மனதிற்குள் தோன்றும் சமமான பாவனை. இந்த மனதிற்குள் தோன்றும் சம பாவனையின் விளைவு அவன் எப்பொழுதும் மன அமைதியுடனும் மற்றும் விருப்பு வெறுப்புகள் அற்ற சம நிலையிலும் இருப்பான்.

விரும்பத்தக்கது, விரும்பத்தகாதது என்ற எந்த சூழ்நிலைகள் வரும்பொழுதும் அவற்றை சமமான பாவனையுடன் அவனுடைய மனதில் எந்த விதமான சஞ்சலமும் தோன்றாமல் வருவதை ஏற்றுக்கொள்கின்ற மனப்பக்குவம் கொண்டவனே ஜீவன் முக்தன் ஆவான்.

93. **ஸாதுபி: பூஜ்யமானேடஸ்மின் பீட்யமானேடபி துர்ஜனை: |**
**ஸமபாவோ பவேத் யஸ்ய ஸ ஜீவன் முக்த இஷ்யதே ||**

**<u>விளக்கம்</u>**

ஜீவ - ஈஸ்வர ஐக்கிய ஞானத்தை அடைந்தவன் இந்த உலகத்தில் எப்படி நடப்பான் என்பதை ஆசிரியர் விளக்கி வருகின்றார். இதில் சமமான பாவனையுடன் மனதில் எந்த விதமான சஞ்சலமும் தோன்றாமல் மனப்பக்குவம் கொண்டவனே ஜீவன் முக்தன் ஆவான் என்றும் பார்த்தோம்.

தனக்கு விருப்பமானது, விருப்பமற்றது வரும்பொழுதும், நல்லவர்களால் பூஜிக்கப்படும் பொழுதும், தீயவர்களால் தூற்றப்படும்பொழுதும் யாருக்கு சமமான மன நிலை இருக்கின்றதோ அவனே ஜீவன் முக்தன் என்று அழைக்கப்படுகின்றான்.

**94. விஜ்ஞாத ப்ரஹ்ம தத்வஸ்ய யதா பூர்வம் ந ஸம்ஸ்ருதி: |**
**அஸ்தி சேத் ந ஸ விஜ்ஞாத ப்ரஹ்ம பாவோ பஹிர்முக: ||**

**விளக்கம்**

நான் பல வருடங்கள் சாஸ்திரம் பயின்றுள்ளேன். பிரஹ்ம ஞானத்தை அடைந்து விட்டேன். பரம்பொருளைப் பற்றிய அறிவு எனக்கு வந்து விட்டது. ஆனால் சமபாவனை வரவில்லை என்ற சந்தேகம் ஒருவருக்கு வரலாம்.

அதாவது ப்ரஹ்ம ஞானம் இருக்கின்றது. ஆனால், பிரஹ்ம ஞானத்தின் பலன் எனக்கு இல்லை, நான் மீண்டும் மன அமைதி இல்லாமல்தான் இருக்கின்றேன் என்று யாராவது கூறலாம். அந்த சந்தேகத்தை மனதில் வைத்து ஸ்ரீசங்கரர் இங்கு இந்த ஸ்லோகத்தில் பதில் அளிக்கின்றார்.

உதாரணமாக, எப்படி சமைக்க வேண்டும் என்கின்ற ஞானமும், யோகாசனம் எப்படி செய்ய வேண்டும் என்கின்ற ஞானமும் பிரயோஜனத்தைக் கொடுக்காது. அந்த ஞானத்தில் பலன் இருக்காது. பலன் வேண்டும் என்றால் அந்த ஞானம் செயல் வடிவாக மாறி செயல்பட வேண்டும். அதாவது உணவை சமைக்க வேண்டும், உடற்பயிற்சி செய்ய வேண்டும். அப்பொழுதுதான் பலன் கிடைக்கும்.

ஆனால் பிரஹ்ம ஞானம் மட்டும் பலனுடன் கூடியது. அந்த அறிவே பலனைக் கொடுக்கும்.

எப்படியென்றால். ஒரு பிரசித்தியான கதையைப் பார்க்கலாம்.

ஒரு பத்து நபர்கள் ஆற்றைக் கடக்கின்றார்கள். அதில் அவர்கள் ஆற்றைக் கடந்ததும் அதில் ஒருவன் அவனை மட்டும் விட்டு விட்டு எண்ணிப் பார்க்கின்றான். ஒன்பது பேர் மட்டுமே எண்ணிக்கையில் வருகின்றது. ஒருவன் ஆற்றைக் கடக்கும் பொழுது இறந்து விட்டான் என்கின்றான்.

இதைக் கேட்ட மற்றொருவன் அந்த பத்தாவது மனிதன் **“நீதான்”** என்றவுடன் அவனுக்கு உடனே அறிவு வருகின்றது. இந்த அறிவு வர எத்தனை காலம் ஆகியிருக்கும்? அதாவது இந்த அறிவு பலனுடன் கூடியது. உடனே பத்தாவது மனிதன் கிடைத்தும் விட்டான்.

அதுபோலவே, நான் பத்தாவது மனிதனை கண்டுபிடித்து விட்டேன், ஆனால் ஒருவன் இறந்து விட்டான் என்று அவன் கூறினால், எப்படி முட்டாள்தனமாக இருக்குமோ, அதுபோல எனக்கு பிரஹ்ம ஞானம் வந்து விட்டது. ஆனால், பலன் கிடைக்கவில்லை என்றால் அவன் உண்மையில் ஞானத்தை அடையவில்லை என்பதே பொருள்.

ஆகவே ஏற்கனவே இருக்கின்ற ஒரு விஷயத்தில் எனக்கு ஞானம் இருக்கின்றது, ஆனால் பலன் இல்லை என்று கூறமுடியாது. பலனை நாம் அனுபவிக்கவில்லை என்றால், அங்கு ஞானம் இல்லை.

இருப்பினும் எனக்கு ஞானம் இருப்பது போல தெரிகின்றதே என்றால், அதை ஏற்றுக்கொள்ளலாம். ஒருவனுக்கு ஞானம் இருப்பது போல தெரியும். அனால் உண்மையில் அவனுக்கு ஞானம் இருக்காது. எப்படியென்றால், தண்ணீர் இருப்பது போலத் தெரியும். ஆனால் அங்கு தண்ணீர் இருக்காது. காரணம் அது வெறும் கானல் நீர்.



இதனை ஒரு மகான் அழகாகக் கூறுகின்றார். **“நாமெல்லாம் ஞானாபாஷத்தினால் திருப்தி அடைந்துள்ளோம்”** என்கின்றார்.

அதாவது, **ஞானத்தை அடைந்து விட்டது போல ஒரு திருப்தியினால் நாம் நம்மை திருப்திப் படுத்திக்கொள்கின்றோம்** என்று கூறுகின்றார்.

உண்மையான பிரஹ்ம ஞானம் பலனுடன் கூடியது.

ஒருவனுக்கு மேலும் ஒரு சந்தேகம் வரலாம். அதாவது ஸ்ரவணத்தில் (வேதாந்தத்தை தொடந்து கேட்டதினால்) எனக்கு ஞானம் வந்து விட்டது, பிறகு எதற்கு நிதித்யாஸனம் (ஞானத்தில் நிலை பெற்று இருப்பது) செய்யவேண்டும் என்று கேட்கலாம்.

நிதித்யாஸனம் செய்து ஞான நிஷ்டையில் நிலைபெற்று இருப்பதினைத்தான் இங்கு ஞானம் என்று கூறப்படுகின்றது. ஞானம் என்று கூறுவது எந்த விதமான சந்தேகமும் இன்றி தெளிவான மன நிலையில் பிரஹ்ம நிஷ்டையில் நிலைபெற்று இருப்பதினைத்தான் இங்கு ஞானம் என்று கூறப்படுகின்றது.

இதைத்தான் பலனுடன் கூடிய பிரஹ்ம ஞானம் என்று அழைக்கப்படுகின்றது.

பிரஹ்ம தத்துவத்தை அறிந்தவனுக்கு முன் இருந்தது போல, மன நிறைவின்மை என்ற துயரம் கிடையாது. ஒருக்கால் அவனிடம் அப்படிப்பட்ட துயரம் இருந்தால் அவன் பிரஹ்ம தத்துவத்தை அறிந்தவன் இல்லை.

குறிப்பு:-

(எதோ சில புத்தகங்களைப் படித்து விட்டோ, அல்லது சில வேதாந்த வகுப்புகளை கேட்டு விட்டோ

எனக்கு பிரஹ்ம ஞானம் வந்து விட்டது. ஆனால், அதில் நிலை பெற முடியவில்லை என்றால், அவனுக்கு உண்மையில் பிரஹ்ம ஞானம் கிடையாது என்பதுதான் உண்மை.)

பிரஹ்ம தத்துவத்தை அறியாதவன் தன்னுள்ளே தன்னை (பிரஹ்மத்தை) பார்க்காமல் வெளி விஷயங்களில் ஈடுபாட்டுடன் வெளியேயே அனைத்தையும் பார்த்துக்கொண்டிருப்பான்.

## விதேக முக்தி (கர்ம பலன் கிடையாது)

==================================

**95. அஹம் ப்ரஹ்மேதி விஜ்ஞானாத் கல்பகோடி சதார்ஜிதம் |**
**ஸஞ்சிதம் விலயம் யாதி ப்ரபோதாத் ஸ்வப்ன கர்மவத் ||**

<u>**விளக்கம்**</u>

ஒரு ஜீவன் இந்த ஸ்தூல சரீரத்துடன் சம்பந்தம் வைத்து விவகாரம் செய்ய வேண்டுமென்றால் அதற்கு அவனது பாவ - புண்ணியம் காரணம் ஆகின்றது.

நமக்கு இந்த உடல் கிடைப்பதற்கே காரணம் பாவ, புண்ணியம் ஆகும்.

நமக்கு சுகம் வரவேண்டும், துக்கம் வரவேண்டும் என்றால் ஒரு காரணமும் இல்லாமல் திடீரென்று வராது.

ஆகவே, ஒவ்வொரு சுகத்துக்கும், ஒவ்வொரு துக்கத்திற்கும் பாவம், புண்ணியம் என்ற காரணம் இருந்தாக வேண்டும். இவ்விதம் நமக்கு கிடைத்த உடல் பாவ, புண்ணியத்தினுடைய பலன்.

எவ்வளவு காலம் இந்த உலகத்தில் இருந்து சுக - துக்கங்களை அனுபவித்து வருகின்றோமோ அதுவும் பாவ - புண்ணியத்தினுடைய விளைவு.

அதாவது, ஒரு ஜீவன் இறந்து விடுகின்றான். இறந்ததற்கு பிறகு அவன் மீண்டும் ஒரு சரீரத்தை எடுக்க வேண்டும். எப்படிப்பட்ட சரீரத்தை எடுக்க வேண்டும் என்பதும் அவனது கர்ம வினையினுடைய பலனாக அமைகின்றது.

அப்படிப்பட்ட ஜீவன் அவனது கர்ம வினையின் அடிப்படையில் அவனுக்கு உடல் கிடைத்து, அவனது பாவ, புண்ணியங்களை அனுபவித்து சம்ஸாரத்தை தொடர்கின்றான்.

ஜீவன் முக்தனுடைய விஷயத்தில் அந்த ஜீவனானவன் இந்த உடலை விட்டவுடன் அவனுக்கு மீண்டும் சரீரம் கிடைக்காது. காரணம் அவன் வாழ்ந்த காலத்திலேயே ப்ரஹ்ம ஞானத்தை அடைந்து ப்ரஹ்ம நிஷ்டையில் நிலைப்பெற்று இருந்ததினால் அவன் விதேக முக்தியை அடைகின்றான் என்று சாஸ்திரம் கூறுகின்றது.

அவன் உயிரோடு இருந்து கொண்டிருக்கும் பொழுது அவன் ஜீவன் முக்தனாக இருகின்றான், அந்த ஜீவன் முக்தனே உடலை விட்டு விட்டு போகும் பொழுது அவனே விதேக முக்தியை அடைகின்றான். அப்படிப்பட்ட விதேக முக்தனுக்கு கர்ம பலன்கள் கிடையாது. இனி அவனுக்கு உடலும் கிடைக்காது.

அப்படியானால், அந்த ஜீவன் முக்தனுடைய கர்மங்கள் எல்லாம் என்ன ஆனது?

ஜீவன் முக்தனுடைய கர்மங்கள் அனைத்தும் (ப்ராரப்த கர்மா, சஞ்சித கர்மா, ஆகாமிய கர்மா ஆகிய மூன்றும் என்னவானது? என்ற கேள்வி வரும் பொழுது, அதனுடைய பதில்தான் இனி வர இருக்கின்றது.

ஆனால், அதற்கு முன்பாக நமக்கு கர்மம் என்றால் என்ன? என்பதையும் பார்த்துவிட்டு, பிறகு இந்த கர்மங்கள் எல்லாம் எப்படி விதேக முக்தனுக்கு இல்லாமல் போகின்றது என்பதனை பார்க்கலாம்.

ஒவ்வொரு ஜீவனுக்கும் அவன் செயல் (கர்மம்) செய்யும் பொழுது பாவம், புண்ணியம் என்ற பலன் வருகின்றது. இதில் சாஸ்திரம் கூறுகின்றது.

மனித உடல் எடுத்த ஜீவன் மட்டுமே புதியதாக பாவ - புண்ணியம் என்ற பலன்களை சேர்த்துக்கொள்கின்றது.

காரணம் மனித சரீரத்திற்கு மட்டுமே நல்லது எது? கெட்ட எது? என்று அறிந்து கொள்ளும் ஆறாவது அறிவு கொடுக்கப்பட்டுள்ளது.

ஆகவே மனிதனுக்கு மட்டுமே பாவம், புண்ணியம் என்பது உண்டு.

ஒரு பிறவியில் எவ்வளவோ பாவ, புண்ணியங்களை அவன் சேர்த்து வைக்கின்றான். இப்படி ஜீவனானவன் ஒவ்வொரு மனித பிறவியிலும் சம்பாதித்து சேர்த்து வைத்துள்ள பாவ, புண்ணியங்களை இவ்வளவுதான் என்று நம்மால் கணக்கிட்டு கூற முடியாது என்று சாஸ்திரம் கூறுகின்றது.

ஆகவே, ஒவ்வொரு ஜீவனுக்கும் எண்ணிக்கையில் அடங்காத பாவ - புண்ணியங்கள் சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றது. இனி அடுத்து, அந்த ஜீவன் எப்பொழுது இருந்து பிறந்து, பிறந்து இறந்து வருகின்றான் என்றால் அதுவும் அனாதி. அதாவது அது போன்ற காலத்தையும் நாம் கூற முடியாது.

காரணம் காலச் சக்கரம் பூலோகத்தில் மட்டுமே கணக்கிட முடியும்.

இவ்விதம் ஒவ்வொரு ஜீவனிடமும் இருந்து சேர்த்து வைத்துள்ள பாவ புண்ணியங்களை **"சஞ்சித கர்மம்"** என்று கூறுகின்றது.

சிதம் என்றால் சேகரிக்கப்பட்ட என்று பொருள். சஞ்சிதம் என்றால் நன்கு சேகரிக்கப்பட்ட என்று பொருள்.

அதாவது, நம் ஒவ்வொருவரிடமும் நன்கு சேகரிக்கப்பட்ட பாவ புண்ணியங்கள் நிறைந்துள்ளன. அதை சஞ்சித கர்மா என்று அழைக்கின்றோம்.

இனி நம்மிடம் கணக்கிட முடியாத பாவ - புண்ணியங்கள் இருக்க, அந்த எல்லா பாவ, புண்ணியங்களையும் இந்த ஒரே ஒரு மனித உடலில் தீர்த்துவிட முடியாது. அதாவது ஒரு சில பாவங்களை மிருக உடல் எடுத்தோ, பறவை உடல் எடுத்தோ, அல்லது புழு, பூச்சி உடல் எடுத்தோதான் தீர்க்க இயலும். சில புண்ணியங்களை மனித உடலிலோ அல்லது சரீரமற்ற தேவர்களாகவோ தீர்க்க முடியும்.

இவ்விதம் நாம் சேர்த்து வைத்துள்ள அனைத்து பாவ - புண்ணியங்களையும் ஒரே ஒரு உடலில் அனுபவித்து தீர்க்க இயலாது. ஆகவே நமக்கு உடல் எடுக்கும் பொழுது சஞ்சித கர்மத்திலிருந்து ஒரு சிறு பகுதி மட்டுமே அந்த உடலுக்கு கொடுக்கப்படுகின்றது. அதனுடைய விளைவுதான் இந்த சரீரம் ஆகும்.

இப்படி சஞ்சித கர்மாவிலிருந்து சிறு பகுதியை பெற்றுக் கொண்டு இந்த பூமிக்கு மனித சரீரத்தில் வந்துள்ள நாம் அதில் கொண்டு வந்துள்ள பாவ, புண்ணியங்களின் பலனுக்கு ஏற்ப சுக - துக்கங்களை அனுபவிக்கின்றோம். இப்படி கொண்டுவந்துள்ள இந்த

பாவ - புண்ணியங்கள் தீர்ந்த பிறகு அந்த ஜீவனுக்கு இனி அனுபவிக்க அந்த உடலில் வேலை இல்லை எனவே மரணம் வந்து விடுகின்றது என சாஸ்திரம் கூறுகின்றது.

இப்படி, இனி மீதமுள்ள சஞ்சித கர்மாவிலிருந்து இன்னும் கொஞ்சம் பாவ - புண்ணியங்களை எடுத்துக்கொண்டு வேறு ஒரு உடல் எடுத்து அதை அனுபவிக்க வேண்டியுள்ளது. இப்படி பிறந்து, இறந்து - பிறந்து, இறந்து இந்த சம்ஸார சக்கரத்தில் ஜீவன் தவிக்கின்றான் என்கின்றது சாஸ்திரம்.




இவ்வாறு சஞ்சித கர்மாவிலிருந்து கொண்டு வந்து அனுபவிக்கின்ற அந்த சிறு பகுதியைத்தான் **"ப்ராரப்த கர்மம்"** என்று சாஸ்திரம் அழைக்கின்றது.

அதாவது சஞ்சிதத்திலிருந்து வெளியான பாவ - புண்ணிய கூட்டமானது இந்த பிறவியில் உடலை எடுத்து

சுக - துக்கங்களை அனுபவிக்க கொடுக்கப்படுகின்ற சிறு பகுதியைத்தான் "ப்ராரப்த கர்ம" என்று கூறுகின்றோம்.

'**ஆரப்தம்**' என்றால் ஆரம்பித்து விட்டது. '**ப்ர**' என்றால் நன்கு என்று பொருள். ஆக '**ப்ராரப்தம்**' என்றால் நன்கு ஆரம்பிக்கப்பட்ட பாவ புண்ணியங்கள் என்று பொருள்.

இவ்வாறு மானிடப் பிறவி கிடைத்த அந்த ஜீவனானவன் சஞ்சிதத்திலிருந்து கொண்டு வந்த சிறு பகுதியான ப்ராரப்த கர்மா - வை அனுபவித்துக் கொண்டிருக்கும் பொழுதே மீண்டும் இந்த பிறவியில் தனது புதிய செயல்களினால் புதிய கர்மாக்களை சேகரிக்கின்றான். அவ்வாறு அவன் இந்தப் பிறவியில் தனது கர்மங்களினால் சம்பாதிக்கும் பாவ - புண்ணியங்களை சாஸ்திரம் **"ஆகாமிய கர்மம்"** என்று அழைக்கின்றது.

ஆகாமிய கர்மா என்றால் இந்தப் பிறவியில் புதியதாக சம்பாதித்துக் கொண்டிருக்கின்ற பாவ - புண்ணியங்கள் ஆகும்.

இவ்வாறு மூன்று கர்மங்களின் பலன்களையும் ஒவ்வொரு ஜீவனும் அனுபவித்து தீர்க்க வேண்டும் என்பது விதி.

இந்த மூன்று கர்மங்களையும் அறியாமையில் இருக்கின்ற ஜீவன் எப்படி அனுபவிக்கின்றது என்றும்,

அறிவை அடைந்த ஞானிக்கு இந்த கர்மங்கள் என்னவாகின்றது என்பதையும் இனி பார்ப்போம்.



அஞ்ஞானியாக இருப்பவன் சஞ்சிதத்திலிருந்து ஒரு சிறு பகுதியாக பாவ - புண்ணியங்களை எடுத்துக்கொண்டு மனித பிறவிக்கு வருகின்றான். அதாவது சஞ்சிதத்திலிருந்து 50% பாவம், 50% புண்ணியம் எடுத்துக்கொண்டு வந்தால் அவனுக்கு மனித சரீரம் கிடைக்கும்.

அதுபோலவே 50 சதவீத்திற்கு மேலே புண்ணியங்களை எடுத்துக் கொண்டால் அந்த ஜீவனுக்கு தேவனாக சொர்கத்தில் புண்ணியம் தீரும் வரை வாழமுடியும், பிறகு மீண்டும் வேறு சரீரத்திற்கு வர வேண்டும்.

50 சதவீதங்களுக்கு குறைவான புண்ணியங்களை எடுத்துக்கொள்ள வேண்டி வந்தால் அந்த ஜீவனுக்கு மிருகம், பறவை போன்ற ஜீவராசிகளாக இந்த பூ உலகத்தில் பிறக்க வேண்டியது வரும் எனவும், அதிக பாவங்கள் செய்து புண்ணியம் சேமிப்பில் இல்லாத ஜீவன்கள் பாதாள லோகத்தில் பாம்பாகவோ, புழு, பூச்சியாகவோ பிறக்க நேரிடுகின்றது எனவும் சாஸ்திரம் கூறுகின்றது.

மொத்தத்தில் ஏழு லோகங்களில் அவனவன் பாவ புண்ணியங்களின் சேமிப்பு எப்படி உள்ளதோ அதுபோல பிறவிகள் அந்தந்த லோகத்தில் பாம்பாகவோ, புழுவாகவோ, மிருகமாகவோ, மனிதனாகவோ, தேவனாகவோ பிறக்க வேண்டிவரும்.

குறிப்பு: -

(எந்த சரீரத்தில், எந்த லோகத்தில் பிறந்தாலும், முடிவில் முக்தி வேண்டும் என்றால் மனித சரீரத்தில் இந்த பூலோகத்தில் பிறந்து ஞானத்தை அடைந்தால் மட்டுமே சாத்தியம் என்பதை நினைவில் கொள்ளவும்.)

இவ்வாறு சஞ்சித கர்ம மூட்டையிலிருந்து சிறு பகுதி பாவ புண்ணியங்களை எடுத்துக்கொண்டு பூமிக்கு மனிதனாக வந்து பிறக்கின்ற ஜீவனானவன் கொண்டு வருகின்ற பாவ - புண்ணியங்களை **'பிராரப்த கர்மா'** என்று பார்த்தோம்.

அதுபோலவே, அந்த ஜீவனானவன் இந்த மனிதப்பிறவியில் புதிய பாவ புண்ணியங்களை சேகரித்துக்கொள்கின்றான் அதற்கு **'ஆகாமிய கர்மா'** எனவும் பார்த்தோம். பிறகு ப்ராரப்தம் முடிந்த உடன் இந்த பிறவியில் சேர்த்துக் கொண்ட ஆகாமிய கர்மம் **'சஞ்சித கர்மா'** - வாக மாற்றப்படுகின்றது.

இப்பொழுது ஒரு சதாரணமான அஞ்ஞானியானவன் ப்ராரப்தம் முடிந்தவுடன் இறந்து விடுகின்றான் என்றால் அவன் இதுவரை இந்தப் பிறவியில் செயல் செய்து சேகரித்த ஆகாமிய கர்மா - வானது சஞ்சிதத்தில் சென்று சேர்ந்து விட்டது. தற்பொழுது அந்த ஜீவனிடத்தில் சஞ்சித கர்மா கூடிவிட்டது.

சஞ்சிதத்திலிருந்து கொண்டு வந்த சிறு பகுதியான பாவ - புண்ணியங்களை ப்ராரப்த கர்மா - வாக கொண்டு வந்து தீர்க்கும் பொழுதே, புதியதாக வினை செய்து அந்த பாவ - புண்ணியங்களை ஆகாமிய கர்மா - வாக எடுத்துக்கொண்டு மேலும் சஞ்சித கர்மாவில் சேர்த்து விட்டான்.

இனி, சஞ்தத்திலிருந்து எப்படிப்பட்ட பாவ - புண்ணியம் வெளிப்படுமோ, அதற்கு ஏற்ப அவனுக்கு உடல் கிடைக்கின்றது. இறந்த உடனே அடுத்து மனித சரீரம் கிடைக்கும் என்ற உத்திரவாதம் இல்லை.

அவன் சேகரித்து வைத்துள்ள சஞ்சித கர்மாவில் வெளிப்படுகின்ற பாவ - புண்ணியங்களின்

சதவீதங்களைப் பொருத்தே அந்த ஜீவனுக்கு உடல் கிடைக்கும் என்பதுவும் சாஸ்திரம் விதித்த விதி.

இவ்விதம் ஜீவன் தன்னுடைய கர்மங்களின் வசத்தினால் மீண்டும் பிறந்து, மீண்டும் இறந்து இப்படியே சம்ஸார சாகரத்தில் முழ்கியபடியே இருக்கின்றான்.

அந்த சம்ஸாரக் கடலில் இருந்து கரை சேர வழி வகை தெரியாமல் தவிக்கின்றான்.

இதுவரை கூறியது அனைத்துமே ஒரு சராசரி மனித வாழ்வு வாழும் அஞ்ஞானிக்கு (ப்ரஹ்ம அறிவற்றவனுக்கு) என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

இனி, ஜீவன் முக்தனின் நிலை என்ன என்பதைக் காணலாம் …

அதாவது இந்த மூன்று கர்மங்களின் நிலை ஒரு ஞானிக்கு என்னவாகும்?

பிரஹ்ம ஞானத்தை அறிந்துக் கொண்டு, அதிலேயே நிலைப்பெற்று இருக்கின்ற ஞானிக்கு சஞ்சித கர்மமே இல்லாமல் கரைந்து விடுகின்றது.

மேலும் அவனுக்கு ஞானத்தை அடைந்த அடுத்த விநாடியிலிருந்தே ஆகாமிய கர்மமும் சேர்வதில்லை. ஆனால் அவன் இந்த மனித பிறவிக்கு வரும் பொழுது கொண்டு வந்துள்ள ப்ராரப்த கர்மா - வை அவன் அனுபவித்து முடித்து விட்டுத்தான் இந்த சரீரத்தை விட முடியும்.

அவனுக்கு ஒரே ஒரு கர்மம் ப்ராரப்தம் மட்டுமே எஞ்சியுள்ளது. அதன் நிலை என்னவென்றால், அந்த ஞானி ப்ராரப்தத்தை அனுபவித்து தீர்த்து விடுகின்றான்.

அதனால்தான் ஒருவனுக்கு 30 வயதில் ஞானம் வந்து விட்டால், அவனுக்கு ப்ராரப்தம் 70 வயது வரை இருக்க வேண்டியது நியதி என்றால், அவன் 70 வயது வரை இந்த பூ உலகில் வாழ்ந்து அவனது ப்ராரப்தத்தை கழிப்பான்.

ஒருக்கால், ஞானம் வந்தவுடன் ப்ராரப்த கர்மாவும் முடிவிற்கு வந்து விட்டால், அவன் ஞானம் அடைந்த மறு விநாடியே இறந்து விடுவான்.

அப்படி நடந்தால் யாராக இருந்தாலும் ஞானம் அடையவே தயங்குவார்கள் அல்லவா?

அதாவது ஞானம் அடைந்தவனுக்கு எல்லா கர்மங்களும் போய்விடும் என்றால் ப்ராரப்தமும் போய்விடும் என்று தவறாக எடுத்துக்கொள்ளக் கூடாது.

ஞானம் அடைந்த பிறகும் ப்ராரப்தம் தொடர்கின்றது என்பதை நினைவில் கொள்ளவும்.

உதாரணமாக, ஞானத்தை அடைந்த மஹா ஞானிகளான ஸ்ரீஇரமணர், ராமகிருஷ்ண பரமஹம்சர் போன்றவர்களுக்கு அவர்களது முன் வினைப் பயனாக அவர்கள் இந்த பிறவிக்கு கொண்டு வந்து அனுபவித்த ப்ராரப்தம் அவர்களுக்கும் கேன்ஸர் போன்ற கொடிய நோயைக் கொடுத்தது என்பதை இவ்விடத்தில் புரிந்து கொள்ள வேண்டும்.

ஞானத்தின் விளைவு அந்த ஞானிக்கு **"சஞ்சித கர்ம"** மற்றும் **"ஆகாமிய கர்ம"** என்ற இரண்டு கர்மங்களும் நாசம் அடைகின்றது.

ஆனால், **"ப்ராரப்த கர்ம"** என்ற ஒன்று மட்டும் அந்த ஞானிக்கும் அழிவதில்லை என்பதை உணரவேண்டும்.

நாம் இதுவரை **"ஞானம்", "ஞானம்"** என்று பார்த்தோமே, அந்த ஞானம் என்னவென்றால்,

அது **"அஹம் ப்ரஹ்மாஸ்மி"** என்ற நான் பிரஹ்ம ஸ்வரூபமாகவே இருக்கின்றேன் என்ற தன் நிலை அறிந்து, அந்த நிலையில் நிலைபெற்று அவன் ஜீவன் முக்தனாகவே இனி வாழ்ந்து, இந்த சரீரத்தை விடும் பொழுது எவன் விதேக முக்தியை அடைகின்றானோ, அவனுக்கு மட்டுமே இந்த நூறு கோடி கல்பங்களாக, பல

பிறவிகளில் சேர்த்து வைக்கப்பட்ட ஸஞ்சித கர்மங்கள் **“நான் பிரஹ்மன்”** என்ற ஞானத்தினாலேயே நாசமடைகின்றன என்பதை அறிந்துகொள் என்று இந்த ஞானத்தின் மேன்மையை இங்கு கூறப்படுகின்றது.

**96. யத்க்ருதம் ஸ்வப்ன வேலாயாம் புண்யம் வா பாபமுல்பணம் |**
**ஸுப்தோத்திதஸ்ய கிம் தத் ஸ்யாத் ஸ்வர்க்காய நரகாய வா||**

**விளக்கம்**

கனவு காணும் வேலையில் எந்த ஒரு செயல் செய்யப்பட்டதோ, அது புண்ணியமாக இருக்கலாம், அல்லது பாவமாக இருக்கலாம், உறக்கத்துலிருந்து விழித்துக்கொண்டவனுக்கு அவனை சொர்கத்திற்கோ, நரகத்திற்கோ அவனை அழைத்துச் செல்லுமா?

இதற்கு ஒரு உதாரணத்தை ஆசிரியர் இங்கு கூறுகின்றார்.

அது எப்படி இவ்வளவு கல்ப காலங்களாக செய்த பாவ - புண்ணியங்கள் தீடீரென்று வருகின்ற இந்த ப்ரஹ்ம ஞானத்தினால் அழியமுடியும்?

என்று கேட்டால்,

அதற்கு ஏதாவது உதாரணம் இருந்தால்தானே புரிந்து கொள்ள முடியும் என்பதால் அதை உதாரணத்துடன் இங்கு கூறுகின்றார்.

ஒருவன் கனவில் எத்தனையோ செயல்கள் செய்கின்றான், கனவில்அவன் தானம் செய்கின்றான், அல்லது ஒரு கொலை செய்கின்றான். இப்படி இவன் பல செயல்களை செய்துவிட்டான்.

அப்படி அவன் செய்த பாவங்களுக்கு தண்டனை வாங்கப்போகும் நேரம், அல்லது அவன் செய்த புண்ணியங்களுக்கு பயனை வாங்கப்போகும் நேரம், அந்த சமயத்தில் அவனுக்கு திடீரென்று தூக்கத்திலிருந்து விழிப்பு வந்து விட்டது என்று வைத்துக் கொண்டால், உடனே அவன் கனவில் செய்த பாவங்களுக்கு விழித்தவனுக்கு தண்டனை கிடைக்குமா? என்றால் கிடைக்காது.

காரணம் விழித்துக் கொண்டவனுக்கு கனவில் செய்த நன்மை, தீமைக்கு தண்டனையோ, பயனோ கிடைக்காது.

இங்கு கனவை கண்டவன் வேறு, விழித்து எழுந்தவன் வேறு.

அதுபோல, அஹங்காரத்தைச் சார்ந்துதான் அனைத்து பாவ - புண்ணியங்களும் செயல்படுகின்றது.

அஹங்காரத்தையே நீக்கி விட்டால் அந்த கர்மங்கள் இருக்க இருப்பிடம் இல்லாமல் நீங்கிவிடுகின்றது.

மேலும், ஒரு உதாரணத்தில், ஒரு சிகப்பு வர்ணமுள்ள துணியில் அதன் சிகப்பு நிறத்தை மட்டும் தனியாக நீக்கி அந்த துணியை அந்த வர்ணத்திலிருந்து பிரிக்க முடியாது. ஆனால் அந்த துணியையே அழித்து விட்டால் அந்த வர்ணமும் இருந்த இடம் தெரியாமல் அழிந்து விடும்.

இதுதான் ஞானியின் விஷயத்தில் நடைபெறுகின்றது அவனது **"நான்"** என்ற அஹங்காரம் நீக்கப்படுகின்றது. அதனால் அவனது பாவ - புண்ணியமும் நீக்கப்படுகின்றது.

ஒருவன் கனவில் நான் என்ற நினைப்பில் அனைத்தையும் செய்கின்றான், அவனே விழித்தவுடன் அந்த செயல்கள் செய்தவனே அங்கு இல்லை.

ஆக, அவனுக்கு எப்படி பலனைக் கொடுப்பது. அதாவது எவன் செயல் செய்தானோ அவனுக்குத்தான் பாவ - புண்ணியம் எல்லாம், ஆனால் செயல் செய்தவனே அங்கு இல்லாமல் போனால் அப்புறம் எப்படி அவனுக்கு கர்ம பலன் இருக்கும்.

எனவே, அந்த கர்மங்கள் தானாகவே அழிந்து விடுகின்றன.

கர்மம் கர்த்தாவை சார்ந்திருக்கும், கர்த்தா அஹங்காரத்தை சார்ந்திருப்பான். இங்கு அஹங்காரம் நீங்கி விட்டால் பிறகு கர்த்தாவிற்கு கர்மம் ஏது?

ஆகவே, ஒரு அஞ்ஞானி ஞானம் அடைந்த மறு விநாடியே அவனது அஹங்காரம் மறைந்து விடுகின்றது. அந்த அஹங்காரத்தினை சார்ந்து இருந்த அந்த பாவ - புண்ணியங்கள் அடுத்த விநாடியே அதுவும் (கனவில் செய்த கர்மத்தைப்போல) இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுகின்றது. என்று ஆசிரியர் இங்கு விளக்குகின்றார்.

**97. உபாதி தாதாத்ம்ய விஹீன கேவல**
**ப்ரஹ்மாத்மனா ஏவாத்மனி திஷ்டதோ முனே: |**
**ப்ராரப்த ஸத்பாவகதா ந யுக்தா**
**ஸ்வப்னார்த்த ஸம்பந்தகதேவ ஜாக்ரத: ||**

**<u>விளக்கம்</u>**

ப்ராரப்த கர்மம் இருக்கின்றது என்று இவ்வளவு தூரம் பார்த்து விட்டு, உண்மையில் ஞானிக்கு ப்ராரப்த கர்மமும் கிடையாது, அதாவது ஞானிக்கு ப்ராரப்த கர்மம் இருக்கின்றது என்று கூறுவது கூட தவறுதான் என்று ஸ்ரீசங்கரர் இனி வலியுறுத்த உள்ளார்.

அதே ஸ்ரீசங்கரர் ப்ராரப்த கர்மா இல்லை என்றால் அந்த ஞானி எப்படி நடந்து கொண்டு இருக்கின்றான், எப்படி மூச்சு விட்டுக்கொண்டு இருக்கின்றான், எப்படி சரீரத்துடன் இருக்கின்றான் என்ற

சந்தேகத்தை உருவாக்கி, அறியாமையில் இருக்கின்றவர்களின் நோக்கில் வேண்டுமானால் ப்ராரப்த கர்மா இருக்கின்றது என்று கூறலாம்.

ஆனால், ஞானி தன்னுடைய பார்வையில் ப்ராரப்தமும் அவனுக்கு கிடையாது என்று இனி வரும் ஸ்லோகங்களின் வாயிலாக பதில் கூறப்போகின்றார்.

இந்த இடத்தில் ப்ராரப்தத்தை இரண்டு நோக்கில் பிரிக்கின்றார்.

ஞானிக்கு ப்ராரப்தம் இருக்கின்றது என்பது அறியாமையில் உள்ளவர்களின் நோக்கில், ஆனால், ஞானியின் பார்வையில் எனக்கு ப்ராரப்தமும் கிடையாது என்று கூறுகின்றான்.

இப்படிப்பட்ட அறிவை உடைய ஞானிக்கு ப்ராரப்தம் உள்ளது என்று கூறுவது எப்படி உள்ளது என்றால், கனவில் இருக்கின்ற பொருளோடு, விழித்துக்கொண்டவனுக்கு சம்பந்தம் இருக்கின்றது என்று கூறுவதற்கு சமம் என்று கூறுகின்றார்.

கனவில் ஒருவன் ஒருகோடி ரூபாய் சம்பாதித்து விட்டான், அவன் விழித்துக் கொண்டான். உடனே தன்னுடைய அருகில் இருப்பவனைப் பார்த்து, இப்பொழுதுதான் நான் கனவில் ஒரு கோடி ரூபாய் சம்பாதித்தேன் என்று கூறும் பொழுது, அவனை நீங்கள் இப்பொழுது கோடீஸ்வரன் ஆகி விட்டீர்கள் என்று

கூறினால் எப்படி இருக்குமோ, அதுபோல ஞானிக்கு ப்ராரப்த கர்மாவைப் பற்றிப் பேசுவது என்று கூறுகின்றார்.

இதிலிருந்து ஞானிக்கும் ப்ராரப்தம் இருக்கின்றது என்று கூறினால், அது கனவில் இருக்கின்ற பொருளோடு நம்மை சம்பந்தப் படுத்துவதற்கு சமம்.

ஆகவே ஞானிக்கு ப்ராரப்தம் இல்லை.

இந்த மூன்று உடல்கள் (ஸ்தூல, சூட்சும, காரண சரீரங்கள்) அனாத்மா என்பதனை அறியாமல், அந்த உடலையே தானாக பாவித்து இருக்காமல், ப்ரஹ்ம ஸ்வரூபமான ஆத்மாவாகவே நிலைபெற்று இருக்கின்ற முனிவனுக்கு ப்ராரப்தம் இருக்கின்றது என்கின்ற இந்த கதையெல்லாம் இங்கு பொருந்தாது.

விழித்துக் கொண்டு இருக்கின்ற மனிதனுக்கு கனவில் இருக்கின்ற பொருளோடு சம்பந்தம் இருக்கின்றது என்று கூறுவதைபோல இப்படிப்பட்ட ஞானிக்கு ப்ராரப்த கர்மா இருக்கின்றது என்று கூறுவதற்கு சமம் ஆகும்.

அடுத்து வருகின்ற ஸ்லோகங்களில் யுக்தி பூர்வமாக ஞானிக்கு ப்ராரப்தம் இல்லை என்பதை நிலை நாட்ட உள்ளார் இந்த நூலின் ஆசிரியர் ஸ்ரீசங்கரர்.

அதாவது இருக்கின்றதே இரண்டு தத்துவம்.

அதாவது ஒன்று ஆத்மா, மற்றொன்று அனாத்மா.

இதில் ஆத்மாவிற்கு ப்ராரப்த கர்மமா?

அல்லது

அனாத்மாவிற்கு ப்ராரப்த கர்மமா?

என்று கேள்வியைக் கேட்டு, ஆத்மாவிற்கு ப்ராரப்தம் கிடையாது.

அது ஏன்? என்று இனி பதில் கூற உள்ளார்.

ஆத்மா பிறப்பதில்லை, அவ்வாறு பிறக்காத ஒன்றிற்கு பிராரப்த கர்மா எப்படி வரும்?

அதாவது ப்ராரப்தம் என்று கூறினாலேயே அது பிறப்பினால் கொண்டு வருவதுதானே?

ஆகவே, ஆத்மா பிறப்பதில்லை என்று உநிஷத்துக்கள் கூறும் பொழுது, பிறவாத ஆத்மாவிற்கு ப்ராரப்த கர்மா எங்கிருந்து வரும் என்று கேட்டு விட்டு,

இனி அனாத்மாவான சரீரத்திற்கு (உடலுக்கு) ப்ராரப்தம் உள்ளதா? என்றால்,

இந்த சரீரம் என்பது ஜடம், அப்படிப் பார்த்தால் ஜடப் பொருட்களான கல், மண் போன்ற இவைகளுக்கு ப்ராரப்த கர்மா இருக்கின்றது என்று கூற முடியுமா?

என்று கேள்வியைக் கேட்டு நம்மை நன்கு சிந்திக்கத் தூண்டி, பொய்யான ஜடப்பொருளான சரீரத்திற்கு ப்ராரப்தம் கிடையாது என்று கூறி தன்னை ஆத்ம ஸ்வரூபமாகவே நினைத்துக்கொண்டு இருக்கின்ற ஞானிக்கு கர்மா எப்படி வரும்?

என்று இனி வரும் இரண்டு ஸ்லோகங்களில் ப்ராரப்தம் யாருக்கு?

ஆத்மாவிற்கா அல்லது அனாத்மாவிற்கா என்று கேட்டு உண்மையில் ப்ராரப்தம் எந்த அடிப்படையில் பேசப்படுகின்றது என்று விளக்கம் கொடுக்கவும் உள்ளார்.

**98. அஜோ நித்ய இதி ப்ருதே ச்ருதிரேஷா த்வமோகவாக் |**
**ததாத்மனா திஷ்டதோSஸ்ய குத: ப்ராரப்தகல்பனா ||**

**விளக்கம்**

ஆத்மாவிற்கு பிராரப்த கர்மா கிடையாது. வேதம் ஆத்மாவைப் பிறப்பற்றது, இறப்பற்றது, என்றும் நிலையானது என்பதை மிகத் தெளிவாக கூறுகின்றது. இந்த வேதம் கூறுவது உண்மையானதை மட்டுமே தவிற வீணான விஷயங்களை என்றுமே கூறாது.

ஆக, ஆத்மா பிறப்பற்றது, இறப்பற்றது, மற்றும் என்றும் நிலையானது சரி! இதற்கும் ஞானிக்கும் என்ன சம்பந்தம் என்றால்? இந்த ஆத்ம ஸ்வருபமாகவே ஞானி இருப்பதினால் இந்த ஞானிக்கு எங்கிருந்து பிராரப்த கர்மா இருக்கின்றது என்பதை எப்படி கற்பனை செய்ய முடியும்.

ஆக ஞானியும், ஆத்மாவும் ஒன்றென்றால் அதற்கு வேண்டுமானாலும் பிராரப்த கர்மா இல்லாமல் போகலாம். ஆனால் அனாத்மாவான உடலுக்கு பிராரப்த கர்மா இருக்கும் அல்லவா என்ற கேள்வி எழுந்தால், அப்படியல்ல இந்த ஞானியின் விஷயத்தில் அனாத்மாவிற்கும் பிராரப்தம் இல்லை என்பதை இனி விளக்க உள்ளார்.

99. சரீரஸ்யாபி ப்ராரப்த கல்பனா ப்ராந்திரேவ ஹி |
அத்யஸ்தஸ்ய குத: ஸத்வமஸத்வஸ்ய குதோ ஜனி: |
அஜாதஸ்ய குதோ நாச: ப்ராரப்த-மஸத: குத: ||

**<u>விளக்கம்</u>**

ஞானியின் அனாத்மாவான உடலுக்கும் பிராரப்தம் கூற முடியாது. அப்படி இருக்கின்றது என்றால் அது தவறு. எப்படியென்றால், ஏற்றி வைக்கப்பட்ட ஒன்றுக்கு இருப்பு இல்லை, எனவே இல்லாததற்கு எப்படி பிறப்பு, இறப்பு இருக்கும்?

உதாரணமாக, இருளில் கயிற்றினைப் பார்த்து பாம்பு என்று நினைத்துக் கொண்டு, இந்த பாம்புதான்

அன்றும் வந்தது, இது கட்டு விரியன் இரகத்தைச் சார்ந்தது என்று ஜாதகம் கூறுவது போல ஞானியின் உடலை உண்மை என்று நினைத்துக்கொண்டு அந்த உடலுக்கு பிராரப்த கர்மாவைப் பற்றி பேசிக்கொண்டு இருப்பது ஆகும் என்று ஸ்ரீசங்கரர் இங்கு விளக்கம் அளிக்கின்றார்.

கயிற்றின் மீது ஏற்றி வைக்கப்பட்ட பாம்பு எப்படி உண்மை இல்லையோ, அது போல ஞானியின் உடலும் ஆத்மாவின் மீது ஏற்றிவைக்கப்பட்டது. உண்மை அல்ல. பிறகு எப்படி அதற்கு கர்மா வரும் என்று இங்கு விளக்கம் அளிக்கின்றார்.

பிறக்காதது எப்படி அழியும்? கற்பனையில் பிறந்த பாம்பை போல, ஆத்மாவில் ஏற்றி வைக்கப்பட்ட உடல் உண்மை அல்ல. ஆகவே, இல்லாததற்கு ஏது பிராரப்தம் என்று விளக்கமளிக்கின்றார்.

ஆக, பிராரப்தமே இல்லாமல் ஞானி எப்படி நடமாடிக் கொண்டிருக்கின்றான் என்று மூடர்கள் கேள்வி கேட்டால், அவர்களுக்கும் பதில் கொடுப்பதற்காக சாஸ்திரமானது ஏதோ ஞானிக்கும் ப்ராரப்தம் இருக்கின்றது என்பது போல காட்டுகின்றது என்று இனி வரும் ஸ்லோகத்தில் விளக்க உள்ளார்.

இப்படி ஸ்ரீசங்கரர் ஞானிக்கு பிராரப்தமும் கிடையாது என்று கூறுவதை நாம் எப்படி பாவிப்பது என்பதை இனி பார்க்கலாம்.

அதாவது ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு தனிப்பட்ட சிறப்பு இயல்பு இருக்கும். அந்த சிறப்பு இயல்புதான் அந்த பொருளினுடைய தன்மையை அது நிர்ணயிக்கும்.

உதாரணமாக, பாம்பின் சிறப்பு இயல்பு அதனிடத்தில் இருக்கின்ற விஷம். ஆம்! அந்த விஷம் மட்டும் அதற்கு இல்லையென்றால் அது புழு - வுக்கு சமமாக மதிக்கப்படும்.

ஒருக்கால் பாம்பின் விஷத்தை எடுத்து விட்டால், அந்த பாம்பை பாம்பாக மதிக்காமல் அதை வைத்து வித்தை காட்டி மகிழ்வோம்.

அது போல, ஒவ்வொரு ஜீவராசிகளிடமும் இருக்கின்ற சிறப்பு இயல்பு சென்று விட்டால், அது இருந்தும் இல்லாததற்குச் சமம்.

இந்த கருத்தின் படி கர்மத்தின் சிறப்பு இயல்பு என்ன?

பொதுவாக கர்மம் என்ன செய்யும்?

கர்மமானது நம்மை பந்தப்படுத்தும் என்று சாஸ்திரம் கூறுகின்றது.

அதாவது, நம் வாழ்க்கையில் ஒவ்வொரு சூழ் நிலையும் நமக்கு விருப்பு, வெறுப்பு போன்றவற்றை

கொடுக்கும். நாம் அந்த சூழ் நிலையில் பாதிக்கப்பட்டு கொண்டிருக்கின்றோம்.

அதனால், சூழ் நிலையை அணுகாமல் விலகி ஓட முயல்கின்றோம். இது கர்மத்தின் சிறப்பு இயல்பு. ஆனால், ஞானி தன்னுடைய ஞானப் பலனினால் பொதுவாக விருப்பையும், வெறுப்பையும் கொடுக்கும் சூழ் நிலையை இந்த ஞானம் மாற்றவில்லை.

ஞானத்திற்குப் பிறகும் அந்த ஞானியைப் புகழ்பவர்கள் சிலர் இருப்பார்கள், அவனை இகழ்பவர்கள் சிலர் இருப்பார்கள். அவனை குறை கூற சிலரும், அவனை புகழ் பாட சிலரும் இருப்பார்கள்.

அதை இந்த ஞானி மாற்றவில்லை. பிறகு எந்த சூழ் நிலையிலும் இவனை பாதிக்காத மனம் இவனுக்கு வந்து விட்டது. இதுவே இவனுக்குள் வந்துள்ள பெரிய மாற்றம். இந்த மாற்றம் அவனுக்கு ஞானத்தினால் கிடைத்த பலன் ஆகும்.

கர்ம வினை சூழ் நிலையை கொடுத்தாலும், அந்த கர்மத்தின் முக்கிய பலன் ஞானியினிடம் செயல்படாது. ஒருவர் நம்மை கோபமாக ஏதாவது திட்டுகின்றார் என்று வைத்துக்கொள்ளுங்கள், அதைக்கேட்டும் நாம் ஒன்றும் கூறாமல் இருந்தால் நாம் ஆன்மாவை அறியும் ஆன்மீகத்தில் முழுமையான வெற்றியை அடைந்து விட்டோம் என்று பொருள்.

அப்படி ஞானியை பொருத்த மட்டும் அவனது பிராரப்தம் அனைத்து சங்கடங்களையும், சந்தோசங்களையும் கொடுத்துக் கொண்டுதான் இருக்கும். ஆனால், ஞானி அந்த சூழ் நிலைகளைப் பொருட்படுத்த மாட்டான். அவனைப் பொருத்தவரை எதுவும் எனக்கு இல்லை என்ற அந்த அறிவில் அவன் நின்று விடுகின்ற காரணத்தினால், அவனது பார்வையில் அவனுக்கு பிராரப்தம் என்பது இல்லை.

ஞானியினுடைய நோக்கில் அவனது கர்மம் சிறப்பு இயல்பை இழந்து விட்டது. அவனது ஞானம் அவனது கர்மத்தின் பலனை செயல்படாமல் செய்து விடும்.

**100. ஜ்ஞானேன அஜ்ஞான கார்யஸ்ய ஸமூலஸ்ய லயோ யதி |**
**திஷ்டத்யயம் கதம் தேஹ இதி சங்காவதோ ஜடான் |**
**ஸமாதாதும் பாஹ்ய த்ருஷ்ட்யா ப்ராரப்தம் வததி ச்ருதி: ||**

**விளக்கம்**

இதுவரை ஞானியானவன் ப்ராரப்தம் இருக்கும்வரை ஜீவன் முக்தனாக வாழ்கின்றான். பிறகு அவன் விதேக முக்தியை அடைகின்றான் என்று பார்த்தோம்.

ஆகவே, ஞானிக்கும் பிராரப்த கர்மா இருக்கின்றது. ஆகாமிய கர்மா, சஞ்சித கர்மா என்ற மற்ற கர்மங்கள் நாசத்தை அடைந்து விடுகின்றது என்ற பொதுவான ஒரு கருத்தை நாம் பார்த்தோம். பிறகு

ஸ்ரீசங்கரர் இந்த இடத்தில் ஞானிக்கு பிராரப்தமும் கிடையாது என்று இங்கு நிலை நாட்டுகின்றார்.

ஞானி தன்னுடைய அடிப்படையில் தன்னை அவன் பார்க்கும் பொழுது தான் பிராரப்தத்திலிருந்தும் விடுதலை அடைந்தவனாக தன்னை அவன் உணர்கின்றான் என்று கூறுகின்றார்.

அப்பொழுது ஒரு சந்தேகம் வரும், காரணம் என்பது நாசத்தை அடைந்து விட்ட பிறகு காரியம் என்பது எப்படி இருக்கும்? என்ற கேள்வி சமுதாயத்தில் இருக்கின்ற அறியாமை ஜனங்கள் கேட்கும் பொழுது, அவர்களுக்காக சாஸ்திரம் பிராரப்தம் இருக்கின்றது என்று வைத்துக்கொள்ளுங்கள் என்று கூறுகின்றது.

ஞானியினாவன் நான் பூர்ணமான பிரஹ்ம ஸ்வரூபம் என்ற ஞானத்தினால், அவனது அறியாமையும், அறியாமையின் விளைவும் நாசத்தை அடைந்து விடுகின்றது என்றால் இந்த உடலானது எப்படி அழியாமல் நிற்கின்றது?

(அதாவது, கர்மம்தான் இந்த உடலுக்கு காரணம், அப்படி இருக்க அனைத்து கர்மங்களும் இல்லாமல் போகின்ற அவனுக்கு அவனது உடல் மட்டும் எப்படி அழியாமல் இருக்கின்றது?)

என்ற சந்தேகத்துடன் கூடிய அறிவற்ற ஜனங்களை சமாதானப் படுத்துவதற்காக சுருதியானது

மற்ற வெளியுலக ஜனங்களின் பார்வையின் அடிப்படையில் பிராரப்தத்தை கூறுகின்றது. விவேகிகளுக்கு தேகம் முதலியவற்றின் உண்மையை போதிப்பதற்காக அன்று.

**101. வேதாந்த ஸித்தாந்த நிருக்திரேஷா**
**ப்ரஹ்மைவ ஜீவ: ஸகலம் ஜகச்ச |**
**அகண்ட ரூப ஸ்திதிரேவ மோஷோ**
**ப்ரஹ்மாத்விதீயே ச்ருதய: ப்ராமாணம் ||**

**விளக்கம்**

இங்கு உபநிஷத்தினுடைய சாரம் என்ன?
என்று கூறுகின்றார்.

உபநிஷத்தைப் பிழிந்தால் என்ன உண்மை நமக்கு கிடைக்கும்? என்றும் கூறுகின்றார்.

வேதத்தில் அடைந்துள்ள கடைசி பகுதிகளைத்தான் நாம் உபநிஷத்துக்கள் என்றும், வேதாந்தம் என்றும் அழைக்கின்றோம். அந்தம் என்றால் முடிவு ஸித்தாந்தம் என்றால் உப நிஷத்துக்களினால் நிச்சயிக்கப்பட்ட முடிவு என்று பொருள்.

ஜீவன், பிரஹ்மனாகவே இருக்கின்றான். சகலமும் பிரஹ்மம்தான் இதுதான் வேதாந்தத்தினுடைய, சித்தாந்தத்தினுடைய நிச்சயிக்கப்பட்ட சுருக்கமான சாரம் ஆகும்.

அதாவது இருக்கின்றது ஒரே ஒரு வஸ்துதான், அதுதான் பிரஹ்மம் மட்டுமே என்கின்றது இந்த வேதம்.

ஜகத்திலிருக்கின்ற இருப்பை எடுத்து பிரஹ்மத்திற்கு கொடுத்தால், அங்கு பிரஹ்மத்தை தவிர வேறொன்றும் இல்லை. ஆகவே, இந்த உலகமாக எது தெரிகின்றதோ, அங்கு இருக்கின்ற ஒவ்வொரு இருப்பும் பிரஹ்மனாகவே தெரிகின்றது.



ஆக உலகம் என்று கூறும் பொழுது நம்முடைய அனைத்து உடல்களும் உலகத்தோடு சேருகின்றது. ஆனால் நம்மிடத்தில் ஒன்று மீதி இருக்கின்றது. அதுதான் **அறிவு**.

அந்த அறிவினால் ஜீவனும், சைதன்யமும் ஒன்றுதான் என்பதை, ஜகத்திலிருக்கின்ற சத் ஸ்வரூபம் பிரஹ்மமாகவும், ஜீவனிடத்தில் இருக்கின்ற சித் ஸ்வரூபம் பிரஹ்மனாகவும் ஆகின்ற பொழுது, அங்கு சத், சித், ஆனந்தமான பிரஹ்மம் மட்டுமே சாத்தியம் ஆகும்.

அதுவே **“சத்சிதானந்தம்”** ஆகும்.

சரி அப்படியென்றால் மோட்சம் என்றால் என்ன?

என்ற கேள்வி வரும் பொழுது, **இந்த பிளவுபடாத அறிவோடு இருப்பதுதான் மோட்சம்** என்று இங்கு ஆசிரியர் கூறுகின்றார்.

பெரும்பான்மையான ஜனங்கள் ஈஸ்வரன் என்று ஒருவர் இருக்கின்றார். உலகம் என்று ஒன்று இருக்கின்றது. அதை அனுபவிக்கின்ற ஜீவர்கள் என்று பலர் இருக்கின்றோம். அந்த ஜீவர்களிடத்திலும் மனிதன், மிருகம், பறவை, செடி, மரம் என்று எத்தனை எத்தனை வேற்றுமைகளைப் பார்க்கின்றோம்.

இந்த வேற்றுமைகள் உண்மை, இருமைகள் சத்தியம் என்ற எண்ணத்துடன் நாம் இருக்கின்றோம். இந்த வேற்றுமைகளெல்லாம் வெறும் தோற்றம், இருப்பது பிளவுபடாத ஒரே ஒரு பிரஹ்ம தத்துவம் மட்டுமே இருக்கின்றது என்ற அறிவில் நிலை நிற்பது மட்டுமே **“மோட்சம்”** ஆகும்.

இப்படிப்பட்ட பிளவுபடாத பிரஹ்மத்தை நமக்கு காட்டிக்கொடுப்பது எது? என்றால், உப நிஷத்துக்களே பிரஹ்மன் இரண்டற்றதாக இருக்கின்றது என்ற ஞானத்தை கொடுக்கின்ற பிரமாணம் ஆகும்.

ஆக மோட்சத்தை காட்டிக்கொடுக்கின்ற கருவி இந்த உபநிஷத்துக்கள் ஆகும். என்று குருவானவர் தன்னுடைய உபதேசத்தினை இத்துடன் நிறைவு செய்கின்றார்.

இந்த விவேக சூடாமணி 580 ஸ்லோகங்களுடன் கூடியது. அதில் நாம் 101 ஸ்லோகங்களை மட்டுமே தேர்ந்தெடுத்து ஆத்ம ஞானத்தை அடைய வேண்டி இதுவரை பார்த்து வந்தோம். இந்த ஸ்லோகங்களின் வாயிலாகவே நமக்கு தேவையான அந்த **அறிவு (பிரஹ்ம ஞானம்)** கிடைத்திருக்கும் என்ற நம்பிக்கையில் யாம் விடைபெறுகின்றோம்.

**ஓம் தத் சத்!**

